## (1) எனது இந்தியா

சென்னையில் இருந்து வெளிவரும் விழிப்புணர்வு என்ற சிற்றிதழை புரட்டிக் கொண்டிருந்தேன். அட்டையும் சரி உள்ள பக்கங்களும் சரி பளபளவென உயர்தரக் காகிதத்தில் அச்சிடப்பட்ட மாத இதழ் இது. அதன் பக்கங்கள் பெரும்பாலும் யாரென தெரியாதவர்களால் எழுதப்பட்டிருந்தன. அனேகமாக ஒருவரே எழுதியிருப்பாரோ என்று எண்ணவைக்கும் நடை. ஆசிரியர் கு.காமராஜ். சென்னையிலிருந்து ஏதோ தன்னார்வ அமைப்பு வெளியிடுவது.

ஒவ்வொரு மாதமும் இப்படி இருபது சிற்றிதழ்கள் என் பார்வைக்கு வந்துவிடுகின்றன. இவற்றில் பாதிக்குமேல் தமிழகத்தில் உள்ள வெவ்வேறு தன்னார்வக்குழுக்களால் நடத்தப்படுபவை. சுற்றுசூழல் பாதுகாப்பு, சட்ட சீர்திருத்தம், நுகர்வோர் பாதுகாப்பு, மனித உரிமைகள் பாதுகாப்பு போன்றவற்றில் ஏதாவது ஒன்று இவற்றின் கருவாக இருக்கும். எல்லாவற்றையும் கலந்துகட்டி அடிக்கும் இதழ்களும் உண்டு.

ஆனால் இவை அனைத்துக்குமே பொதுவான ஒரு அம்சம் உண்டு. கண்மூடித்தனமான இந்திய எதிர்ப்பு. இந்த நாடு முழுக்க முழுக்க அநீதி மீது கட்டப்பட்டு ஒவ்வொரு நிமிடமும் அநீதியால் இயக்கப்படுவதென்பதில் இவர்களுக்கு ஐயமே இல்லை. இதன் போலீஸ், நீதிமன்றம், அரசாங்கம் , மதங்கள், பண்பாட்டு அமைப்புகள் அனைத்துமே முழுக்க முழுக்க அநீதியை மட்டுமே செய்துகொண்டிருப்பவை என இவை நேரடியாகவும் மறைமுகமாகவும் வாதிடுகின்றன. சிறுபான்மையினர், தலித்துக்கள், பழங்குடியினர் போன்றவர்கள் இந்த தேசத்துக்கு எதிராக கிளர்ந்தெழவேண்டுமென இவை அறைகூவுகின்றன. இந்த தேசத்தின் இறையாண்மை என்பது தான் இந்த நாட்டு மக்களின் உண்மையான முதல் எதிரி என இவை பிரச்சாரம் செய்கின்றன.

விழிப்புணர்வு இதழில் அட்டையிலேயே அருந்ததி ராய் எழுதிய புரட்சிக்கட்டுரை உள்ளது ‘காஷ்மீருக்கும் மக்களுக்கும் விடுதலை’. அமர்நாத் குகைக்கோயில் சார்ந்து எழுந்த கிளர்ச்சியை ஒட்டி காஷ்மீரில்

உருவான எதிர்க்கிளர்ச்சியை மாபெரும் மக்கள்புரட்சியாக நேரில் சென்று கண்டு ஆனந்த பரவசத்துடன் எழுதியிருக்கிறார் அருந்ததி ராய். அதை தமிழில் ஆதி என்பவர் மொழியாக்கம் செய்திருக்கிறார்.

'அவுட்லுக்' இதழில் வெளிவந்த அருந்ததி ராயின் 'புகழ்பெற்ற' கட்டுரையை வாசகர்கள் வாசித்திருக்கலாம். சுதந்திரம் கிடைத்த காலம் முதலே காஷ்மீர் மக்களின் குரலை ஒடுக்கவும் சிதைக்கவும் 'இந்திய ஏகாதிபத்தியம்' செய்த முயற்சியின் விளைவே காஷ்மீரின் சுதந்திரவேகம் என்று அருந்ததி வாதிடுகிறார்.ஆண்டுதோறும் பத்தாயிரக்கணக்கில் அப்பாவி மக்களின் படுகொலைகள் சித்திவரதைகள் கற்பழிப்புகள் அங்கே நிகழ்ந்து வருகின்றன என்று சொல்கிறார். தேசிய சுதந்திரத்துக்கான அந்த மக்கள் எழுச்சியை ஒருபோதும் ஓர் அடக்குமுறை அரசாங்கம் கட்டுப்படுத்தி விடமுடியாது என்றும் ஆகவே அவர்களுக்கு இந்திய அரசாங்கம் சுதந்திரம் கொடுத்துவிட வேண்டும் என்றும் வாதாடுகிறார்.

தன் கட்டுரையிலேயே அந்த மக்களின் கோஷங்களை கொடுக்கும் அருந்ததி அவர்களின் மனநிலையை தன்னை அறியாமலேயே காட்டிவிடுகிறார். 'பிச்சை எடுக்கிறது நிர்வாண இந்தியா. பாகிஸ்தானில் வாழ்க்கை சந்தோஷமானது'. காஷ்மீர் மக்கள் தேடுவது சுதந்திரத்தை அல்ல, பாகிஸ்தானோடு இணைவதை மட்டுமே என்பது வெளிப்படை. பாகிஸ்தானில் இன்றுள்ள மாகாணங்களின் நிலையை வைத்து நோக்கினால் இன்று காஷ்மீருக்கு இருக்கும் அடிப்படை உரிமைகள் கூட இல்லாத ஒரு சர்வாதிகார அமைப்பின் கீழே சென்றுவிடத்தான் அவர்கள் ஆசைப்படுகிறார்கள்.

அந்த ஆசையின் அடிப்படை மதவெறிமட்டுமே. அது முல்லாக்களால் திட்டமிடப்பட்டு படிப்படியாக அங்கே உருவாக்கப்பட்டது. அதற்கு பாகிஸ்தானின் உளவமைப்புகளின் வெளிப்படையான ஆதரவும் பின்பலமும் இன்றும் உள்ளது.  அந்த மண்ணின் மைந்தர்களான காஷ்மீரி பண்டிட்டுகளை கொன்று குவித்து அடித்து துரத்தியபின்னர்தான் அவர்களின் போராட்டம் ஆரம்பித்தது. காஷ்மீரிகள் தேடுவது எவ்வகையிலும் முற்போக்கான, மேலான ஒரு சமூக அமைப்பை அல்ல, மாறாக அவர்கள் தாலிபானிய அரசு ஒன்றை நாடுகிறார்கள். அவர்கள் இந்திய அரசை வெறுப்பது இது அடக்குமுறை அரசு என்பதனால் அல்ல, இது ஒரு தாலிபானிய இஸ்லாமிய அரசு அல்ல என்பதனாலேயே.

வங்கதேசத்தின் மிகமோசமான வறுமையில் இருந்து தப்பி லஞ்சம் கொடுத்து இந்திய நிலத்துக்குள் ஊடுருவிய வங்க அகதிகள் அவர்களுக்கு எதிராக போடோ மக்கள் கிளர்ந்தெழுந்த கணத்தில் தங்கள் காலனிகள் முழுக்க பாகிஸ்தானியக் கொடியை ஏற்றியதை நாம் இப்போது காண்கிறோம். இந்த நாடு முழுக்க குண்டுகள் வைத்துஅழிப்பதில் வங்கதேசத்து அகதிகளின் பங்கு மிகப்பெரியது என கண்டடையப்பட்டிருக்கிறது. வாழ்வு தந்த இந்த நாட்டின்மீது குறைந்தபட்ச விசுவாசமும் பிரியமும் கூட அவர்களிடம் இல்லை. ஏனென்றால் அவர்களின் மதம் அவர்களுக்கு அப்படிக் கற்பிக்கிறது.

காரணம் இஸ்லாம் என்பது அடிப்படையில் ஒரு தேசியகற்பிதம்– ஒரு மதமோ வாழ்க்கைமுறையோ மட்டும் அல்ல. அது பிற தேசிய கற்பிதங்களை ஏற்காது. அந்த தேசிய கற்பிதங்களுக்குள் தனித்தேசியமாக தன்னை உணர்ந்து அவற்றை உள்ளிருந்து பிளக்கவே முயலும். அது ஈழமானாலும் சரி இந்தியாவானாலும் சரி பிரிட்டனானாலும் சரி. இதுவே நிதரிசன உண்மை. எத்தனை தலைமுறைக்காலம் ஒரு நாட்டில் வாழ்ந்தாலும் சரி, அந்த நாட்டாலேயே மேன்மை பெற்றிருந்தாலும் சரி , அந்த நாட்டை மதநோக்கில் அழிக்க அவர்களுக்கு தயக்கம் இருக்காது என்பதைக் கண்டுகொண்டிருக்கிறது ஐரோப்பா.

இஸ்லாமில் உள்ள இந்த சுயதேசிய உருவாக்கத் தன்மையை ஒரு பழங்கால அம்சமாகக் கண்டு அதை நீக்கவும், தாங்கள் சிறுபான்மையினராக இருக்கும் நாடுகளிலாவது பிற தேசியங்களுடன் ஒத்துப்போகவும் அதற்குக் கற்பிப்பதே இன்று அவசியம். இஸ்லாமை ஒரு நெறியாக மட்டும், ஒரு ஆன்மீக அமைப்பாக மட்டும் முன்னிறுத்தும் மதச்சீர்திருத்தவாதிகள் இன்று தேவை. ஆனால் மேலும் மேலும் இஸ்லாமை அரசியல்படுத்தி உலகநாடுகளுக்குள் புதைக்கப்பட்ட கண்ணிவெடிகளாக இஸ்லாமியச் சமூகத்தை மாற்றுவதற்கு ஜமா அத் எ இஸ்லாமி போன்ற பலநூறு அமைப்புகள் அல்லும் பகலும் முயன்றுவருகின்றன. கருத்துச் சுதந்திரத்தின் பகுதியாக அதை இந்தியா போன்ற நாடுகள் அனுமதித்து வருகின்றன.

இஸ்லாம் எந்த பிற தேசத்துக்குள்ளும் அடங்காது என்ற அடிப்படை உண்மையில் இருந்து பிறக்கிறது காஷ்மீரின் யதார்த்தம். இன்றைய இஸ்லாமின் அடிப்படைக்கட்டமைப்புக்குள்ளேயே இந்த சிக்கல் இருக்கிறது. அதை தீர்த்துக்கொள்ளாதவரை இஸ்லாமியர்கள் அவர்கள் வாழும்

நாடுகளெங்கும் தீராத அதிருப்தியுடன், வன்மத்துடன், அந்த நாடுகளை அழித்து அதன் மீது தங்கள் இஸ்லாமிய நாடுகளை உருவாக்கும் கனவுகளுடன் மட்டுமே வாழ்வார்கள். ஆகவே அவர்கள் மீது பிற தேசங்களின் ஐயமும் நீடிக்கும். உழைத்து துன்புற்று வாழும் எளிய முஸ்லீம்களை நிம்மதியாக வாழ ஒருபோதும் இஸ்லாமிய அடிப்படைவாதிகளும் முல்லாக்களும் விடமாட்டார்கள். எளிய லௌகீக வாழ்க்கையின் துயர்களில் துணைவரும்படி இறைவனை தொழுவதற்காக ஒவ்வொரு முறைச் செல்லும்போதும் ஓர் இஸ்லாமிய நாட்டுக்காக போராளியாகும்படியான அறைகூவலை எதிர்கொள்கிறான் சாதாரண முஸ்லீம்.

இன்றைய உலகின் மையச்சிக்கல்களில் ஒன்று இது. சமரசம், விடிவெள்ளி போன்ற என்ற இஸ்லாமிய இதழ்களை நான் தவறாமல் படிக்கிறேன். பல்வேறு சொற்களில் அவை தங்கள் வாசகர்களான இஸ்லாமியர்களை நோக்கி இந்தியச் சமூக அமைப்பும் இந்திய அரசமைப்பும் இஸ்லாமுக்கும் இஸ்லாமியர்களுக்கும் எதிரானவை, அநீதியானவை என்று சொல்கின்றன. அதற்கு ஆதாரமாக அருந்ததி ராய் முதல் அ.மார்க்ஸ் வரையிலாலனவர்கள் எழுதும் சமநிலையற்ற கட்டுரைகளை மறுபுரசுரம் செய்கின்றன. அதற்குத் தீர்வாக ஒரு இஸ்லாமிய அரசு மட்டுமே இருக்க முடியும் என்று சொல்கின்றன. ஒரு தாலிபானிய அரசில்மட்டுமே இஸ்லாமியர் நிறைவுடன் வாழமுடியுமென கற்பிக்கின்றன. மிதமான மொழியில் எப்போதும் பேசும் சமரசம் இதழின் ஒவ்வொரு தலையங்கமும் இப்படித்தான் முடிகிறது.

எங்கெல்லாம் இஸ்லாமியர் பெரும்பான்மை பெறுகின்றனர்களோ அங்கெல்லாம் இந்த இஸ்லாமியதேசம் பற்றிய ரகசியக்கனவு அடுத்த கட்டத்துக்குச் சென்று வெளிப்படையாக முன்வைக்கப்படுகிறது. அப்பகுதி மக்களிடம் கேட்டால் இந்திய அரசு தங்களை ஒடுக்குகிறது, ஒரு தாலிபானிய அரசிலேயே தங்களுக்கு சுதந்திரமும் அமைதியும் கிடைக்கும் என்றே சொல்வார்கள். அருந்ததியின் வாதங்களை பின்பற்றினால் அப்பகுதிகள் அனைத்துமே 'விடுதலை' அளிக்கப்படவேண்டும். இந்தியதேசத்துக்குள் குறைந்தது இருபது தனி தாலிபானியதேசங்கள் அனுமதிக்கபப்டவேண்டும். இது இந்தியாவுக்கு மட்டுமா இல்லை சீனாவுக்கும் ருஷ்யாவுக்கும் இதையே இந்த முற்போக்காளர் பரிந்துரைசெய்கிறார்களா தெரியவில்லை.

இந்தியா தன் மூலதனத்தில் பெரும்பகுதியை செலவிட்டு போராடிக் கொண்டிருப்பது காஷ்மீரி மக்களின் சுதந்திரக்கனவுடன் அல்ல, பெரும் காழ்ப்புணர்வுடன், உச்சகட்டப் பிரச்சார வல்லமையுடன் பரப்பப்படும் இஸ்லாமிய உலகதேசியக் கனவுடன்தான். ருஷ்யா, சீனா உட்பட இஸ்லாமியக் குடிமக்களைக் கொண்ட எல்லா நாடுகளும் அந்த கனவுடன் போரிட்டுகொண்டுதான் இருக்கின்றன. காஷ்மீருக்குச் சுதந்திரம் கொடுத்தால் அந்தப் போர் முடிந்துவிடவும் முடியாது. இந்நூற்றாண்டின் பெரும் சவால் அது. அதைச் சந்தித்தேயாகவேண்டும். இதை எளிமையாக வரலாற்றைப் பார்க்கும் எவரும் புரிந்துகொள்ளலாம். அப்படியும் புரியாவிட்டால் தொடர்ந்து அருந்ததி ராயை மறுபிரசுரம் செய்துவரும் ஏதேனும் ஒரு இஸ்லாமிய அடிப்படைவாத இதழை எடுத்துப் புரட்டினால்போதும். இதில் ரகசியமேதும் இல்லை, வெளிப்படையான அறைகூவலையே காணலாம்.

அடிப்படையான வரலாற்றுணர்வோ சமநிலையோ இல்லாத அருந்ததி போன்ற குருவிமண்டைகள் ஊடகங்களில் இன்றுபெறும் அதீத முக்கியத்துவம் மிகமிக ஆச்சரியமானது. கலை இலக்கியம் பொருளியல் அரசியல் எதைப்பற்றியும் கருத்து சொல்லும் ஒரு அனைத்துத்தளமேதையாக அவரை ஆங்கில ஊடகங்கள் முன்னிறுத்துகின்றன. அதற்கு பதிலாக அவர் அளிப்பது அவர்கள் நாடும் பரபரப்பை. அதற்கும் மேலாக இவர்களுக்குப் பின்னால் இந்த தேசத்தை அழிக்க எண்ணும் சக்திகளின் நிதியுதவிகள் இருப்பதற்கான வாய்ப்புகள் உண்டு என்பதே என் எண்ணம். கருத்தரங்க அழைப்புகள், விருதுகள், தன்னார்வஅமைப்புகள் வடிவில் நேரடி நிதியுதவிகள் என இந்திய இதழாளர்களுக்கு வரும் லஞ்சங்களை இங்கே எவருமே கண்காணிப்பதில்லை. பெரும் தொழிலதிபர்களுக்குரிய இரவு வாழ்க்கை வாழ்பவர்கள் நம் இதழாளர்களில் பலர் என்பதைக் கண்டிருக்கிறேன். ஆனால் அவர்கள் இந்திய ஜனநாயகத்தின் புனிதப் பசுக்கள்.

அருந்ததியின் கட்டுரையின் மொழிபெயர்ப்பில் காஷ்மீரில் பாகிஸ்தானிய பிறைக்கொடி 'பட்டொளி வீசி' பறக்கிறது. ஆனால் ஜம்முவில் 'இந்துத்துவ வெறியர்கள்' கலவரம் செய்கிறார்கள். மகாராஜா ஹரிசிங் இந்தியாவுடன் சேர முடிவெடுத்ததை 'பித்தலாட்டம்' என்று குறிப்பிடுகிறது கட்டுரை. இதே இதழில் ச.பாலமுருகன் என்பவர் எழுதிய 'ஊடகங்களில் முஸ்லீம்கள்' என்ற

கட்டுரையில் இந்தியாவின் அனைத்து அமைப்புகளும் முஸ்லீம்களை தீவிரவாதிகள் என்று சொல்லி ஒழித்துக்கட்ட முயல்வதாக எழுதியிருக்கிறார். இந்தக்கட்டுரைகளை அடுத்தமாதமே இஸ்லாமிய அடிப்படைவாத இதழ்களில் மறுபிரசுரமாக நான் படிக்க நேரும்.

தமிழின் பிரபலமான சிற்றிதழ்கள் உயிர்மை,காலச்சுவடு,தீராநதி,புதியபார்வை அனைத்துமே இந்த நிலைபாட்டையே பலகாலமாக முன்வைத்திருக்கின்றன. இந்த நாட்டின்மீது சிறிய அளவிலான நம்பிக்கையை முன்வைத்து ஒரு வரியையேனும் இவை எழுதியதாக நான் வாசித்ததில்லை. மாறாக ஒட்டுமொத்தமாகவே அழிக்கப்படவேண்டிய தீமைகளாகவே இந்த நாட்டின் அரசியல், நீதி அமைப்பை அவை காட்டுகின்றன. இந்த மண்ணின் நெடிய பாரம்பரியம் முழுமையாகவே தீமையில் வேரூன்றியது என்றே அவை வலியுறுத்துகின்றன.

அருந்ததி ராயின் கட்டுரையைப்படித்தபோது முன்பு அப்சல் குருவின் தூக்குத்தண்டனை பற்றி நம் சிற்றிதழ்கள் எழுதிய கட்டுரை நினைவுக்கு வந்தது. இந்தியப்பாராளுமன்றத்தின் மீது தாக்குதல் தொடுத்தமைக்காக கைதுசெய்யப்பட்டவர் அப்சல் குரு. அவரது வழக்கு இந்திய நீதிமன்றத்தின் வழக்கமான அனைத்துச் சம்பிரதாயங்களுடனும் படிப்படியாக நடத்தப்பட்டு மீண்டும் மீண்டும் மேல் முறையீட்டுக்கு வாய்ப்பளிக்கப்பட்டு உச்சநீதிமன்றத்தால் உறுதிசெய்யப்பட்டது. அப்சல் குருவுக்கு ஆதரவாக கிளர்ந்தெழுந்த இந்திய இதழாளர்கள் ஒட்டுமொத்த இந்திய நீதியமைப்பே முழுமையாகவே அநீதியானது, மதவெறி கொண்டது என்றார்கள். அந்த விசாரணையின் எந்தப் படியிலும் அப்சல்குருவுக்கு எளிய முறையீட்டுக்குக்கூட வழி தரப்படவில்லை என்றார்கள்.

அந்த விசாரணை நடக்கும் காலம் முழுக்க இந்த தரப்பு சொல்லப்படவில்லை. ஏனென்றால் அரிதிலும் அரிதான வழக்குகளிலேயே இந்திய உச்ச நீதிமன்றம் தண்டனை வழங்கும் என்றும், அனேகமாக அப்சல்குரு சிறிய தண்டனையுடன் தப்பிவிடுவார் என்றும் இவர்கள் எதிர்பார்த்தார்கள். அதாவது கிலானி போல இவரும் விடுதலைசெய்யப்படுவார் என. கிலானியை உச்சநீதிமன்றம் விடுதலைசெய்தபோது அதை இவர்கள் இந்திய நீதிமன்றத்தின் சமநிலைக்கான ஆதாரம் என்று சொல்லவில்லை, அதை தங்கள் வெற்றியாகவே முன்வைத்தார்கள். கிலானி இந்தியா முழுக்க ஒரு

பெரும் கதாநாயகனாக இன்று பவனி வருகிறார். இந்திய எதிர்ப்புப் பேட்டிகள் கொடுக்கிறார்.

தூக்குத்தண்டனை விதிக்கப்பட்ட அப்சல் குருவை சிறைக்குள் சென்று பேட்டி எடுக்கிறார் இந்திய இதழாளர். தண்டனைபெற்றவர் தனக்கு தன் சமூகத்தில் உள்ள தியாகிப்பட்டத்தை இழக்க விரும்பாமல் தான் குற்றம் செய்யவில்லை என்றுகூட திட்டவட்டமாகச் சொல்ல மறுக்கிறார். அல்லாவின் முன் தான் தவறுசெய்யவில்லை என்றே சொல்கிறார். இந்திய அரசையும் நீதியமைப்¨பையும் இந்து முத்திரை குத்தி, தனக்கு அளிக்கப்பட்ட தண்டனை ஒரு மத தண்டனை என்று சொல்ல முயல்கிறார். தன்னை ஒரு மதத்தியாகியாக காட்டிக் கொள்கிறார்.

அந்தப்பேட்டி இந்திய மொழிகள் அனைத்திலும் பிரசுரமாகிறது. தண்டனைபெற்றவரின் மனைவி இந்தியாவின் உச்ச அதிகார அமைப்புகளை நேரடியாகச் சென்று சந்தித்து கிட்டத்தட்ட மிரட்டும் குரலில் தண்டனை குறைப்பு கேட்கிறார். அதற்கு உச்சகட்ட ஊடக விளம்பரம் கிடைக்கிறது காஷ்மீரிலும் பிற பகுதிகளிலும் உள்ள இஸ்லாமியர்கள் நடுவே ஒரு நிரபராதி மத வெறுப்பால் அநியாயமாகக் கொலைசெய்யபடவிருக்கிறார் என்ற செய்தி பரப்ப்பபடுகிறது. போராட்டங்கள் நிகழ்கின்றன. அதை இந்த அரசமைப்பு கருத்துச் சுதந்திரத்தின் பெயரால் அனுமதிக்கிறது. அஞ்சி தண்டனையை முடிவிலாது ஒத்திப்போடுகிறது. ஆனால் ஒட்டுமொத்த இந்திய அமைப்பே இஸ்லாமியரின் குரல்களை அமுக்குகிறது என்கிறார்கள் அதே இதழாளர்கள் மீண்டும்.

தமிழில் 'உயிர்மை' இதழ் அப்சல்குருவின் பேட்டியை மொழியாக்கம் செய்து ஒரு மாபெரும் புரட்சியாளரின் படிமத்தை அளித்து வெளியிட்டது. காலச்சுவடு பாராளுமன்றத் தாக்குதலே இந்திய ராணுவத்தால் இஸ்லாமியரை தவறாகச் சித்தரிக்கும்பொருட்டு நிகழ்த்தப்பட்டது என்று ஆராய்ச்சிக் கட்டுரைகளை வெளியிட்டது. எஸ்.வி.ராஜதுரை அப்சல் குரு பெரும் நீதிமான், புரட்சியாளர் என்று எழுதினார். புதியகாற்று இதழில் அ.மார்க்ஸ் கொந்தளித்தார். அந்த அனைத்து எழுத்துக்களும் தமிழின் வெளிவரும் முப்பதுக்கும் மேற்பட்ட இஸ்லாமிய அடிப்படைவாத இதழ்களில் மீண்டும் மீண்டும் பிரசுரமாயின. இஸ்லாமியர்களில் பெரும்பாலானவர்கள் இவ்விதழ்களை மட்டுமே படிப்பவர்கள்.

ஆச்சரியமாக இருக்கிறது, இத்தனை வெறியூட்டல்களுக்குப் பின்னும் இங்குள்ள சராசரி இஸ்லாமியர் தங்கள் அன்றாடத்தொழில்களைச் செய்தும் பிற சமூகத்தவரிடம் வணிகத்தில் ஈடுபட்டும் ஒரு சமூக வாழ்க்கையை கடைப்பிடிப்பது. இந்திய சமூகம் இன்று அளிக்கும் வாய்ப்புகள் மூலம் மக்களில் பெரும்பகுதியினர் மெல்லமெல்ல நடுத்தரவற்கமாக உருவாகி வருகிறார்கள். இந்தியாவெங்கும் இந்த வளர்ச்சிப்போக்கைக் காணமுடிகிறது. இது ஒன்றுதான் இந்த வெறியூட்டல்களுக்கு எதிரான ஒரே சக்தியாக இருக்கிறது. லௌகீகக் கனவுகளால் மட்டுமே மக்கள் மதவெறியூட்டல்களை தாண்டிச்செல்கிறார்கள்.

இந்த இந்தியவெறுப்பு இன்று இங்கே ஒரு 'அரசியல்சரி' யாகவே நிலைநாட்டப்பட்டுவிட்டிருக்கிறது. ஒருவன் எளிய முறையில் 'என் மூதாதையர் மரபின் மீது எனக்கு பிடிப்பு உண்டு' என்று சொன்னால்கூட அவன் பிற்போக்காளனாக, பழமைவாதியாக, மத அடிப்படைவாதியாக முத்திரை குத்தப்பட்டுவிடுவான். அந்த முத்திரையை அஞ்சி தன் நம்பிக்கையையும் நிலைபாட்டையும் வெளிப்படுத்தத் தயங்குபவர்களாக எழுத்தாளர்கள் உருமாறிவிட்டிருக்கிறார்கள்.

ஒருதேசத்தின் அறிவுஜீவிகளில் மிகப்பெரும்பான்மையினர் அந்த தேசத்தின் மீது ஆழமான வெறுப்பை உருவாக்கிக் கொண்டிருக்கும் இன்றைய நிலை வேறு எங்காவது உள்ளதா? ஒரு தேசத்தின் அறிவுஜீவிகளில் பெரும்பான்மை அந்த தேசத்தின் பாரம்பரியத்தை அழிக்க எண்ணுவதும் ,அதுவே முற்போக்கு என்று அங்கே நம்புவதும் வேறு எந்த தேசத்திலாவது உள்ளதா? அப்படி நம்பாத அறிவுஜீவிகள் முத்திரைகுத்தப்பட்டு வேட்டையாடப்படும் சூழல் எங்காவது உள்ளதா?

ஆம், இந்த தேசத்தில் அநீதி உள்ளது. இங்கே ஒடுக்குமுறையும் சுரண்டலும் உள்ளது. இங்கே சமத்துவம் இன்னும் நிறுவப்படவில்லை. இங்கே இன்னும் சமூக வன்முறை நிலவுகிறது. இங்குள்ள பாரம்பரியத்தின் அழுக்குச்சுமைகள் இன்றைய வாழ்க்கையின் மீது சுமத்தப்பட்டுள்ளன என்பதை எவரும் மறுக்க முடியாது. இந்த நாடு ஊழலில், பொறுப்பின்மையில் சிக்கி மெல்ல ஊர்ந்துகொண்டுதான் இருக்கிறது.

ஆனால் இந்த நாட்டை விட மேலானதாக நீங்கள் சொல்லும் நாடு எது நண்பர்களே? பாகிஸ்தானா? தாலிபானின் ஆப்கானிஸ்தானா? சீனாவா? இதை அழித்து நீங்கள் உருவாக்க எண்ணும் நாடு எதைப்போன்றது?

இந்த நாடு இன்னும் ஜனநாயகத்தில் வேரூன்றியதாகவே உள்ளது என்றே நான் எண்ணுகிறேன். இங்கே இன்னமும் கருத்துக்களின் குரல்வளை நெரிக்கப்படவில்லை. இங்கே இன்னமும் சிந்தனைக்கு உரிமை இருக்கிறது. இது இன்னும் அடிப்படையான நீதியில் வேரூன்றியதாகவே உள்ளது. அந்த நீதி இந்நாட்டு எளிய மக்களின் நீதியுணர்வின்மீது நிலைநாட்டப்பட்டுள்ளது. இந்த நாடு இதன் பல்லாயிரம் சிக்கல்களுடன் மெல்லமெல்ல வறுமையிலிருந்து மேலெழுந்து வளர்ச்சிப்பாதையில் சென்று கொண்டுதான் இருக்கிறது. ஒவ்வொரு வருடமும் இங்கே கோடிக்கணக்காகனவர்கள் தங்கள் முந்தைய வாழ்க்கையில் இருந்து மேலெழுந்துகொண்டுதான் இருக்கிறார்கள்.

இந்த நாடு  மானுட சமத்துவத்துக்கான வாய்ப்புகளை இன்னமும் முன் வைத்துக்கொண்டுதான் இருக்கிறது. அதற்கான எல்லா போராட்டங்களுக்கும் இங்கே இடமிருக்கிறது. ஒடுக்குமுறைக்கும் சமத்துவத்துக்கும் ஊழலுக்கும் சுரண்டலுக்கும் எதிராக இங்கே இன்னமும் ஒன்றுதிரண்டு சமராட வாய்ப்பிருக்கிறது. இந்த தேசத்தில் தன் உரிமைக்காக கிளர்ந்தெழும் ஒரு குரல் கூட முற்றிலும் உதாசீனம் செய்யப்படுவதில்லை. இங்கே  ஒருங்கிணைந்து எழுந்த உரிமைக் கோரிக்கைகள் அனைத்தும் சற்றுப்பிந்தியேனும் எவ்விதத்திலேனும் நிறைவேறியுள்ளன என்பதை ஐம்பதாண்டுகால இந்திய வாழ்க்கையைக் கூர்ந்து கவனிப்போர் அறியலாம். இப்போது அரவானிகள் பெற்றுவரும் சட்ட அங்கீகாரத்தை மட்டும் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

காரணம் இது ஜனநாயகம். ஜனநாயகம் நிதானமானது. ஒவ்வொருவரின் நலனும் பிறர் நலனுடன் மோதுவது என்பதனால் ஒரு சிறு விஷயம்கூட ஒரு முரணியக்கத்தின் இறுதியில் ஒரு சமரசப்புள்ளியில் மட்டுமே இங்கே நிகழ முடியும். எதுவும் எளிதில் நிகழாதென்பதனால் எதுவுமே நிகழவில்லை என்ற பிரமையை அளிப்பது ஜனநாயகம். ஆனால் ஜனநாயகம் என்ற செயல்பாடு உள்ளவரை மக்களின் எண்ணங்கள் சமூகத்தையும் அரசையும் மாற்றியே தீரும் என்பதற்கான சான்றும் இந்தியாவே.

ஆகவே இந்த தேசம் வாழ்க என்று நீங்கள் எண்ணும் ஒவ்வொரு எண்ணமும் இந்த தேசத்தை வாழவைக்கும். இந்த மக்கள் மீளவேண்டுமென நீங்கள் சொல்லும் ஒவ்வொரு சொல்லும் அவர்களுக்கு மீட்பாகும். இந்த நாடு

அழியவேண்டுமென நீங்கள் எண்ணினால் இந்தநாட்டை அழித்துக்கொண்டிருக்கிறீர்கள்.

இந்தியா அழியவேண்டும் என்று நான் நினைக்கவில்லை. ஆகவே நீங்கள் என்னை இந்துத்துவர் என்று சொல்லி வசைபாடக்கூடும். ஆனால் நான் இந்த தேசத்தின் ஜனநாயக அமைப்புகள் மேலும் வலிமை பெற வேண்டும் என்று எண்ணுகிறேன். இங்கே ஜனநாயக முறைப்படி உரிமை கோரி நிகழும் எல்லா போராட்டங்களும் இதன் மாபெரும் இயங்கியலின் பகுதிகளே என்று எண்ணுகிறேன். ஆகவே எல்லா ஜனநாயகப்போராட்ட அமைப்புகளும் மேலும் மேலும் வலுப்பெற வேண்டும் என்று எண்ணுகிறேன். இங்குள்ள எல்லா போராட்டங்களையும் நான் ஆதரிக்கிறேன்.

இந்த தேசம் ஒரு நவீன தேசியமாக நீடிக்கும் வரை இது மெல்ல மெல்ல வளர்ச்சிப்போக்கில்தான் செல்லும் என்று எண்ணுகிறேன். அப்படி உருவாகும் நிதானமான வளர்ச்சியே உண்மையான வளர்ச்சி என்று நான் நம்புகிறேன். இந்த நவீன தேசத்தில் எல்லா மதங்களும் ஒரு கருத்துத்தரப்பாக தீவிரமாக செயல்படவேண்டும் என்று விழைகிறேன். எனது இந்தியாவில் இந்துமரபும் பௌத்த சமண மரபுகளும் கிறித்தவ மரபும் இஸ்லாமிய மரபும் ஒவ்வொரு கணமும் உரையாடி தங்களை வளர்த்துக் கொண்டவாறிருக்கும். இந்த நாட்டில் இன்று ஆயிரம் பல்லாயிரம் சிக்கல்கள் இருக்கலாம், ஆனால் இதன் உறுதியான ஜனநாயகம் தன் குறைகளைக் களைந்து மெல்லமெல்ல மேலும் சிறந்த ஒரு சமூகத்தை சென்றடைய முடியும். உலகில் இந்த வாய்ப்புள்ள தேசங்கள் இன்று மிகமிகச் சிலவே உள்ளன.

நிதானமான திடமான வளர்ச்சி பெற்றுவரும் இந்த நாட்டுக்கு அண்டைநாட்டு எதிரிகள் அரசியல் விஷத்தை உள்ளே செலுத்திக் கொண்டே இருக்கிறார்கள். [இந்தியாவும் அதே விஷத்தை பிறநாடுகளுக்குச் செலுத்தியது என்பதை நான் மறுக்கவில்லை. இந்திராகாந்தி தொடங்கிவைத்த அந்தப்போக்கு அறமற்றது என்றே எண்ணுகிறேன்.] இந்தியாவில் இன்று உருவாகியிருக்கும் மாவோயிசக் குழுக்கள் போன்றவை பத்துசதவீத உண்மையான மக்கள் அதிருப்தியின் மீது தொண்ணூறு சதவீதம் சீன ஆயுத பணபலத்தால் கட்டி எழுப்பப்படுபவை. இங்குள்ள இஸ்லாமிய குழுக்கள் மதக்காழ்ப்பின்மீது பாகிஸ்தானிய ஆயுத பணபலத்தால் கட்டி எழுப்பப்படுபவை.

இந்த எளிய நேரடி உண்மையை மழுப்பவும் நியாயப்படுத்தவும் கூலிபெற்று கிளம்பியிருக்கும் ஒரு பெரும் குழுவால் கையகப்படுத்தப்பட்டுள்ளது இந்திய ஊடகத்துறை. தேசிய மைய ஊடகத்தளத்தில் உள்ள இந்த வலுவான தரப்பு மெல்ல மெல்ல சுயமாக சிந்தனை செய்தறியாத பிராந்திய மொழி ஊடகங்களையும் பாதிக்கிறது. எப்போதும்  இதை நாம் காணலாம். நமது சிற்றிதழ்களை ஆங்கில நாளிதழ்களின் ஞாயிறு இணைப்புகளே தீர்மானிக்கின்றன. ஒரு எழுத்தாளரைப்பற்றி ஆங்கிலநாளிதழ்களின் ஞாயிறு இணைப்பில் கட்டுரை வந்தால் அடுத்தமாதமே தமிழ் சிற்றிதழ்களிலும் கட்டுரைகள் காணப்படும்.

இத்தனைக்கும் அப்பால் மனசாட்சியை நம்பும் வாசகர் சிலர் இருக்கிறார்கள் என்பதே என் நம்பிக்கை. இந்த நாட்டைப்பற்றிய உண்மையான கவலை கொண்டவன், இந்தச் சமூகத்தின் உண்மைநிலையை தன்னைச் சுற்றிப் பார்த்தே தெரிந்துகொள்பவன். அவனிடம் பேச விரும்புகிறேன்.

தேசபக்தியே பாவமென்றாகிவிட்ட இச்சூழலில், முத்திரை குத்தப்பட்டு வசைபாடப்பட்டு, அவமதிக்கப்பட்டு, சிறுமைப்பட்டு நின்றபோதும் உரக்கச் சொல்வோம் நண்பர்களே .

'வெல்க பாரதம்!'

# (2) எனது இந்தியாவைப்பற்றி

அன்புள்ள ஜெயமோகன்

,உங்கள் எனது இந்தியா கட்டுரை படித்தேன்

. சில கேள்விகள் எழுகின்றன. இந்திய இறையாண்மையை மறுக்கிறார்கள் எனும் பெரும் குற்றச்சாட்டு ஒன்றை வைத்துள்ளீர்கள். ஆனால் அதற்கான முழுமையான சான்றுகளை குறிப்பிடத் தவறிவிட்டீர்கள் என்றே தோன்றுகிறது.//

ஆனால்இவைஅனைத்துக்குமேபொதுவானஒருஅம்சம்உண்டு. கண்மூடித்த னமானஇந்தியஎதிர்ப்பு. இந்தநாடுமுழுக்கமுழுக்கஅநீதிமீதுகட்டப்பட்டுஒவ் வொருநிமிடமும்அநீதியால்இயக்கப்படுவதென்பதில்இவர்களுக்குஐயமேஇ ல்லை. இதன்போலீஸ், நீதிமன்றம், அரசாங்கம் , மதங்கள், பண்பாட்டுஅமைப் புகள்அனைத்துமேமுழுக்கமுழுக்கஅநீதியைமட்டுமேசெய்துகொண்டிருப்ப வைஎனஇவைநேரடியாகவும்மறைமுகமாகவும்வாதிடுகின்றன. சிறுபான் மையினர், தலித்துக்கள், பழங்குடியினர்போன்றவர்கள்இந்ததேசத்துக்குஎதி ராககிளர்ந்தெழவேண்டுமெனஇவைஅறைகூவுகின்றன. இந்ததேசத்தின்இ றையாண்மைஎன்பதுதான்இந்தநாட்டுமக்களின்உண்மையானமுதல்எதிரி எனஇவைபிரச்சாரம்செய்கின்றன.//இந்தியாவில் இப்படி தன்னை கைவிடப்பட்டவர்களாக, ஒடுக்கப்பட்டவர்களாக எண்ணுகின்ற சமூகங்கள் இல்லை என்கிறீர்களா? அவர்களுக்காக எழும் குரல்கள் எல்லாமே இந்திய இறையாண்மையை எதிர்க்கின்றனவா? இறையாண்மையின் பலன் சட்டத்தின் ஆட்சி அல்லவா? அப்படி சட்டத்தின் ஆட்சி கலைந்த காலங்கள் இல்லையா? அவற்றை நீங்களே சுட்டிக்காட்டியுள்ளீர்களே.சிற்றிதழ்களை சமூகத்தின் விமர்சகனாக நான் காண்கிறேன்

. இந்தியாவை அதன் அரசியல் சமூக இயக்கத்தை விமர்சனம் செய்வது இந்திய இறையாண்மைக்கு எதிரானதா? இல்லை இதழாளர்கள் எல்லோருமே தீவிரவாத அறைகூவல் விட்டுக்கொண்டேயிருக்கிறார்களா? காஷ்மீரப் பிரச்சனைஇன்றுஉலகளாவி வளர்ந்திருக்கும்தீவிரவாதப்போக்குகளுக்குமிகவும்முந்தையதில்லையா?இ ன்னும் ஆதாரங்களுடன் மேற்கோள்களுடன் கட்டுரையை தந்திருக்கலாம்

எனத் தோன்றியது.ஜனநாயகம் நிதானமாக இருக்கவேண்டியதன் அவசியம் என்ன

? நாம் இந்தியா வெல்க என மந்திரம் சொல்லிக்கொண்டேயிருந்தால் அது வென்றும் வாழ்ந்தும் விடாதே. ஜனநாயகத்தை துரிதப்படுத்த சிந்தனையாளர்களின் சாடல்கள் தேவையே என நினைக்கிறேன். இந்த மக்களால் என்ன செய்துவிட இயலும் எனும் எண்ணம் கொண்ட ஜனநாயகம் சவாதிகாரத்தைவிட மோசமானது.மதத்தின் பேரிலும் மற்ற பிரிவினைகளினாலும் நாம் பெருமைப்பட்டுக்கொள்ளும் நம் முன்னோர்களின் தர்மங்கள் கூட கைவிட்ட பல சமூகங்கள் இந்த நாட்டில் தங்களின் இடங்களைத் தேடிக் கொண்டிருக்கின்றன

. அவர்களிடம் ஜெய் ஹிந்த் சொல்லச் சொல்வது நாகரீகமானதாகத் தெரியவில்லை. மதக் கும்பல்களின் தாக்குதலுக்குப் பயந்துகாட்டுக்குள் பதுங்கி வாழும் மக்களிடம் ஜெய்ஹிந்த் சொல்லச் சொல்வது சரியாகுமா? தன் நாட்டின் இராணுவமே தன் இளம் பெண்களின் கற்பை பறிக்கும்போது ஜெய்ஹிந்த் சொல்லிக் கொண்டிருக்க முடியுமா? பாதுகாப்பான உயரங்களில் வாழும் நம்மால் மட்டுமே அப்படிக் கூறிவிட முடியும் என்பதை உணர்ந்துகொண்டே சொல்கிறேன்

'இந்தியா வாழ்க!'
'இந்தியா வாழ்க!'

—

Regards,

Cyril Alex

http://www.cyrilalex.com

***

அன்புள்ள சிறில்

என் கட்டுரையின் இயல¨ப்பபற்றி முதலில் தெளிவுபடுத்துகிறேன். அது ஆராய்ச்சிக்கட்டுரை அல்ல. இப்படி அரசியல் சார்ந்த விஷயத்தில் தகவல்களை தொகுத்து ஆராய்ந்து ஒரு ஆராய்ச்சிக்கட்டுரை எழுதுவதற்கு எனக்கு அவகாசமோ மனமோ இல்லை. நான் அத்தகைய கட்டுரைகளை

நம்புவதும் இல்¨. நம் அச்சு ஊடகத்தில் அத்தகைய கட்டுரைகள்தான் நிரம்பிக் கிடக்கின்றன. நான் ஏராளமான மேற்கோள்களை காட்டி இக்கட்டுரையை ஒரு ஆய்வுக்கட்டுரையாக எழுதியிருந்தால்கூட அதற்கு அதேயளவுக்கு விரிவான மறுப்புக் கட்டுரையை எழுத ஒரு அரசியல் எழுத்தாளரால் முடியும். மேற்கோள்களை அவர் வேறு வகையில் வாசிக்கலாம், திரிக்கலாம். எதுவுமே சாத்தியம். அத்தகைய விவாதம் என்பது ஒரு தர்க்கப்பயிற்சி விளையாட்டு மட்டுமே.

என்னுடைய கட்டுரை உணர்வு சார்ந்தது. நான் அடைந்த மன எழுச்சியை மட்டுமே அதில் சொல்ல முயன்றிருக்கிறேன். ஓர் எழுத்தாளனாக, ஓர் இந்தியக்குடிமகனாக. இத்தகைய கட்டுரைகளுக்கு அதை வாசிப்பவர் எழுதியவரின் உணர்ச்சிகளை அடையாளம் கண்டுகொண்டால் மட்டுமே மதிப்பு. இல்லையேல் எந்த மதிப்பும் இல்லை. என் உணர்ச்சிகள் உண்மையானவை, நேர்மையானவை என்று உங்களுக்குத் தோன்றவில்லை என்றால் அக்கட்டுரையை நிராகரித்துவிட்டு செல்லலாம். அது வாசகனிடம் எதையும் விவாதித்து, ஆதாரம் காட்டி நிறுவ முற்படவில்லை.

நான் என் கட்டுரையில் எழுதிய விஷயங்களுக்குத் தேவையான தகவல்களை அந்தக் கட்டுரையிலேயே அளித்திருக்கிறேன். தமிழ்ச் சிற்றிதழ்களில்வெளிவந்த கட்டுரைகள், இஸ்லாமிய இதழ்களின் தலையங்கங்கள் முதலியவை. இக்கட்டுரைகளை அவை பயன்படுத்திக்கொள்ளும் விதம். ஒருவர் அந்த கட்டுரைகளை வாசித்து நான் சொல்லும் உணர்ச்சியை புரிந்துகொள்ள முடியும் என்று எண்ணுகிறேன். இவை எவையும் ரகசியமான, சிக்கலான தகவல்கள் அல்ல. பொதுவாக வாசகர்கள் அனைவருமே வாசித்திருக்கக் கூடிய விஷயங்கள் மட்டுமே. பெரும்பாலான கட்டுரைகள் இணையத்திலேயே கிடைக்கின்றன.

உங்கள் கடிதத்தில் நான் என் கட்டுரையில் சொல்லியிருக்கும் விஷயங்கள் மிகவும் விலகிப்போய் புரிந்துகொள்ளப்பட்டிருப்பதைக் காண்கிறேன். என் தரப்பை மட்டும் மீண்டும் தெளிவுபடுத்திக் கொள்ள விரும்புகிறேன்.

1. இந்தியாவின் அரசமைப்புக்கு எதிராக கருத்துச் சொல்வதை அல்லது போராடுவதை அல்லது இந்திய அமைப்பை ஒட்டுமொத்தமாக மாற்றுவது குறித்த கனவை நான் ஒருபோதும் நிராகரிப்பவனல்ல. அத்தகைய அனைத்துப் போராட்டங்களையும் நான் ஏற்கிறேன் என்றே என் கட்டுரையில் திட்டவட்டமாகச் சொல்கிறேன். சூழலியல் சார்ந்து அத்தகைய

பல கட்டுரைகளை நானே எழுதியிருக்கிறேன். சமூக வளர்ச்சியின் முரணியக்கத்தில் ஒவ்வொரு கருத்தியல்தரப்புக்கும் அதற்கான பங்களிப்பு உண்டு. சமூகஅமைப்பு மீதான எதிர்ப்பும், அரசு எதிர்ப்பும் எந்த ஒரு ஆக்கபூர்வமான சமூகத்திலும் இன்றியமையாதனவே ஆகும். அறிவுஜீவிகளோ சிற்றிதழ்களோ அரசாங்கத்தை விமரிசிக்கக் கூடாது என்று நான் சொல்வதாக நீங்கள் புரிந்துகொண்டிருப்பது சற்றே சோர்வளிக்கிறது.

ஒரு நாடு அல்லது சமூகம் கட்டப்பட்டிருக்கும் அறவியல் சமூகவியல் அடிப்படைகளை அதைவிட மேலான அறவியல்,சமூகவியல் அடிப்படைகளை முன்வைத்து சிந்தனையாளர்கள் மாற்றியமைக்க முயல்வது இன்றியமையாதது. எந்த ஒரு மேலான இலக்கியப்படைப்பும் அதையே செய்கிறது. ஆனால் இங்கே நடப்பது அது அல்ல. அறிவுஜீவிகள் எனப்படுபவர்கள் எந்தவிதமான அற அடிப்படையும் இல்லாமல் அழிவை மட்டுமே முன்வைக்கிறார்கள். வெளிப்படையான அறமின்மையை நியாயப்படுத்துகிறார்கள். அறிவுஜீவிகள் என தேசிய ஊடகங்களில் குரல்கொடுப்பவர்கலில் பெரும்பாலானவர்கள் கருத்துக்களின் அடிப்படை நேர்மையோ வரலாற்று நோக்கோ இல்லாத பரபரப்பு இதழாளர்கள். அவர்கள் உருவாக்கும் ஆபத்தைப்பற்றி மட்டுமே என் கட்டுரையில் குறிப்பிட்டிருந்தேன். இந்த அமைப்பை அழித்து அவர்கள் உருவாக்க எண்ணும் அமைப்பு எது என்ற கேள்வியே என் கட்டுரையில் உள்ளது.

இந்த அமைப்பு புனிதமானது முழுமையானது என்று நான் சொல்லமாட்டேன். ஆனால் இந்த அமைப்பு அளிக்கும் சாத்தியங்களை விட மேலான ஒன்றை இவர்களால் கற்பனை செய்ய முடியவில்லை என்றே சொல்கிறேன். இனவெறி, மதவெறி ·பாசிச அமைப்புகளைத்தான் மாற்றாக வைத்து இவர்கள் பேசுகிறார்கள் என்கிறேன். இவர்கள் சொல்லும் முற்போக்குவாதம் ஒவ்வொன்றும் இந்த தேசத்தை இருளுக்கு இட்டுச்செல்லும் மதவெறிக்கு நேரடியாகவே ஆயுதமாகிறது என்பதை என் கட்டுரையில் குறிப்பிடுகிறேன். மீண்டும் மீண்டும் அதை சிற்றிதழ்களில் நான் கண்டுகொண்டிருக்கிறேன்.

2. இந்தியாவின் இறையாண்மை சர்வ வல்லமை மிக்கதல்ல. இந்தியா போன்று பலநூறு சக்திகளால் ஊடுருவப்பட்டு பல்வேறு பண்பாட்டு , வரலாற்று காலகட்டங்களில் வாழ்ந்துகொண்டிருக்கும் ஒரு தேசத்தில் சட்டத்தின் ஆட்சி என்பது சாதாரண விஷயமும் அல்ல. ஆனால் மிக நிதானமாக மிகச்சிக்கலான ஒரு விதத்தில் அது இந்தியாவில் வலுப்பெற்று

வருகிறதென்றே நான் எண்ணுகிறேன். உதாரணம் நான் இருபது வருடம் முன்பு கண்ட ஆந்திராவுக்கும் இன்றைய ஆந்திராவுக்கும் உள்ள வேறுபாடு.

எந்த ஒரு அரசாங்கத்திற்கும் அடக்குமுறைக் குணம் என்ற ஒன்று உள்ளுறைந்து இருக்கும். முற்றிலும் அடக்குமுறை தன்மை இல்லாத அரசே இருக்கமுடியாது. அரசு என்பது அடக்குமுறையையும் சமரசத்தையும் மாறி மாறிச் செய்து கொண்டிருக்கும். அச்சமூகத்தில் இருக்கும் பல்வேறு அதிகார சக்திகள் நடுவே ஒரு நடுநிலைப்புள்ளியாக அரசு செயல்பட்டவாறிருக்கும். அரசு என்பதே அதுதான். ஆகவே ஒரு சமூகத்தில் அரசின் அடக்குமுறைக்கு எதிரான போராட்டம் நடப்பதும் இயல்பானதே. அதுவும் அச்சமூகத்தின் இயங்கியலின் ஒரு பகுதிதான். எந்த அரசுக்கும் இது பொருந்தும். இங்கே மீண்டும் மீண்டும் அத்தகைய நிகழ்ச்சிகள் நடக்கின்றன. மீண்டும் மீண்டும் நீதிக்கான சீற்றக்குரல்கள் எழவும்செய்கின்றன.

இந்தியா போன்ற முரண்பாடுகள் மிக்க ஒருநாட்டில் மக்களுக்குள் கலவரங்களும் பூசல்களும் நடப்பதையும் வரலாற்று ரீதியாகவே புரிந்துகொள்ள வேண்டும். பதினேழாம் நூற்றாண்டு ஐரோப்பாவின் அல்லது அமெரிக்காவின் சூழல் இங்கே இன்று உள்ளது. [ஐரோப்பா பிற நாடுகளை காலனியாதிக்கம் மூலம் சுரண்டி தன் முரண்பாடுகளை அதில் மூழ்கடித்தது] இங்கே நம் நாட்டில் நூற்றாண்டுக்கால தூக்கத்தில் இருந்து விழித்தெழும் பலநூறு சமூகங்கள் அதிகாரத்திலும் வளங்களிலும் தங்களுக்கான பங்கை கோருகின்றன. ஆகவே முரண்பாடுகளும் மனக்கசப்புகளும் எப்போதும் வெடிக்கக் காத்திருக்கின்றன. அவநம்பிக்கைகள் மிக எளிதில் உருவாகின்றன.

அத்தகைய ஒரு மோதல் உருவாகும்போது எல்லாச் சந்தர்ப்பத்திலும் இந்திய அரசு திகைத்துச் செயலற்று நிற்பதையே நாம் காண்கிறோம். அதிநவீன ஐரோப்பிய அரசுகளில்கூட மக்கள் கலவரங்களில் இறங்குகையில் அரசு எளிதில் அதைக் கட்டுப்படுத்த முடிவதில்லை. இன்னும் நவீனமயமாதல் நிகழாத நிர்வாக அமைப்பு கொண்ட இந்தியாவில் அது மேலும் சிரமமாக ஆகிறது. இங்குள்ள மாபெரும் மக்கள்தொகையுடன் ஒப்பிடும்போது இங்குள்ள காவல் அமைப்பு கேலிக்கூத்து என்று சொல்லுமளவுக்குச் சிறியது. இங்கு இன்னமும் மக்கள் பல்லாயிரமாண்டுக்காமாக கடைப்பிடித்துவரும் சுய நிர்வாக அமைப்புகளால்தான் ஒழுங்கு பேணப்படுகிறது. ஆனால்

அத்தனை சிக்கல்களையும் மீறி, பிந்தியானாலும் இங்கே சட்டம் அதன் பிடியை விட்டுவிடுவதில்லை என்றே நான் எண்ணுகிறேன்.

இப்படி பாதிக்கப்பட்டும் மக்கள் எல்லாம் இங்கே இந்திய அரசுக்கும் அமைப்புக்கும் எதிராக திரும்பிவிடுவதில்லை. அவர்கள் நீதி கேட்கிறார்கள் . போராடுகிறார்கள். அமைப்புகளை தங்களருகே கொண்டு வருகிறார்கள். அதற்கான பலநூறு வழிகளை இந்த அரசியல் அமைப்பும் சமூக அமைப்பும் முன்வைக்கத்தான் செய்கின்றன.

நான் கேட்பது எளிய வினா. இங்குள்ள அறிவுஜீவிகளில் பெரும்பான்மையினர் இத்தகைய ஒரு சூழலில் நீதிக்காகவும் புரிதலுக்காகவும் அமைதிக்காவும்தான் முயல்கிறார்களா? அவநம்பிக்கைகளை களைய முயல்கிறார்களா? குறைந்த பட்சம் தமிழ் சிற்றிடஹ்ழ்கள் இஸ்லாமியர்களின் அவநம்பிக்கையை வன்மத்தைக் களைய முயல்கின்றனவா? இல்லை என்பதையே நான் ஒவ்வொரு நாளும் கண்டுகொண்டிருக்கிறேன். முரண்பாடுகளை ஊதிவிடுகிறார்கள், ஐயங்களை பெருக்குகிறார்கள், கசப்¨ப்பம் கோபத்தையும் விரிவாக்குகிறார்கள். அனைத்துக்கும் காரணம் இந்த அமைப்பே என்று சுட்டிகாட்டுகிறார்கள். நதிநீர் தாவா, மத மோதல், போலீஸ் அத்துமீறல் அனைத்துக்கும் காரணம் இந்த அமைப்பு. இதற்கு எதிராக கிளர்ந்தெழவேண்டும் என்கிறார்கள்.

உதாரணம் சொல்கிறேன், பல்லாயிரம் பேருக்குச் சோறுபோடுவது நாமக்கல் கோழிபப்ண்னை உலகம். கடந்த ஐம்பதாண்டுக்காலத்தில் படிபப்டியாக ஊறி உருவான ஒன்று அது. ஓர் மத, இன, மொழி அதிருப்தியை தூண்டிவிட்டு நாமக்கல்லில் ஒரு பத்து வெடிகுண்டை வெடிக்கச்செய்ய நம் அறிவாளிகள் சிலரால் முடியும். அதன்பின் நாமக்கல் மீளவேண்டுமானால் பல ஆண்டுகள் பிடிக்கும். பல்லாயிரம் வயிறுகள் காயும். நம் அறிவுஜீவிகள், இதழ்கள் செய்துகொண்டிருப்பது இந்த வெறிகிளப்பும் வேலையை மட்டும்தானே? இதைத்தான் நான் கேட்கிறேன் . இந்த அமைப்பு அளிக்கும் அனைத்துச் சுதந்திரங்க¨ள்யும் பயன்படுத்தியே இதைச் செய்கிறார்கள். இது பொறுப்பின்மை மட்டுமல்ல இதைச்செய்பவர்கள் இதன்மூலம் பெரும் பொருளியல் லாபமும் பெறுகிறார்கள். இதன்மூலம் உருவாகும் அழிவுக்கு அவர்களே பொறுப்பு என்கிறேன்

அதைவிட, இந்த அமைப்பு அளிக்கும் வாய்ப்புகளில் நம்பிக்கை உண்டு என்று சொல்பவன் , இந்த மரபில் நம்பிக்கை கொண்டவன், இந்த நாடு சமரசமாக வாழமுடியும் முன்னேற முடியும் என்பவன் எப்படி இவர்களால் பிற்போக்குவாதி என்றும் மதவாதி என்றும் முத்திரையிடப்பட்டு பழிக்கப்பட்டவனாக, குரலற்றவனாக ஆனான் என்று நான் கேட்கிறேன். அந்த அரசியல் கெடுபிடி எந்த சக்தியால் உருவாக்கப்பட்டது என்று கேட்கிறேன். அந்த குரலுக்கே ஊடகங்களில் இடமில்லை என்று எப்படி ஆயிற்று? ஒரு சூழலின் அறிவுலகம் ஒட்டுமொத்தமாகவே எப்படி அவநம்பிக்கையின் நச்சாக ஆயிற்று?

3. காஷ்மீரப் பிரச்சினையின் வேர் நான் சொல்லிய இஸ்லாமிய உலக தேசியக் கனவுதான். இஸ்லாமை ஒரு மதமாக உருவகிக்காமல் அதை ஒரு தேசியக் கருத்தியலாக முன்வைக்கும் இஸ்லாமிய முல்லாக்களும் அரசியலாளர்களும்தான். அவர்கள்தான் தேசப்பிரிவினைக்குக் காரணம். அவர்களே காஷ்மீரிலும் ஆப்ரிக்கநாடுகளிலும் ருஷ்யாவிலும் எல்லாம் நிகழும் ஏராளமான ரத்தப் போராட்டங்களுக்குக் காரணம். இன்றைய தீவிரவாதப்பிரச்சினை எதுவும் இப்போது தோன்றியதல்ல, அனைத்துக்குமே நூறாண்டுகால வரலாறு உண்டு.

4. இந்த நாட்டின் 'கைவிடப்பட்ட' குடிமக்கள் இந்த நாட்டுக்கு எதிராக கிளர்ந்திருக்கிறார்கள என்ன? எந்த இடத்தில் நிகழ்ந்திருக்கிறது அது? அவர்கள் தங்கள் உரிமைக்காக போராடுகிறார்கள். அதுவே இயல்பானது. ஆனால் உங்களையும் என்னையும் விடவும் மிகமிக பாதுகாப்பான தந்த கோபுரத்தில் இருந்துகொண்டு நம் அறிவு ஜீவிகள் அவர்களுக்கு வெறியேற்றுகிறார்கள். அழிவை உருவாக்கும்படி ஆணையிடுகிறார்கள். அந்த அழிவு உருவான பின் இந்த அறிவுஜீவிகள் அந்த அழிவுக்கு அம்மக்களையே பொறுப்பும் ஆக்குவார்கள். அதுவல்லவா நடக்கிறது?

5. ஜனநாயகம் ஏன் மெல்ல நடக்க வேண்டும்? அது ஓடினால் நல்லதுதான். ஆனால் அது மெல்லத்தான் நடக்கிறது. வேறு வழி இல்லை. ஒற்றையின ஒற்றை மொழி ஒற்றை பண்பாடுகொண்ட சிறு சமூகங்களில் ஜனநாயகம் சற்றே வேகம் பிடிக்கக் கூடும். இந்தியா போல மிகமிகச் சிக்கலான முரண்பாடுகள் மிக்க சமூகத்தில் அது மிக மெல்லத்தான் செயல்பட முடியும். காரணம் ஒவ்வொருவருக்கும் இங்கே அவர்களுக்கான தேவை இருக்கிறது.

எவரையுமே உதாசீனப்படுத்தமுடியாது என்பதே நடைமுறை. இந்தியா போன்ற ஒரு நாட்டுக்கு ஜனநாயகம் மட்டுமே மீட்பாகும். மிகப் பொறுமையாக, மீண்டும் மீண்டும் உரையாடலில் ஈடுபட்டு, மீண்டும் மீண்டும் சமரசம் செய்துகொண்டு, மெல்லமெல்லத்தான் இந்த நாடு முன்னகர முடியும். அந்த இணக்கம் எப்போது சற்று பிழைக்கிறதோ அப்போதெல்லாம் அழிவுதான் உருவாகும். நமக்கு குரூரமான முன் அனுபவங்கள் உள்ளன

*

இந்த இந்தியப்பயணத்தில் நான் இந்தியா எங்கும் உருவாகி வரும் திடமான சீரான வளர்ச்சிப்போக்கைக் கண்டேன். குறிப்பாக தென்மாநிலங்கள் மிகவேகமான வளர்ச்சிப்போக்கில் இருக்கின்றன. கிராமங்கள் விழித்தெழுந்திருக்கின்றன. வறுமையின் சாயல் மறைந்திருக்கின்றது. காரணம் தென்மாநிலங்கள் தங்கள் சமூக முரண்பாடுகளை பெருமளவில் தீர்த்துக் கொண்டிருப்பதுதான் என்று தோன்றியது

அதற்கு மறுபக்கமாக ஒரு அச்சமும் மனதிலெழுந்தது. இந்த வளர்ச்சியை அன்னிய சக்திகள் கண்டிபாக விரும்பாது. அவை இதற்குள் விஷம் செலுத்தவே முயலும். இந்தியா மட்டுமே இன்று உள்நாட்டுக்கலகங்கள் கட்டுமீறாத நிலையில் வளர்ச்சி நோக்கிச் செல்லும் ஒரே ஆசிய நாடு. ஆகவேதான் மீண்டும் மீண்டும் பெங்களூர் குறிவைக்கப்படுகிறது. அத்தகைய ஒரு செயல்பாட்டுக்கு கருத்தியல் முட்டுக்கொடுக்க அவர்கள் அறிவுலகக் கூலிப்படைகளையும் நாடுவார்கள். அது நம்மிடையே மிக மலிவு.

மேலும் இந்த வளர்ச்சி அனைத்துச் சமூகப்பிரிவுகளையும் பேராசை கொள்ளச் செய்கிறதென்றும் தோன்றியது. தென்மாநிலங்களில் சிறிய நகரங்களில்கூட கட்டுமானப்பணிகள் உச்சவேகத்தில் நிகழ்வதைக் கண்டால் நிலமும் வளங்களும் கடுமையாக மோதலுக்குப்பின்னரே பகிரப்படும் என்று தோன்றியது. எல்லா நகரங்களிலும் தெரிந்த பஜ்ரங் தள்ளின் ஆவேசம் என்னை மிகவும் அச்சுறுத்தியது. இந்த நகர்ப்புற லும்பன் அமைப்பு இப்போது சிறுநகர்களிலும் ஊடுருவி இருக்கிறது. வருகாலத்தில் இந்தியாவின் நகர்ப்புற கலகங்களில் இது பெரும்பங்கு வகிக்கும்

'அடுத்த 25 வருடங்களில் இந்தியா ஒரு பொருளியல் வல்லமை ஆக மாறும் அல்லது உள்நாட்டுக்கலவரத்தால் அழியும்' என்று சொல்லிக் கொண்டேன்.

வீடுதிரும்பி வந்து கிடந்த நாற்பதுக்கும் மேற்பட்ட இதழ்களை வாசித்தபோது இரண்டாவது எண்ணமே வலுப்பட்டது. ஒரு உள்நாட்டுக்கலவரத்தை தூண்ட என்னென்ன செய்யமுடியுமோ அதையெல்லாம் செய்ய அறிவுஜீவிகள் முயல்வதையே நான் கண்டேன். எந்தவித பொறுப்பும் இல்லாத வெறியேற்றும் கருத்துக்கள். சமநிலையற்ற தர்க்கங்கள்

மதவெறியால் இந்த நாடு பெரும் ரத்தத்தைக் காணக்கூடுமென்ற அச்சம் என்னை வாட்டுகிறது. இந்துத்துவ அமைப்புகளைப்போலவே அதைத் தூண்டி விடும் அழிவுச் சக்திகளாகத்தான் நான அருந்ததி ராய் போன்றவர்களையும் காண்கிறேன் .என் கட்டுரை அந்த உணர்ச்சியின் வெளிப்பாடே

இத்தகைய ஒரு கட்டுரைக்குபின் அதை திரித்து ஒடித்து வளைத்து விளக்கி முத்திரையடித்து மீண்டும் மீண்டும் எழுதப்படும். அந்த இயந்திரம் வேலையை இதற்குள் ஆரம்பித்திருக்கும். என் பதில் மௌனம் மட்டுமே

மிக அபாயகரமான ஒரு விளிம்பில் நிற்கிறது தேசம். சமரசம், மீண்டும் மீண்டும் சமரசம், பொறுமை, நம்பிக்கை, உரையாடல் மூலமே இந்த காலகட்டத்தை நாம் தாண்டிச்செல்ல முடியும். அவ்வாறே ஆகுக.

## (3) எனது இந்தியா ஒரு கடிதம், விளக்கம்

“எனது இந்தியா” என்கிற தலைப்பில் துவங்கி, “வெல்க பாரதம்” என்று முடித்து தன்னுடைய தேசப் பற்றை வெளிப்படுத்தி இருந்தார் நமது அன்புக்குரிய எழுத்தாளர் ஜெயமோகன் அவர்கள். இந்தியா தேசியத்தின் மீதான ஆழ்ந்த அவரது ஈடுபாட்டை அவரது வலைப்பூவில் எழுதுவது பற்றியோ, இந்தியா என்கிற கூட்டு இன தேசியம் சமூக, பொருளாதார முன்நகர்வுகளில் செல்வது பற்றியோ நமக்கு அவருடன் மாற்றுக் கருத்து இல்லை.

கல்வி என்ற பெயரில் சில பல கணினிக் குறியீடுகளை கற்றுக் கொண்டதன் மூலமும், மிகப் பெரும் முதலீடு செய்து, ஏறத்தாழ விலை கொடுத்து வாங்கப்பட்ட கல்விப் பட்டங்களின் மூலமும் மட்டுமே நீங்கள் வளர்க்கும் இந்திய தேசியம் உள்ளடக்கிய விவசாயம் என்கிற இழிதொழில் செய்கிற, கட்டுமானப் பணிகளில் ஈடுபடும் உடல் உழைப்பை மூலதனமாகக் கொண்ட உழைக்கும் மக்களாகிய, இரண்டு வேலை உணவுக்கும் வழியற்ற எம் அதே இந்திய மக்களின் வளர்ச்சியில் இரட்டை வேடம் புனைவதில் தான் நாம் முரண்படுகிறோம். உலகில் இதுபோன்ற பொருளாதார, சமூக ஏற்றதாழ்வுகளால் அல்லாடும் மக்களின் வளர்ச்சி பற்றியும் நமக்கு மட்டுமல்ல, நேர்மையான எழுத்துக்களை, நடுவுநிலையோடு பதிவு செய்யும் யாருக்கும் இருக்கும், இருக்க வேண்டும்.

இருப்பினும் அவருடைய வாதங்களில் சில நமது கேள்விகளுக்கு உட்படுகின்றன....

தமிழ் இலக்கியச் சிற்றிதழ்கள் இந்திய இறையாண்மையை எதிர்க்கின்றனவா?

ஆம், மிகப் பெரும்பாலான சிற்றிதழ்கள் இந்திய இறையாண்மையை எதிர்க்கின்றன, நாமும் ஒப்புக் கொள்வோம், ஆனால், அதற்கான காரணிகளை நீங்கள் ஆய்வு செய்ய வேண்டும், நண்பர் ஜெயமோகன் அவர்களே, கிடைத்த நீதியை உரக்கச் சொல்லும், வெகு மக்கள் ஊடகங்களின் பக்கங்களில் கிடைக்காத நீதியை, முரசு கொட்டும் சமூக எதிர்வினைகள் தான் சிற்றிதழ் கட்டுரைகளும், நீங்கள் சொல்லும் இந்திய இறையாண்மை எதிர்ப்பும்.

தலித்தியக் குரல்களும், அவர்களுக்கான மறுக்கப்பட்ட நீதியையும் உங்களுக்குப் பட்டியல் போட்டுத் தர வேண்டுமென்றால், தொடர்ந்து இதுபோன்ற பல கட்டுரைகளை நான் எழுதிக் கொண்டே இருக்க வேண்டும், இருப்பினும், திண்ணியத்தில், மலம் தின்ன வைக்கப்பட்ட ஆதிக்க சாதி வெறியையும், இந்து (இந்திய) தேச நீதி அரசர்களால் பணத் தகராறாக புரிந்து கொள்ளப்படுகிற மன விகாரங்களில் இன்னுமும் வாழும் சாதீய வெறியை, வழங்கப்பட்ட நீதியின் தீராத வேதனைகளையும் தான் சிற்றிதழ்கள் உரக்கக் கூவுகின்றன.கயர்லாஞ்சிகளின் கொடுமைகளை, உத்தபுரங்களின் ஈனச் சுவர்களை, ஒரிஸ்ஸாவின் மரண ஓலங்களை, குஜராத்தின் இந்துத்துவா முகங்களின் கொடூரங்களை எழுத வக்கற்று, நீர்த்துப் போன வெகுமக்கள் ஊடக எழுத்தாளர்களை அவர்களின் கையாலாகாத் தனங்களைத் தான் நீங்கள் சுட்டிக் காட்டும் சிற்றிதழ்கள் செவ்வனே நிரப்புகின்றன. அவற்றை நீங்கள் இந்திய இறையாண்மைக்கு எதிரானதாக நீங்கள் நினைத்தால் அல்லது புரிந்து கொண்டால், உங்கள் புரிதலின் ஆழம் குறித்து நான் கவலை கொள்வதைத் தவிர வேறு வழியில்லை.

அருந்ததிராய் ஒரு குருவி மண்டைக்காரரா?

ஒரு எழுத்தாளர் என்று ஒப்புக் கொள்ளப்பட்ட உங்கள் சக துறை சார்ந்தவரின், கருத்துரைகளுக்கான உங்கள் தெளிவான விளக்கங்களைக் கொடுப்பதை விடுத்து அவரது மண்டை குருவியைப் போன்றதா அல்லது கண் மீனைப் போன்றதா என்கிற ஆய்வுகள் ஒரு முதிர்வு பெற்ற எழுத்தாளருக்கான அடையாளங்கள் என்று பொருள் கொள்வது மிகக் கடினம். எனவே அருந்ததி ராய் மீதான உங்கள் குற்றச் சாட்டுகள் அனைத்தும் அவரைப் போல நம்மால் புகழடைய முடியவில்லையே என்கிற உங்கள் இயலாமையாகக் கொள்ளலாம். உங்களால் இயலும் என்று நம்புங்கள், அதற்கான நகர்வுகளை நோக்கி உங்கள் எழுத்தை எடுத்துச் செல்லுங்கள், உங்களைத் தவிர்க்க இயலாது என்கிற நிலையை உங்கள் ஆனித் தரமான எழுத்துக்களால் உறுதி செய்து இந்தியாவின் மிகப் பெரும் அச்சு ஊடகங்கள் என்று நீங்கள் கருதுகின்ற

“இந்தியா டுடே” இல் உங்கள் எதிர் வினையை பதியுங்கள். வாழ்த்துக்கள்.

இஸ்லாம் ஒரு தேசியக் கற்ப்பிதமா?

இந்துமதம் என்பது எப்படி ஒரு தேசியக் கற்ப்பிதமோ அதைப் போலவே இஸ்லாமிய வழியும் ஒரு தேசியக் கற்ப்பிதம், இன்று இந்துத்துவா வெறியர்களின் முகங்களான ஆர்.எஸ்.எஸ், பஜ்ரங்க்தல், பாரதீய ஜனதா போன்றவை என்ன வழியை இந்துமதக் கூட்டத்திற்குக் கற்றுக் கொடுக்கிறதோ அதையே தான் இஸ்லாமிய தீவிரவாத அமைப்புகள் எதிர்வினை செய்கின்றன. உலகெங்கும் நடக்கும் தீவிரவாதங்கள் வெவ்வேறு அடக்குமுறைகளின் வடிவங்களாகவே இருக்கிறது அல்லது கருத்தியல் சார்ந்த நெருக்கடிக்கு ஆளான மக்கள் குழுவின் ஒரு குறிப்பிட்ட செயலுக்கான எதிர் வினையாகவே இருக்க முடியும்.

ஆதலால், இந்தியாவில் நடக்கும் தீவிரவாதங்களுக்கும், உலகின் பல்வேறு நாடுகளில் நடக்கும் தீவிரவாத நிகழ்வுகளுக்கும் நீங்கள் முடிச்சுப் போட நினைப்பது எவ்வளவு சரி என்பது எனக்கு இன்னும் விளங்கவில்லை, அல்லது அதற்கான முழுமையான ஆய்வறிக்கைகளை நான் படிக்க வேண்டும், நீங்கள் அவ்வாறு படித்து, உலகெங்கும் நடக்கும் பல்வேறு நாடுகளின் தீவிரவாதமும், இந்தியாவில் நடக்கும் தீவிரவாதமும் ஒரே காரணத்துக்காக நடக்கிறது என்கிற முடிவுக்கு வந்திருந்தால் ஒரு வேலை உங்கள் கருத்து சரியானதாக இருப்பதற்கு, இருப்பதாக நம்புவதற்கு உங்களுக்கு முழு உரிமை இருக்கிறது. வெகு மக்களை நம்ப வைப்பதில் இந்திய பார்ப்பனீய ஊடகங்கள் கண்ட வெற்றியை ஒரு தமிழ் எழுத்தாளரையும் நம்ப வைத்து இப்போது அவரது சுய சிந்தனையை மழுங்கடித்து இருக்கின்றன என்கிற ஒரு செய்தி கொஞ்சம் கவலைக்குரியது.

காஷ்மீர் இஸ்லாமியத் தீவிரவாத விளைநிலமா?

காஷ்மீர் பற்றிய வரலாற்று உண்மைகளை அறிவதில், அதன் உள்ளீடாக இருக்கிற ஒரு உண்மையான இன எழுச்சியை நீங்கள் இன்னும் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை என்பது உறுதியாக எனக்குப் புரிகிறது, 1846 ஆம் ஆண்டில் இருந்து குலாப் சிங் காலத்தில் துவங்கி ரன்பீர் சிங், பிரதாப் சிங் என்கிற கொடூர இந்துத்துவா முகங்களின் 1931 ஆம் ஆண்டு வரையிலான கொடும் அடக்குமுறைகள் மற்றும் படுகொலைகளின் எதிர்வினைகள் தான் இன்று வரை காஷ்மீர் மக்கள் சந்திக்கும் அவலம் என்பது காஷ்மீர் வரலாற்றைப் படிக்கும் யாருக்கும் மிக எளிதாகவே புலப்படும், உங்களுக்கு புலப்படுமா இல்லையா என்பது உங்கள் நடுவுநிலையின் மீதான

நம்பகத்தன்மையின்  கேள்வி. அதனை நீங்கள் தான் தெளிவுபடுத்திக் கொள்ளவேண்டும்.

இறுதியாக தேசத்தின் மீதான அன்பு செலுத்துபவர்கள் பாவிகளா?

இல்லை, நானும் உங்களோடு சேர்ந்து இந்த தேசத்தின் மீது அன்பு செலுத்துகிறேன், ஆனால், ஒரு சமத்துவமான சமூக வாழ்நிலையை நோக்கிய சிந்தனைகளோடு, பொருளாதார பகிர்வுகளோடு, அனைவருக்குமான கல்வி என்கிற உயரிய நோக்கோடு என் தேசத்தை நானும் நேசிக்கிறேன், அந்த தேசம், எம் இனமக்களை கொல்வதற்கு ஆயுதங்கள் கொடுக்காத வரை, என்மொழியை ஆலயங்களில் அவமதிக்கின்ற மணியாட்டிகளின் பின்னால் செல்லாத வரை என்னுடைய நேசத்தில் உங்கள் அளவிற்கு ஆழம் இருக்காது.

நானும் உங்களைப் போல இந்த தேசத்தை நேசிக்கும் காலம் வர வேண்டும் என்கிற ஆசைகளுடனும், கனவுகளுடனும்....

தோழமையுடன்

கை.அறிவழகன்
பெங்களூரில் இருந்து.அன்புள்ள அறிவழகன்,

நான் எழுதியிருப்பதில் இருந்து நீங்கள் அதிகமாக ஒன்றும் வேறுபடவில்லை. ஒரு கோபத்தைத்தவிர என்றே எண்ணுகிறேன். நான் என் அரசியல் சமூகவியல் நம்பிக்கைகளில் மிதவாதி என்று சொல்லிக்கொள்ள என்றுமே தயங்கியதில்லை. கொந்தளிப்புகளில் எனக்கு நம்பிக்கை இல்லை. எந்த ஒரு சமூக மாற்றமும் சீரான நீண்டகால கருத்தியல் செயல்பாடுகள் மூலம் மட்டுமே நிகழ முடியும் என்றும் அதுவே நிரந்தரமானது என்றும் நம்புகிறவன். எப்போதும் எதிலும் சமரசத்துக்கான ஒரு வாய்ப்பு இருக்கும் என்றும் மோதல் அழிவையே உருவாக்குமென்று உலகவரலாற்றை பலவருடங்கள் அமர்ந்து கற்று தெளிந்தவன். அறிவுஜீவிகள் பொறுப்பில்லாமல் உருவாக்கும் எதிர்மறை வேகங்கள் நீண்டகால அளவில் அழிவுகளை மட்டுமே உருவாக்கும் என்பதற்கு எனக்கு மீண்டும் மீண்டும் உதாரணங்கள் உள்ளன.

நீங்கள் குறிப்பிடும் ஒடுக்குமுறைகள், சமூக அநீதிகள் உங்கள் அளவுக்கே எனக்கும் மனக்கொந்தளிப்பை உருவாக்குகின்றன என்பதை மட்டுமே என்னால் ஆத்மார்த்தமாகச் சொல்ல முடியும். அத்தகைய அநீதிகளுக்கு

எதிராக குரல்கொடுக்கவும் போராடவும் கூடியவனாகவே இருக்கிறேன். ஒரு போதும் தனிவாழ்வில் சாதி மத அடிப்படைகளுக்குள் நான் சிக்கியதில்லை.

நண்பரே, ஒடுக்கப்பட்டோர் ஒருங்குதிரண்டு அரசியல் சக்தியாக மாறி அதிகாரத்தை அடைவதற்கான வாய்ப்புகளை திறந்து விட்டிருக்கும் ஒன்றாகவே இந்த ஜனநாயகம் இன்றும் உள்ளது என்பதை மாயாவதியை மட்டும் வைத்தாவது நீங்கள் ஏற்பீர்கள் என நினைக்கிறேன். நம்மைச்சுற்றியிருக்கும் எந்த தேசத்திலும் இன்று இத்தகைய எளிய வாய்ப்புகூட இல்லை என்பதை மட்டும் உங்கள் கவனத்துக்குக் கொண்டுவருகிறேன்.

இந்நிலையில் பிரச்சினைகளின் உண்மைநிலையை ஆராயவும் அதன் தீர்வுகளை நோக்கிச் செல்லவும் தேவையான சமநிலை கொண்ட ஆய்வு நோக்குக்குப் பதிலாக மக்களிடையே அவநம்பிக்கைகளை தூண்டிவிடவும் வன்முறைகளுக்கு தூபம் போடவும் கூடிய விதத்திலேயே நம் அறிவுஜீவிகள் எழுதுகிறார்கள். வரலாற்று நோக்கு கொண்ட எவருமே ஒரு மக்கள் திரளின் துயரங்களுக்குக் காரணம் இன்னொரு மக்கள் திரளே என்ற எண்ணத்தை விதைக்க மாட்டார்கள். அத்தகைய எண்ணங்கள் பேருருவம் கொண்டு இன்று ஆப்ரிக்கா போன்ற மூன்றாமுலக நாடுகளை உதிரத்தில் மூழ்கடித்துக் கொண்டிருக்கின்றன.

அத்தகைய முரண்பாடுகளை நம் நாட்டில் உருவாக்குவதற்கான சர்வதேசச் சதியின் ஒருபகுதியாக இவர்கள் கூலிபெற்று எழுதுகிறார்கள் என்பது என் உறுதியான எண்ணம். என்னிடம் நம் முற்போக்கு அறிவுஜீவிகள் சென்ற 10 வருடங்களில் எந்தெந்த ·பாசிச, இனவெறி, மதவெறி அமைப்புகளின் விருந்தினர்களாகச் சென்று வந்தார்கள், எங்கெங்கே நிதிவசதி பெற்றார்கள் என்பதற்கான ஆதாரங்கள் பல உள்ளன. தொகுத்து எழுதும் எண்ணம் உண்டு.

சிற்றிதழ்கள் சமூக அநீதிகளை தோலுரிக்கட்டும். போர்முரசுகளைக் கொட்டட்டும். ஆனால் ஒன்றுமட்டும் அவர்கள் உணரவேண்டும், இந்த நாட்டு மக்களில் பெரும்பாலானவர்கள் பிறரை ஒழித்துக்கட்ட சதா நேரமும் சதிசெய்துகொண்டிருக்கும் கொடூரக் கொலையாளிகள் அல்ல. மதக்கலவரம் வந்ததுமே மண்ணெண்ணை டப்பாவுடன் தெருவில் இறங்கும் மிருகங்களும் அல்ல. எளிய லௌகீக வாழ்க்கைக்காக ஒவ்வொருநாளும் வியர்வை சிந்துபவர்கள். அவர்களுக்கு மரபு உருவாக்கிக் கொடுத்த

நல்லதும் தீயதுமான அனைத்திலும் மூழ்கி வாழ்பவர்கள். அவர்கள் மனசாட்சி உள்ளவர்கள்தான். சகமனிதர்களை விரும்பக்கூடியவர்கள்தான். தியாகமும் பெருந்தன்மையும் கொண்டவர்கள்தான். அவர்களை இழிவுசெய்யாதீர்கள். அவர்களை பிறரது எதிரியாக ஒவ்விரு முறையும் சித்தரிக்காதீர்கள், அவ்வளவுதான்

ஆம்,சிக்கலான வரலாற்று ,சமூகப்பின்புலம் கொண்ட இந்த நாட்டின் சடங்குகளில் ஆசாரங்களில் வாழ்க்கைமுறைகளில் சமூக வைப்புகளில் எத்தனையோ அநீதிகள் உள்ளன. அவை தொடர்ச்சியான கருத்தியல் போராட்டங்கள் மூலம் மாறி வருகின்றன. இன்னும் வெகுதூரம் செல்லவேண்டியுள்ளது. சக மனிதர் மேல் வெறுப்பில்லாமல் அதைச் செய்ய முடியும். இந்த மண்ணில் நாம் சேர்ந்து வாழ்ந்தாக வேண்டும். ஒருவரை ஒருவர் கொன்று குவித்து எவரும் விடுதலையை அடையப்போவதில்லை.

இந்த தேசம் ஒரு புனித கற்பனை என்று நான் எண்ணவில்லை. இந்த தேசத்தை இந்து தேசிய கற்பிதமாகவும் நான் எண்ணவில்லை. இந்த தேசியத்துக்கான மூலங்களை தொன்மையான பெருமிதங்களில் தேடவும் இல்லை. மாறாக சென்ற பத்து நூற்றாண்டுகளுக்கும் மேலாக இங்கே மக்கள் ஒருவரோடு ஒருவர் கலந்து வாழ்ந்ததன் மூலம் இயல்பாக இங்கே ஒரு தேச அமைப்பு உருவாகியிருக்கிறது. தமிழர் பெருங்கூட்டம் இல்லாத இந்தியப்பகுதி இல்லை. எந்த இந்திய நிலத்திலும் பலமொழி பல இன பல மத மக்கள் கலந்துதான் வாழ்கிறார்கள். இந்தப்பரவல் காரணமாக இயல்பாக உருவான ஒரு தேசியம் இது. பேதங்களை பெருக்கி இந்த தேசத்தை உடைத்தால் ஆப்ரிக்கா இன்று காணும் குருதிக்களத்தை நாளை நம் நாடும் காணும். அதற்காகவே காத்திருக்கின்றன ஆயுதம் விற்கும் நாடுகள்.

இந்திய தேசியம் இன்று ஒரு நவீன நிலம் சார் தேசியமாகவே முன்வைக்கபப்டுகிறது. காந்தியும் நேருவும் அம்பேத்கரும் உருவாக்கியளித்த இந்த நவீன தேசிய உருவகமே நமது பெரும் வலிமை. இதை இழந்தால் நாம் அழிவோம். இதை இந்து தேசியம் என்று முத்திரைகுத்தி இந்த தேசியத்துக்கு மாற்றாக முன்வைக்கப்படும் மொழிவழி , மதவழி தேசியங்கள்தான் முழுக்கமுழுக்க ·பாசிஸத்தில் வேரூன்றியவை. தொல்பழங்காலப் பெருமையில் ஊறியவை. சமீபத்தில் அருந்ததியர் பற்றிய ஒரு வினாவுக்கு தமிழ்த் தேசியவாதி ஒருவர் திட்டவட்டமாக பதில் சொன்னார், அவர்களுக்கு தமிழ் தேசியத்தில்

இடமில்லை, அவர்கள் தமிழ்தேசியத்தின் அகதிகள்தான் என. இங்குள்ள 40 சதவீத தெலுங்கு மக்கள் துரத்தப்படவேண்டும் என. இந்த ·பாசிசத்தானே இந்திய தேசியம் என்ற நவீன உருவகத்துக்கு மாற்றாக நம் அறிவுஜீவிகளும் சிற்றிதழ்களும் முன்வைத்து வருகின்றன.

இந்த மண்ணில் சமூக மாற்றம் நிகழவேண்டுமானால், இந்த மண்ணில் பொருளியல் வளார்ச்சி சற்றேனும் நிகழ்ந்து இங்குள்ள கோடானுகோடி மக்கள் பட்டினியை உதற வேண்டுமானால் இது தன் முரண்பாடுகளை களைந்து கொண்டே ஆக வேண்டும். ஒரு சமூகமாக ஒருங்கிணைந்து முயன்றாக வேண்டும். அதற்கான வாய்ப்புகள் தேடி வரும் வேளை இது. அந்த வளர்ச்சி நிகழ்ந்துகொண்டும் இருக்கிறதென இந்நாடெங்கும் பயணம் செய்யும் என்னால் சொல்ல முடியும். இந்நிலையில் முரண்பாடுகளை பெருக்கவும் மோதல்களை வளர்க்கவும் செய்யப்படும் பொறுப்பில்லாத முயற்சிகள் என்னை கொதிக்கச் செய்கின்றன.

உரிமைகளுக்காக போராடுவதும் அதிகாரத்துக்காக திரள்வதும் இந்த தேசத்தை அழித்து, முந்நூறு வருட பழமை கொண்ட ·பாசிச மொழிவெறி மதவெறி தேசியங்களுக்கு உதவுவதாக அமைய வேண்டிய அவசியம் இல்லை. கயர்லாஞ்சி அல்லது திண்ணியம் என்றீர்கள். அந்த கொடுமைகளுக்கு எதிராக ஒரு மாபெரும் தேசியப் பெரும் சக்தியாக திரள்வதில் இருந்து உங்களை தடுப்பது எது? உங்களை விட ஒடுக்கப்பட்டிருக்கும் அருந்ததியரை அன்னியர் என்று வெளியே தள்ள உங்களுக்கே கற்பிக்கும் நசிவுவாத ·பாஸிச தேசிய உருவகம் எது? சிந்தியுங்கள் நண்பரே.

காஷ்மீரின் வரலாறு எனக்கும் தெரியும். நான் சொல்வதை நிரூபிக்கும் தகவலையே நீங்களும் சொல்கிறீர்கள். மதவெறியின் அடிப்படையில் தங்களை ஒரு தேசியமாக எண்ணும் காஷ்மீரி முஸ்லீம்களுக்கு அங்கே இருந்த மன்னராட்சி ஒரு கா·பிரின் கொடுங்கோல் ஆட்சியாக படுகிறது. இஸ்லாமிய விடுதலைக் கனவை அவர்கள் அந்தப் புள்ளியில் இருந்தே தொடங்குகிறார்கள். அதேபோல பார்த்தால், இந்தியாவைவே இஸ்லாமியர் பலநூறு வருடம் ஆண்டிருக்கிறார்கள். படையெடுப்புகளை நிகழ்த்தியிருக்கிறார்கள். வரலாற்றுச் சின்னங்களையும் வழிபாட்டு இடங்களையும் அழித்திருக்கிறார்கள். இந்து சாம்ராஜ்யக் கனவு கொண்ட ஒரு இந்துமதவாதி இந்துகள் இந்தியாவில் 900 வருடங்களாக

ஒடுக்கப்பட்டிருந்தார்கள் என்று சொன்னால் நீங்கள் ஏற்பீர்களா? நான் ஏற்க மாட்டேன். அது வரலாற்றின் சென்ற பக்கம். அதிலிருந்து இன்றைய இந்தியாவை உருவாக்குவது ·பாஸிசம். இன்றைய இந்தியா இன்றைய தேவையின் அடிப்படையில் மட்டுமே உருவாகமுடியும். அப்படி உருவான ஒன்று இது.

இந்தியாவில் உள்ள எல்லா நிலப்பகுதிகளும் மன்னர்களால்தான் ஆளப்பட்டிருந்தன. அவர்களில் பெரும்பாலானவர்கள் ஒடுக்குமுறையாளர்களே. அவர்களில் நவாபுகள் பற்பலர். சுதந்திர இந்தியா அந்த காலகட்டத்தில் இருந்து மீண்டுதான் இன்றைய வளார்ச்சியை அடைந்திருக்கிறது. நவாபுகள் எங்களை ஒடுக்கினார்கள் அதனால் எங்களுக்கு இந்து தேசம் வேண்டும் என்று அவத் சம்ஸ்தான மக்கள் சொன்னால் நான் அதை பைத்தியக்காரத்தனம் என்பேன்.

காஷ்மீர் மக்கள் அவர்களே தெளிவாக மீண்டும் மீண்டும் சொல்கிறார்கள், அவர்கள் தேடுவது ஒரு இஸ்லாமிய அரசை, ஒரு தாலிபானிய அரசை என்று. தமிழ்க இஸ்லாமிய இதழ்கள் ஒவ்வொன்றும் அதை மீண்டும் மீண்டும் வழிமொழிகின்றன. நம் சிற்றிதழ்கள் மட்டும் ஏன் அதை ஒரு ஜனநாயக விடுதலைபோராட்டம் என்று பிடிவாதமாக விளக்க முனைகிறார்கள்?அதை மட்டுமே எளிய இந்தியக் குடிமகனாக நான் கேட்கிறேன்.

தலித்துக்கள் ஒடுக்கப்படுகிறார்கள் என்று சொல்லி இங்குள்ள எளிய இஸ்லாமிய இளைஞனின் நெஞ்சில் இந்த நாடு மீதும் இங்குள்ள பெரும்பான்மை மக்கள் மீதும் கடும் வெறுப்பை உருவாக்குவதா சிற்றிதழ் அறம்? அதன்மூலம் இங்கே சமூக வன்முறையை உருவாக்கி இங்குள்ள குறைந்த அளவு தொழில் வளர்ச்சியைக்கூட காவு கொடுப்பதா சிற்றிதழ்ச் சிந்தனை? பிகாரில் கயர்லாஞ்சியில் பசுவை உரித்த தலித்துக்கள் கொல்லப்படுகிறார்கள் என்று சொல்லி தமிழ்தேசியம் பேசி இங்கே பசுவைத்தின்னும் அருந்ததியரை அகதிகளாக துரத்த வேண்டும் என்று வாதிடுவதா சிற்றிதழ் அறம்? புரியவேயில்லை நண்பரே.

நான் காஷ்மீர் மக்களுக்காகவும் ஆழமாக வருந்துகிறேன். மதவெறி ஏற்றப்பட்ட எளிய மக்கள் அவர்கள் எந்த திசை நோக்கிச் செலுத்தபப்டுகிறார்கள் என்றே அறிவதில்லை. உதிரத்தில் மிதித்து நடந்து அறிவு ஜீவிகள் மறுபக்கம் சென்று விடுவார்கள். கீழே உள்ள மக்கள்தான் காலந்தோறும் அழிவார்கள். கா·பிரின் கீழ் வாழமுடியாது, இந்து தேசம்

தங்களை அழிக்கும் என்று சொல்லபப்ட்டதை நம்பி இஸ்லாமிய தேசிய வெறியுடன் பாகிஸ்தானுக்குக் குடிபெயர்ந்த பிகாரி முஸ்லீம்கள் இன்றும் அங்கே ரத்தம் சிந்துகிறார்கள். ஏதாவது பாகிஸ்தானி நாளிதழை எடுத்து புரட்டிப்பாருங்கள்.

இந்த தேசம் இங்குள்ள 'உங்கள் இன' மக்களுக்கு எதிராக ஆயுதம் அளிக்கிறதா? எப்படி உங்கள் மனதில் அந்த சித்திரம் உருவானது? எவரால்? எந்த அடிப்படையில்? அந்தரங்கமாக ஒருகணம் சிந்தனை செய்து பாருங்கள், உங்களுக்கே உண்மை புரியும். அதன் பிறகு உங்கள் நடுநிலைமையும் நியாய உணர்வும் அனுமதித்தால் அதை வெளியே சொல்லுங்கள்.

போராடும் அனைவருக்கும் வாய்ப்புகளை அளிக்கிறது இந்த நாடு. பிகாரில் மாயாவதியின் வெற்றி ஓர் உதாரணம். இந்தநாடு மிகமிகச் சிக்கலானது. எண்ணற்ற சாதிகளும் உபசாதிகளும் கொண்டது. இதன் இயங்கியலில் தெரிந்தும் தெரியாமலும் பலநூறு சக்திகள் செயல்படுகின்றன. ஒவ்வொன்றும் இன்று விழித்தெழுந்து தங்கள் பங்குக்காக குரலெழுப்புகின்றன. அந்த மோதலின் இயங்கியல்தான் இப்போது நிகழ்வது. போராட்டத்தின் நீதிகளும் அநீதிகளும் உண்டு. ஆனாலும் அந்த போராட்டம் நிகழ்வதே வளர்ச்சியின் அடையாளம்தான்.

அந்த தேவை பலவகையான கருவிகளைக் கண்டடைகிறது. சிறந்த உதாரணம் ஆந்திரத்தில் சிரஞ்சீவி. ஆந்திரத்தில் காப்பு சாதியும் தலித் சாதியும் அரசியலதிகாரம் இல்லாது விடபப்ட்டிருந்தன. அவை ஒன்றாக திரண்டால் மட்டுமே அதிகாரத்தைக் கோரும் எண்ணிக்கை பலம் வரும். அது எளிதாக இல்லை. ஆனால் இப்போது படங்களில் தலித்தாக நடித்த ஒரு காப்பு அரசியலுக்கு வரும்போது சட்டென்று அந்த இணைவு சாத்தியமாகிறது. அதை ஆந்திரத்தில் கண்கூடாக காண முடிகிறது. தவறோ சரியோ இப்படித்தான் நண்பரே அதிகாரக் கையகப்படுத்தல் நிகழ்கிறது. உங்கள் கொள்கை முழக்கங்களின் அடிபப்டையில் அல்ல.

இந்த ஒட்டுமொத்த உரிமைப் போராட்டமும் இந்த ஜனநாயக அமைப்பு அளிக்கும் முடிவிலா சுதந்திரத்தின் மீது நிகழ்த்தப்படலாம். இந்த போராட்டம் வன்முறை இன்றி நிகழலாம். வெறுப்பில்லாது நிகழலாம். அதை நிகழ்த்தும் விதமாக எழுதுவதே எழுத்தாளனின் கடமையாக இருக்கமுடியும். தன்னை புரட்சிப்புயலாக காட்டிக்கொள்வதற்காக வெறுப்பை உமிழும் அரைவேக்காட்டுத்தனம் அல்ல எழுத்தாளனின் கடமை.

வரலாற்றை நீங்கள் புரிந்துகொள்ளும் முறை தவறு. முதிர்ச்சி இல்லாதது, கோபதாபங்களால் மட்டுமே உருவானது என்று சொன்னால் கோபித்துக் கொள்ளமாட்டீர்களே. 'மணியாட்டி'களின் சாதியத்தைக் காணும் உங்களுக்கு நமது 'தமிழியர்'களின் அதைவிட உக்கிரமான சாதிக்காழ்ப்பு கண்ணில் படவில்லை — உத்தப்புரத்துக்குப் பின்னரும் கூட.

நீங்களும் என்னுடன் சேர்ந்து இந்நாட்டின் மீது அன்புசெலுத்துவதில் மகிழ்ச்சி அடைகிறேன். சமத்துவத்துக்காக, தன்மானத்துக்காக, விடுதலைக்காக அந்த அன்பின் அடிப்படையில் ஒன்று திரண்டு முயல்வோம். அது எளிதாக, உடனடியாக இருக்காதென்றாலும் நம் குறிக்கோள் அதுவாக இருக்கட்டும். நம்மை எவரும் பிரிக்காமல் இருக்கட்டும். நூறாண்டுகால போராட்டத்தால் நாம் அடைந்தவற்றை சண்டையிட்டு இழக்காமல் இருப்போம்.

## (4) இந்துத்துவம்:ஒரு கேள்வி

ஜெமோ..

தங்களின் 'தமிழர்களுக்கு சிந்திக்கச் சொல்லி தந்த புனித தாமஸ் கட்டுரை' படித்தேன். மிக மிக புதிய அதிர்ச்சிகள். உங்கள் துணிச்சலை பாராட்டுகிறேன். ஒரிரு வினைல் போஸ்டர்கள் மூலமே ஆயிரக்கணக்கான மக்களைத் திரட்டும் அந்த 'டியுப் லைட்' நற் செய்தி கூட்டங்களை பார்த்து மிகவும் ஆச்சரியப்படுவேன். அந்தக் கூட்டங்களின் பின்னால் உள்ள கட்டமைப்புகளையும்,நிதி ஏற்பாடுகளையும் நினைத்தால் பிரமிக்க வைக்கிறது. நம்பிக்கைகளின் பின்னால் வைக்கப்படும் வாதங்களை எதிர் கொள்ளவது ஒன்றும் பெரிய விசயமல்ல. ஆனால் இந்த மாதிரி வரலாற்றை திரித்து அமைக்கும் முயற்சிக்கு நம் எதிர்ப்பை காட்டி, அந்த சவாலை எதிர்கொள்ளவேண்டியதுதான் பெரிய விசயம். அது நம் கடமையும் கூட. அதை நீங்கள் சரியாக செய்துள்ளீர்கள். பாராட்டுக்கள். ஆனால் இந்த மாதிரி புது 'அலிபி' களை உருவாக்கும் முயற்சியில் எல்லா மதங்களுமே ஈடுபடுகிறது என்பது என் கருத்து. சமீபத்திய உதாரணம் ஒரு நம்பிக்கை சார்ந்த விசயத்தை 'அலிபி' யாக மாற்ற ஒரு மத நம்பிக்கை முயற்சித்ததன் விளைவு, ஒரு நாட்டின் உச்ச நீதி மன்றத்தை 'மாற்று பாதையை ஏன் யோசிக்கக் கூடாது?' எனக் கேட்க வைத்துள்ளது.

மனோகர்.

அன்புள்ள மனோகர்,

உங்கள் கருத்துக்களுடன் நான் முழுமையாகவே முரண்படுகிறேன்.மதம் என்ற நிறுவனத்துடன் எனக்கு உறவு ஏதும் இல்லையென்றாலும் அந்த அமைப்பு பெரும்பாலானவர்களுக்கு தேவையாக இருப்பதை நான் புரிந்துகொள்கிறேன். ஒரு வழிபாட்டமைப்பாக, பண்பாட்டுத்தொகுப்பாக மதம் ஒரு சாராரின் இடையே இருப்பது இயல்பானது.

ஆனால் எப்போது மதம் அல்லது மொழி அல்லது ஏதாவது பண்பாட்டுக்கூறு அரசியல் ரீதியாக மக்க¨ள் இணைக்க கையாளப்படுகிறதோ அப்போதே அது ·பாசிச அமைப்பாக ஆகிவிடுகிறது. ஏனென்றால் அதன்பின் அதில் தர்க்கபுத்தி, மாறுபட்ட தரப்பு எதற்குமே இடமில்லை. முழுமையாக ஏற்றுக்கொள் இல்லையேல் நீ துரோகி என்பதே அதன் கோஷமாக

இருக்கிறது. பாரதீய ஜனதாக் கட்சியின் அரசியல் எப்போதுமே இந்த தளத்தில்தான் இருந்து வந்திருக்கிறது, வருகிறது.

இந்நாட்டில் அவர்களின் வெறிக்குரல்கள் உருவாக்கும் பண்பாட்டு அழிவுகள் பிரம்மாண்டமானவை. இந்தியா ஒரு 'ஹிந்து அடிப்படைவாத' நாடாக ஆகுமென்றால் இது அழிவதே மேல் என்றே நான் எண்ணுவேன். நான் இதுஞானமரபின் விளைநிலம் என்று இந்த மண்ணை எண்ணுவதற்கான எந்த அம்சமும் அப்போது எஞ்சியிருக்காது.

பொதுவாக நான் அரசியல் விஷயங்களில் நேரடியாக விரிவாக ஏதும் சொல்லவேண்டாம் என்ற எண்ணம் கொண்டிருக்கிறேன். அது என் தளம் அல்ல என்றும், அந்தத் தளம் சார்ந்துபேச ஆரம்பித்தால் எழுத்தாளனின் நேரம் கவனம் முழுமையாகவே சிதறடிக்கப்படும் என்றும் தற்கலிகமான விவாதங்களில் அவன் அழிவான் என்றும் நினைக்கிறேன். என் கருத்தை ஒருமுறை பதிவு செய்துவிட்டு ஒதுங்கிவிடுவதே என் பாணி. நீண்டகால அடிபப்டையில் நான்செய்யவேண்டியவையெ அதிகம் உள்ளன.

ஆயினும் அவ்வப்போது என் தரப்பை சுருக்கமாகப் பதிவுசெய்யவேண்டியிருக்கிறது. இதையெல்லாம் பலமுறை எழுதியிருக்கிறேன். ஆயினும் இச்சந்தர்ப்பத்துக்காக மீண்டும். ராமஜன்மபூமி-பாப்ரிமஸ்ஜித் விவகாரம் தொடங்கி ,சேதுசமுத்திர திட்டம், இப்போது அமர்நாத் கோயில் திட்டம் முதலியவற்றில் இந்துத்துவ அமைப்புகள் காட்டி வரும் பொறுமையோ சகிப்புத்தன்மையோ இல்லாத உணர்ச்சிகர அரசியல் இந்தியாபோன்ற பன்முகப் பண்பாட்டுச் சமூகத்தில் பேரழிவை உருவாக்கக் கூடியது என்று நினைக்கிறேன்.

இந்தியமண்ணில் அனைத்தையும் ஒருங்கிணைக்கக் கூடியதும், ஆக்கப்பூர்வமான உரையாடல்களுக்கு எப்போதுமே திறந்திருக்கக் கூடியதுமான ஒரு அரசியலியக்கமே தேவை என்று நான் எண்ணுகிறேன். காந்திய இயக்கம் அப்படிப்பட்டதாக இருந்தது.

இன்றைய இந்துத்துவ அரசியல் அல்லது 'இந்துமுல்லாத்தனம்' ஒட்டுமொத்த இந்துஞானமரபையே நிராகரிக்கும் இடத்துக்கு நம் 'சுதந்திரஜனநயக சிந்தனையாளர்'களில் பெரும்பாலானவர்களக் கொண்டுசென்றுசேர்க்கிறது என்பதே இதில் மிகமிக துரதிருஷ்டவசமானது. இந்துமரபு மீது மேலை ஊடகங்கள் உருவாக்கும் அனைத்து

அவதூறுகளுக்கும் வலுவான ஆதாரமாக அமைகிறது இந்துத்துவ முச்சந்தி அரசியல். இங்குள்ள சிறுபான்மையினர் நடுவே ஐயங்களை உருவாக்கி அவர்களைத் தனிமைப்படுத்துகிறது. இந்தியப்பண்பாட்டின் உள்ளிருந்து வளரும் புற்றுநோய் என்றே இன்று வளர்க்கப்பட்டுவரும் 'முச்சந்தி' 'வசைபாடல்' இந்துத்துவ அரசியலை நான் மதிப்பிடுகிறேன்.

ஆனால் இந்துத்துவ அரசியலையும் இந்து ஞானமரபையும் ஒன்றாகக் காண்பவர்கள் ஒருபோதும் தோற்கடிக்க முடியாத மகத்தான ஆயுதம் ஒன்றை இந்துத்துவர்களுக்கு தாங்களே தூக்கி வழங்குகிறார்கள். இந்துஞானமரபு அதன் விரிவான மகத்தான தத்துவத் தேடல் காரணமாகவே நிலைத்திருக்கக் கூடியது. அதனுடைய பிரதிநிதிகளாக சர்வசாதாரணமான இந்துத்துவ தெருக்கூச்சல்காரர்களை நியமிப்பது நம்முடைய இடதுசாரிகள்தான்.

ஒருவன் கீதையை படித்தால், உபநிடதத்தைமேற்கோள் காட்டினால், திருவாசகத்தை சொன்னால், இந்து என்று சொல்லிக்கொண்டாலே அவனை இந்துத்துவ அரசியல்வாதி என்று கூச்சலிடும் நம் இடதுசாரிகள் இன்னொருவகை வெறியர்கள், கருத்துக்குருடர்கள்.அவர்கள் இந்துத்துவ அரசியலுடன் போர் புரியவில்லை, இந்துஞானபரபின் பல்லாயிரம் வருடத்து வரலாற்றுடன் அட்டைக்கத்தியை வைத்துக் கொண்டு போரிடுகிறார்கள். இந்திய மண்ணில் இருந்து கீதையையும் திருவாசகத்தையும் யார் துடைத்து விடமுடியும்? இங்குள்ள இடதுசாரிகள் இந்துத்துவ அரசியலுடன் போரிடுவதாக சொல்லிக்கொண்டு இந்துஞானமரபை இழிவுசெய்தும் திரித்துரைத்தும் செய்துகொண்டிருக்கும் கீழ்த்தரமான போரே இங்கே இந்துத்துவ அரசியல் செழிக்க வேர்நீராக அமைகிறது.

இன்னொன்று இந்தியாவெங்கும் கிளைக்கும் வெறிமிக்க பிரிவி¨னைப்போக்குகள். இந்திய நிலமெங்கும் மீளமீள அலைந்து திரிந்தவன் நான். இந்த மண் ஒரே பண்பாட்டுக்களம் என்பதை என் நேரடி அனுபவமாக உணர்ந்தவன். கண்முன் தெரியும் உண்மையாக அதைக் கண்டு கொண்டிருப்பவன். வரலாற்றுக்காலம் முதல் இன்றும் ஒவ்வொருநாளும் ஞானதாகிகளாக இம்மண்ணெங்கும் அலையும் விடுபட்ட மனிதர்களால் இது இணைக்கப்படுகிறது. பிச்சைக்காரர்கள், துறவிகள், பித்தர்கள், ஞானிகள். அவர்களாலேயே இந்த மண் இணைக்கப்பட்டிருந்தது, பட்டிருக்கிறது. அவர்களுக்கு காசி இல்லாமல் ராமேஸ்வரம் இல்லை.

பத்ரிநாத் இல்லாமல் திருவண்ணாமலை இல்லை. அவர்களில் ஒருவனாக என்னை உள்ளூர உணர்பவன் நான். இந்த நாடு அரசியலால் என்றும் இணைந்திருக்கவில்லை, ஆன்மீகத்தால் இணைந்திருக்கிறது. என் நெஞ்சில் உள்ளது அந்த இணைந்த இந்தியா என்ற ஆன்மீக பூமிதான்.

இந்த நாட்டை கீழ்த்தரமான சுயநல அரசியலுக்காகவும் ,கண்மூடித்தனமான வெறுப்பின் பொருட்டும், மேலைநாட்டு கோட்பாட்டு ஊடுருவல் காரணமாகவும் பிரித்து அழிக்க நினைக்கும் தரப்புகள் நாடெங்கும் இன்று பெருகியிருக்கின்றன. தங்களை முற்போக்கு என்றும் சுதந்திர சிந்தனையாளர் என்றும் எண்ணும் பெரும் கூட்டத்தினர் இந்தச் சிந்தனைகளை ஏற்பதே 'நவீன மனப்பான்மை' என்று நம்புகிறார்கள். நம்முடைய எந்த அறிவுஜீவி இதழை எடுத்துப்பார்த்தாலும் இந்த ஒற்றைக்குரலே ஒலித்துக் கொண்டிருக்கிறது. மாற்றுதரப்பை அவர்கள் வெளியிடுவதுகூட இல்லை. இந்தத் தரப்புகளின் ஆழமற்ற கூச்சல்கள் இங்கே இந்துத்துவ அரசியலுக்கு உரமாக அமைகின்றன. இவர்களின் பிரிவினை வாதத்தால் பதற்றமும் ஆதங்கமும் கொள்ளும் இந்திய மக்களில் பெரும்பான்மையினர் இந்துத்துவ அரசியலை இணைக்கும் சக்தியாக எண்ணத்தலைப்படுகின்றனர்.

இவ்வாறு இருதரப்பிலும் உரமூட்டப்பட்டு வெறுப்பரசியல் வளர்கிறது. அவ்வரசியலால் வளர்க்கப்பட்டு கிறித்துவ மதப்பரப்பு அரசியல், இஸ்லாமிய மதவெறி அரசியல் ஆகியவை வளர்கின்றன. இன்று நம் மண்ணில் கிறித்தவ மதமாற்ற திரிபுவாதத்தை எதிர்க்கவும் வெல்ல கருத்துச்செயல்பாடுகள் இல்லை. இந்துத்துவ கூக்குரல்கள் அதற்கு ஆக்கமும் ஊக்கமும்தான் அளிக்கும். ஒரு வெறுப்பரசியல் இன்னொரு வெறுப்பரசியலை அழிக்காது. வளர்க்கவே செய்யும்.

இன்று செய்யவேண்டியதென நான் எண்ணுவது இந்துஞானமரபு என்பது இந்துத்துவ அரசியலில் இருந்து முற்றிலும் மாறுபட்டது என்பதை நிறுவுவதே. அது ஒற்றைப்படையானது அல்ல. மையம் கொண்டது அல்ல. அது மிகவிரிவான ஒரு விவாதக்களம். பல்லாயிரம் விதைகள் உறங்கும், விதைகள் ஓயாது முளைக்கும் வேர்நிலம். அது கட்டற்ற சுதந்திர சிந்தனைகளின் வெளி. முடிவிலாத மகத்தான தத்துவ தேடலின் ஒட்டுமொத்த இயக்கம். நம் இந்துத்துவ ஒற்றைப்படை அடையாள அரசியல் ஒருபோதும் புரிந்துகொள்ள் முடியாது. அதில் கிறித்துவம், இஸ்லாம்,

மார்க்ஸியம், நவீன அறிவியல் என எதையும் உள்ளே வைத்து விவாதிக்க முடியும். இந்த நிமிடம் வரை இந்துமரபு அடைந்த அனைத்தையும் ஒட்டுமொத்தமாக நிராகரிக்கும் உரிமையையும் எனக்கு அளிக்கிறது என்பதே இந்துமரபின் பெருமை.

இந்த பூமி இந்துஞானமரபு, பௌத்த ஞானமரபு, சமண ஞானமரபு ஆகியவற்றால்தான் ஒன்றாக்கப்பட்டுள்ளது. அம்மரபுகள் உருவாக்கிய பண்பாட்டு பாரம்பரியத்தின் நீட்சியே இன்றும் இங்கே நிலவுகிறது. அந்தப் பண்பாட்டு மரபுகள் உயிருடன் இருக்கும்போது மட்டுமே அதை நாம் ஒன்றாக நிலைநிறுத்த முடியும். சமரசம், உரையாடல், சுதந்திரம் மூலமே அது நிகழ முடியும். இந்த தெளிவே இன்று தேவைப்படுகிறது. பழங்காலம் முதல் நவீனகாலம் வரை இந்தியப் பேரிலக்கியங்கள் அனைத்தும் சொல்லும் உண்மை இதுவே. மீண்டும் மீண்டும் என் நூல்களில் நான் பேசுவது இதையே.

சொல்லும் ஒவ்வொரு சொல்லும் மாறுபட்டு ஒலிக்கும் பல்வேறு தரப்புகளால் ஓய்விலாது திரிக்கப்படும் இச்சூழலில் என் உள்ளத்தில் சத்தியம் என்னைப் புரியவைக்கும் என்ற நம்பிக்கையுடன், என் மகத்தான குருமரபு என்னுடன் இருக்கும் என்ற கனவுடன் மீண்டும் மீண்டும் நான் சொல்லவேண்டியதைச் சொல்லிக் கொண்டிருக்கிறேன். உண்மை ஒருபோதும் அழிந்துவிடாது. ஆடிக்காற்றில் மலைபறந்துவிடுமா என்ன?

ஆம் அவ்வாறே ஆகுக.

## (5) இந்துத்துவம், மோதி:ஒரு கடிதம்

திரு. ஜெயமோகன் அவர்களுக்கு

கிறிஸ்துவர் மீது தாக்குதல் என்ற பகுதியில் சந்தோஷ் என்பவர் எழுதி வெளியாகியிருந்த கடிதத்தையும் அதற்கான உங்களது ரத்தின சுருக்கமான பதிலையும் படித்தேன். தான் என்ன எழுதுகிறோம் என்பதை அறிவுபூர்வமாக உணந்த மற்றும் புரிந்த நிலையில் எழுதப்பட்ட கடிதமாக அது தெரியவில்லை. பிரவீன் தொகாடியா, ஆர்.பீ.வீ.எஸ்.மணியன், அசோக் சிங்கால், ராமகோபாலன் ஆகியோர் இந்து மதத்தைப் பற்றிய அடிப்படை புரிதல் கூட இல்லாதவர்கள், வெறும் துவேஷத்தை கக்குகிறவர்கள், தங்கள் பேசுவது அபத்தம் என்பதையே உணராதவர்கள் என்றெல்லாம் சொல்கிற இவருக்கு அவர்களிடமிருந்து மாறுபட்ட புரிதல் ஒன்று இருக்குமாயின் அதற்கு இக் கடிதத்தில் எந்த ஆதாரமும் இல்லை. மதச்சார்பின்மை பற்றி, இந்துக்களும், இந்து மதமும் வஞ்சிக்கப்படுவது பற்றி, முஸ்லிம்கள் பற்றி அவர்கள் என்ன கூறுகிறார்களோ அதையே ஒரு வார்த்தை பிசகாமல் கூறுகிறார் இவர். இவரது அபத்தமான வாதம் இவருக்கு புரியாது இருப்பது ஆச்சர்யமல்ல. ஆனால் உங்களுக்கு புரியாதது ஏன்? மோடி பற்றிய சந்தோஷின் கருத்து தான் உங்களது கருத்துமா? நீங்கள் சொல்லும் விஷயங்கள் அப்படியே என் எண்ணங்களை பிரதிபலிக்கின்றன என்று கூறியிருக்கிறீர்கள். மோடிக்காக இவர் அவ்வளவு வாதடி என்ன பயன்? 2002ஆம் ஆண்டு குஜராத்தில் நடந்த முஸ்லிம்கள் படுகொலைப் பற்றி கரண் தாப்பர் கேள்வி எழுப்பிய போது அதற்கு பதில் சொல்ல முடியாது நேர்காணலின் ஐந்தாவது நிமிடத்திலேயே வெளியேறிவர் மோடி. மோடிக்குத் தெரியும் தனது அரசின் செயலை தன்னைப் போன்ற மற்றொரு இந்துத்துவாவாதியிடம் மட்டுமே நியாயப்படுத்த முடியும் என்பது.

அடுத்ததாக, சர்வோத்தமன் என்பவரின் கடிதத்திற்கு எழுதியுள்ள பதிலில் ஸ்டாலினுக்கு கம்யூனிசம் கட்டிய கப்பத்தை பஜ்ரங்கதள்ளுக்கு ஆர்.எஸ்.எஸ். கட்டும் என்று சொல்லியிருக்கிறீர்கள். இந்த பதிலின் மூலம் கம்யூனிசம் பற்றிய உங்கள் மிகத் தவறான புரிதல் மட்டும் வெளிப்படவில்லை. ஏதோ ஆர்.எஸ்.எஸ். சிறந்த தத்துவம் மட்டும் நல்ல கொள்கைகளை அடித்தளமாக கொண்ட இயக்கம் என்பதாகவும் பஜ்ரங்தள், பா.ஜ.க. போன்ற

அமைப்புகளும் அவற்றின் செயல்பாடுகளுமே அதற்கு கெட்ட பெயர் கொண்டு வருவது போலவும் சித்தரித்திருக்கிறீர்கள். தயவு செய்து, சாவர்க்கர், கோல்வால்கர் ஆகியோரின் சிந்தனைகளிலிருந்து பஜ்ரங்தள், பா.ஜ.க. எவ்வாறு விலகிப் போய் விட்டது, ஆனால் ஆர்.எஸ்.எஸ். அவர்களின் சிந்தனைகளிலிருந்து விலகாமல் எவ்வாறு பின்பற்றுகிறது என்பதை நீங்கள் விளக்க வேண்டும். மார்க்ஸின் கம்யூனிசத்திற்கும் ஸ்டாலினியத்திற்கும் சம்பந்தமேயில்லை என்பதை மார்க்ஸின் சிந்தனைகளை அறிந்த ஒருவரால் எளிதில் நிறுவ முடியும் (ரோசா லக்ஸம்பர்க் முதற்கொண்டு ஏராளமான இடதுசாரி கம்யூனிஸ்டுகள் போல்விஷசத்தின் பல அம்சங்களை கடுமையாக தாக்கியும், முரண்பட்டும் வந்திருக்கிறார்கள்). ஆர்.எஸ்.எஸ்.க்கும் பஜ்ரங்தள், பா.ஜ.க. மற்றும் வி.எச்.பி. போன்ற அமைப்புகளுக்கும் இருக்கும் உறவு என்பது கம்யூனிஸ்ட் கட்சிக்கும் அதன் வெகுஜன அமைப்புகளுக்கும் இருக்கும் உறவைப் போன்றது. ஒரு வெகுஜன அமைப்பு தவறிழைக்கும் போது அதை கண்டிப்பதும், சரியான பாதைக்கு திருப்புவதும் அதன் தாய் அமைப்பின் கடமை. இதுவரை ஆர்.எஸ்.எஸ். தனது பரிவார அமைப்புகளின் எந்த நடவடிக்கையையும் கண்டித்ததில்லை. வேலைநிறுத்தம் தொழில் வளர்ச்சிக்கு நல்லதல்ல என்று புத்ததேவ் பட்டாச்சார்ய கருத்து தெரிவித்த போது அக் கட்சியின் தலைமைக் குழு அவரை வெளிப்படையாக கண்டித்தது. புத்ததேவும் மன்னிப்பு கோரினார். இது ஒருவர் கட்சியிலிருந்து தாற்காலிகமாக நீக்கப்படுவதற்கு அடுத்தபடியான கடுமையான நடவடிக்கை. சி.ஐ.டி.யூ.வின் தலைவர் எம்.கே. பாந்தே அணுசக்தி ஒப்பந்தத்தையும் முஸ்லிம்களையும் இணைத்து பேசிய போதும் அக் கட்சி உடனடியாக அவரை திருத்தியது என்பதையும் யோசித்துப் பாருங்கள்.

இந்துத்துவா சிந்தனையைப் பற்றிய உங்கள் புரிதலைப் பற்றி நீங்கள் விரிவாக எழுதுவது நல்லது. அதிலு அபத்தமான கடிதங்களுக்கு இப்படி ரத்தின சுருக்கமாக பதில் எழுதாதீர்கள்.

இப்படிக்கு

க. திருநாவுக்கரசு

உதவி ஆசிரியர்

த சன்டே இந்தியன்

புது தில்லி 110017.

அன்புள்ள திருநாவுக்கரசு,

தங்கள் கடிதம் கண்டேன்.

பயணத்தில் இருந்தமையால் சந்தோஷுக்கு நானெழுதிய பதில் சுருக்கமாக அமைந்ததனால் உங்கள் புரிதலில் இடறல்கள் இருப்பதை நான் உணர்கிறேன். என்னுடைய கருத்துக்களை நான் எப்போதும் தொடர்ச்சியாக ஆணித்தரமாகச் சொல்லியே வந்திருக்கிரேன். நான் உடன்படுவது என்ன என்பதை அந்த என் கருத்துப்புலத்தில் வைத்தே பார்க்க வேண்டும். அதற்கு இவ்விணையதளத்திலேயே பல கட்டுரைகள் உள்ளன. ஏன் இவ்விவாதத்துக்கு முகாந்திரமான கட்டுரையே போதும்.அன்றி, அக்கடிதத்துக்கு கீழே உள்ள அடிக்குறிப்பாக மட்டும் கண்டு மேலே விவாதிப்பது பொருளற்றது.

என் இணைய தளத்தில் அரசியல் விவாதம் வேண்டாம் என்ற முடிவை நான் எடுத்தமைக்குக் காரணம் என்பது இதுவே, அவ்விவாதம் எப்போதுமே இவ்வாறு பரஸ்பர அவநம்பிக்கை, தவறான புரிதலின் அடிப்படையில் நடந்து வீணாக நேரத்தையும் உழைப்பையும் செலவிடுவதில் சென்று முடியும். சிற்றிதழ்கள், இணையம் எங்கும் நிகழ்வது இதுவே. ஓர் எழுத்தாளனாக நான் அப்படி வீணாகி விட முடியாது. ஆகவே நான் அரசியல் விவாதங்களுக்கு தயாராக இல்லை என்பதை மட்டும் சொல்லிவிடுகிறேன். கிறித்தவர் மீதான தாக்குதலுக்கு எதிராக நான் எழுதியது அரசியலை மீறிய ஓர் அற அடிப்படை அதில் இருப்பதனாலும் எழுதவேண்டாமென எண்ணியும் எழுதும் மன உந்துதல் ஏற்பட்டமையாலுமே. கிறித்தவமும் கிறிஸ்துவும் என் ஆன்மீகமான சாராம்சத்தில் உறைகிறார்கள்.

திரு சந்தோஷ் எழுதிய வெளிப்படையான கடிதத்தைக்கூட இந்துத்துவ கடிதமாகக் காணும் உங்கள் அரசியலை நான் புரிந்துகொள்கிறேன். தமிழகத்தின் சுமையே இதுதானே. நீங்கள் நினைப்பதை பிறர் நினைக்காவிட்டால் கிளம்பிவிடுவீர்கள்.

நான் சந்தோஷிடம் எதை ஏற்கிறேன் என்பதை வெளிப்படையாகவே பட்டியலிட்டுவிடுகிறேன். ராமகோபாலன், ஆர்.பி.வி.எஸ்.மணியன் போன்றவர்களுக்கு இந்து மெய்ஞான மரபில் அடிப்படைப் பரிச்சயமோ அதன் மீது மதிப்போ இருக்க நியாயமில்லை என்பதையே அவர்களின் வெறி கொண்ட பேச்சுகள் காட்டுகின்றன என்ற அவரது கூற்றையே நான்

முழுமையாக ஏற்று ஆமோதித்திருக்கிறேன். அவர்களை இந்துஞானமரபின் காப்பாளர்களாகவும் பிரதிநிதிகளாகவும் கருதுவது இந்து ஞானமரபுக்கு இழைக்கும் பெரும் அநீதி. என் கட்டுரையில் இந்துத்துவ முல்லாக்கள் என நான் அவர்களையும் அவர்களைப்போன்றவர்களையும்தான் சொல்கிறேன். சந்தோஷின் அந்த சினம் ஒரு சராசரி இந்துவின் மனச்சான்று சார்ந்தது.

மறுபக்கம் நம்முடைய பிரபல ஊடகங்கள் முழுக்கமுழுக்க ஓரம் சார்ந்தவையாக உள்ளன, அவற்றுக்கு எந்தவிதமான அற அடிப்படையும் இல்லை என்பதே என் எண்ணம். சந்தோஷ் சொல்லும் இதை நானே என் கட்டுரையில் சொல்லியிருக்கிறேன். ஆங்கில இதழாளர்களில் கணிசமானவர்கள் அடிப்படை நேர்மை இல்லாத கூலிப்படையினர். அவர்களுக்கு அளிக்கப்படும் 'விலை' என்ன என்றெல்லாம் அவர்களுடன் இத்தனை வருடங்களாக புழங்கும் நான் அறிவேன். பெரும்பாலான கட்டுரைகளில் அவர்கள் செய்திகளைச் சொல்வதில்லை, திட்டமிட்டு வெறுப்புப் பிரச்சாரத்தையே முன்வைக்கிறார்கள். அதற்கு அவர்களுக்கு 'தூண்டுதல்' அளிக்கப்படுகிறது.

பாபர் மசூதி இடிப்பு ,குஜராத் கலவரம் ஆகியவற்றில் இந்துத்துவர்களின் செயல்களைப்பற்றிய என் கடுமையான வருத்தத்தை, ஆதங்கத்தை, கண்டனத்தை நான் பதிவுசெய்திருக்கிறேன். ஆனால் நம் ஆங்கில இதழ்கள் அச்சம்பவங்களை அதன் பின்னர் எடுத்துக்கொண்டு முன்வைக்கும் முறை இந்த தேசத்தை அழிவுக்கு இட்டுச்செல்லும் நோக்கம் கொண்டது. முஸ்லீம்களுக்கு இந்திய ஜனநாயக அமைப்பிலும், இங்குள்ள அரசு அமைப்பிலும், இங்குள்ள நீதி அமைப்பிலும், சராசரி இந்துவின் நீதியுணர்விலும் எதிலும் நியாயம் கிடைக்க வாய்ப்பே இல்லை என்ற எண்ணத்தையே மீண்டும் மீண்டும் அவை பதிவுசெய்கின்றன.

அக்கருத்துக்களை நாடெங்கும் வந்துகொண்டிருக்கும் நூற்றுக்கணக்கான இஸ்லாமிய அடிப்படைவாத இதழ்கள் மறு பிரசுரம் செய்கின்றன. ஒரு மாதம் குறைந்தது 10 இஸ்லாமிய தீவிர நோக்குள்ள இதழ்களை நான் படிக்கிறேன். அவை அருந்ததி ராயையும், ராஜ் தீப் சர்தேசாயையும் அ.மார்க்ஸையும் எல்லாம் மேற்கோள் காட்டி இந்திய தேசமும் மக்களும் ஒட்டுமொத்தமாகவே இஸ்லாமியருக்கு எதிரானவை என எழுதுவதையே மீண்டும் மீண்டும் நான் வாசிக்கிறேன். இதன் மூலம் இந்திய இஸ்லாமியர் மனதில் கடந்த பல வருடங்களாக இந்திய வெறுப்பும்

மத வெறுப்பும் பாதுகாப்பின்மையும் இங்குள்ள ஊடகங்களால் வளர்க்கப்பட்டு வருகின்றன. அவையே இன்று தீவிரவாதம் உள்நாட்டிலேயே மலைபோல எழுவதற்கான காரணம். இந்த நாடு என்றாவது உள்நாட்டுப் போரால் அழியும் என்றால் அதற்கு மோதி பாணி அரசியல் வாதிகள் பாதி காரணம் என்றால் நமது இதழாளர்கள், அறிவுஜீவிகள் மீதிக்காரணம் என்றே நான் எண்ணுகிறேன். இதைப்பற்றிய சந்தோஷின் ஆதங்கத்தை நான் முழுமையாகவே ஏற்கிறேன்.

மோதி குறித்த சந்தோஷின் கருத்தை நான் ஏற்கவில்லை. மோதியை ஒரு தரமான அரசியல்வாதியாக நான் எண்ணவும் இல்லை. வன்முறைப்பின்னணி கொண்ட எந்த அரசியல்வாதியையும் என்னால் எவ்வகையிலும் ஏற்க இயலாது. இந்துத்துவ அரசியலில் 'பஜ்ரங்தள்மய' மாதலின் முகம் அவர். என் கட்டுரையில் அவரையே நான் கடுமையாக நிராகரித்து இருக்கிறேன் என்பதை எவரும் உணரலாம். மேலும் நேரடியாக குஜராத்தில் பயணம் செய்தவன் என்றமுறையில் குஜராத்தின் வளர்ச்சி பற்றிய பிரச்சாரம் மிகையானது என நான் உறுதியாகவே சொல்வேன். ராஜஸ்தானை ஒட்டிய குஜராத்தே இன்றும் இந்தியாவின் மிக தரித்திரமான பகுதி. மோதியைப்பற்றிய ஆங்கில இதழ்களின் ஒருதலைப்பட்ச பிரச்சாரத்தின் மறுபக்கமாக உருவாக்கப்படும் பிரச்சாரத்தை சந்தோஷ் நம்புகிறார். ஒரு எளிய வாசகன் அந்த இடம் நோக்கி தள்ளப்படுவதை நான் புரிந்து கொள்கிறேன். உண்மையில் ஆங்கில இதழ்களின் காழ்ப்பையே தன் அரசியல் வெற்றிக்கான முதலீடாக எடுத்துக்கொள்கிறார் மோதி.

இந்து மனம் என்பதே இன்று நம் முதிரா அறிவுஜீவிகளால் அவமதிக்கப்பட்டு கூண்டிலேற்றப்பட்டிருக்கிறது. அதை சாதி வெறி மட்டுமே மரபாகக் கொண்ட, எந்த விதமான சிந்தனைப்புலமும் இல்லாத, வன்முறை மிக்க, பழமைவாத கருத்துக்குப்பையாக மட்டுமே காண நம்மை அவர்கள் நிர்பந்திக்கிறார்கள். சராசரி இந்துவின் ஆன்மீக எண்ணமும் கருணையும் நீதியும் கூட எள்ளி நகையாடப்படுகின்றன. உடனடியாக அழிக்கப்படவேண்டிய ஒரு நச்சு சக்தி மட்டுமே இந்துமரபு என்று சொல்லும் நம் அறிவுஜீவிகள் அப்படி ஏற்காத ஒவ்வொருவரையும் இந்துத்துவ அரசியலை நோக்கி தள்ளிக் கொண்டிருக்கிறார்கள்.

கண்டிப்பாக இந்த ஒருபக்கம் சார்ந்த, உள்நோக்கம் கொண்ட, பிரச்சாரத்துக்கு எதிர்வினை இருக்கும். அந்த கோபத்தை நான் சந்தோஷின்

கடிதத்தில் காண்கிறேன். அவர் தன்னை இந்துத்துவ அரசியலில் இருந்து எத்தனை தீவிரமாக விலக்கிக் கொள்கிறார் என்பதற்கு அவரது கடிதமே சான்று. ஆனால் மறுபக்கம் அவர் சார்ந்த சமூகம் மீது வைக்கப்படும் அநீதியான குற்றச்சாட்டு அவரை கொதிப்படைய வைக்கிறது. இன்றைய சராசரி இந்து இளைஞனின் உதாரண மனம் இது. உங்களைப் போன்றவர்கள் அவர்களை இந்துத்துவ அரசியலை நோக்கி தள்ளுகிறீர்கள். உங்கள் கடிதத்தில் கூட அதையே செய்கிறீர்கள். இந்தியா எதிர்நோக்கியிருக்கும் ஆபத்தே இதுதான்.

**

இன்னொரு கடிதத்தில் நான் தெளிவாகவே சொல்லியிருக்கிறேன், ஆர்.எஸ்.எஸ் இயக்கத்தில் இருக்கும் கோணலின் விஸ்வரூபமே பஜ்ரங்தள் என்று. விதை அங்கேதான் உள்ளது என்று. அது வேறு இது வேறு என்றல்ல. ஏன், என் முதல் கட்டுரையில் மிக விரிவான முறையில் இதை விவாதித்திருக்கிறேன். அதைக்கூட கவனிக்கமுடியாத அரசியல் மூர்க்கத்துடன் விவாதிப்பதையே நான் வீண் என்கிறேன்.

ஸ்டாலினுக்கும் லெனினுக்கும் சம்பந்தம் இல்லை என்ற உங்கள் கூற்றையெல்லாம் இப்போது விவாதிக்க அவகாசமில்லை. ஐம்பதாண்டுக்காலம் இருவரும் ஒன்றே என்று உலகக் கம்யூனிஸ்டுகள் வாதாடினார்கள். இன்றும் உலகில் உள்ள இடதுசாரிக் கட்சிகளில் மிகப்பெரும்பாலானவை ஸ்டாலினை லெனினின் இன்றியமையாத நீட்சி என்றே நினைக்கின்றன. நம்முடைய எல்லா கம்யூனிஸ்டுக் கட்சிகளும் அதையே சொல்கின்றன. நீங்கள் அவர்களுடன் விவாதிக்க மாட்டீர்கள். ஸ்டாலினின் அழிவுத்தாண்டவத்தை எவராவது எடுத்துச் சொன்னால் மட்டும் லெனினைக் காப்பாற்ற முன்வருவீர்கள்.

கருத்தியக்கத்தை இயந்திரத்தனமாக அணுகும் மூர்க்கம், ஜனநாயக மறுப்பு, மையப்படுத்தப்பட்ட அதிகாரம் போன்று லெனினிடம் இருந்த ஒடுக்குமுறை அம்சங்களே ஸ்டாலினில் உச்சம் பெற்றன. அவை மார்க்ஸியத்தின் அரசியல் திட்டத்தில் உள்ளுறையாகவே இருந்தன.அதை மிக விரிவாகவே என் நாவலில் பேசியிருக்கிறேன். மேலைநாட்டினர் சொன்னால்தான் நீங்கள் மேற்கோள் மூலம் நம்புவீர்கள் என்றால் ஜீன் பால் சார்த்ர் முதல் ஐசக் டொய்ட்ஷர் வரை ஒரு பெரும் வரிசை ஆய்வாளார்கள் உள்ளார்கள்.படியுங்கள்.

*

நான் இந்து ஞான மரபை என் பாரம்பரியமாக எண்ணுபவன். அதன் தத்துவச் செல்வம், அதன் கலைகள், அதன் பேரிலக்கியங்கள் மானுடத்தின் சொத்து என்று உணர்ந்தவன். அது இல்லாவிட்டால் நான் வெறும் ஐரோப்பிய நகலாக வெறும் நுகர்வோனாக மாறிவிடுவேன் என நினைப்பவன். என் படைப்பியக்கத்தின் வேர்நிலமே அது என நம்புகிறவன்.

இம்மரபு இந்த நிலத்தில் மிகச்சிக்கலான ஒரு முரணியக்கம் மூலம் உருவாகி வளார்ந்தது. அதன் சமூகவியல் வளர்ச்சி, அதன் தத்துவ வளர்ச்சி எல்லாவற்றையும் முரணியக்கம் என்ற கோணத்தில் அணுகினால்தான் புரிந்துகொள்ள முடியும். ஒன்றுக்கொன்று முரண்படும் பல்வேறு கூறுகள் கொண்டும் கொடுத்தும் வென்றும் அடங்கியும் நூற்றாண்டுகளாக பரிணாம வளர்ச்சிபெற்ற நாகரீகம் இது. அதில் உள்ள அநீதிகள் அழிவுகள் அனைத்தும் எனக்கு தெரியும். அத்தகைய அநீதியும் அழிவும் இல்லாத பண்பாடே இல்லை என்று நான் எண்ணுகிறேன். நவீன மனம் அந்த அழிவின் அநீதியின் வேர்களைக் களைந்து மரபின் சாரத்தை மீட்டெடுக்கும்.

இன்று இந்தப் பண்பாட்டில் உள்ள எல்லாக் கூறுகளும் இதன் இன்றியமையாத உறுப்புகளே என்று எண்ணும் பக்குவம் உருவாக வேண்டும் என்று நினைக்கிறேன். வென்றவையும் தோற்றவையும் எல்லாமே இணையான முக்கியத்துவம் பெற வேண்டும். ஒவ்வொன்றும் அதற்கான தனித்துவத்துடன் இயங்கும் வெளியாக இந்து ஞான மரபு இருந்தாக வேண்டும். ஒரு நிறுவனமாக அல்லாமல் ஒரு மாபெரும் உரையாடலாக இந்து ஞானமரபு நிகழ வேண்டும். அப்படி இந்து ஞான மரபை அணுகிய நாராயண குருவும் அவரதுமாணவர்களான நடராஜகுருவும் நித்ய சைதன்ய யதியும் ஒஷோ போன்றவர்களும்தான் என் முன்னுதாரணங்கள்.

இதற்குத் தடையாக இருப்பது இந்துஞான மரபை ஒரு ஒற்றைப்படையான கட்டமைப்பாக அணுகும் போக்கு ஆகும். இந்து ஞானமரபு அளிக்கும் எல்லையற்ற சுதந்திரத்தை இவ்வணுகுமுறையானது இல்லாமல் செய்கிறது. அதன்மூலம் காலப்போக்கில் இந்துஞானமரபை அது அழிக்கும். இந்த ஒற்றைப்படை நோக்குக்கு எதிராகவே இந்த இணையதளத்தில் மீண்டும் மீண்டும் நான் எழுதி வருகிறேன்.

இந்துத்துவ அரசியல் இந்து மரபின் அடையாளங்களை அரசியலாக்கம் செய்வதன் மூலம் இந்த ஒற்றைப்படையாக்கத்தை நிகழ்த்துவதனால் அதை நான் அபாயகரமானதாக அணுகுகிறேன். அதன் வன்முறை காரணமாக அதை எதிர்க்கிறேன். அதேசமயம் இந்து மரபையே அழித்தாக வேண்டுமென செயல்படும் நம்முடைய கூலிப்படை அறிவுஜீவிகளை இந்து மரபில் வேரூன்றியவன் என்ற முறையில் எதிர்க்கிறேன். ஆகவே அவர்களால் இந்துத்துவன் என்று முத்திரை குத்தப்படுகிறேன். அதைப்பற்றி எனக்கு இம்மி கூட கவலை இல்லை. எழுத்தாளனுக்கு சமகாலத்தில் பெரும்பான்மை அங்கீகாரம் பெற்றாகவேண்டுமென கட்டாயம் ஏதும் இல்லை.

## (6) இந்துத்துவம் ,காந்தி

அன்புள்ள ஜெ,

மத்தியில்பாஜக ஆட்சிக்கு வந்தபின்பு எழும் இந்துத்துவ முழக்கங்களும் பரப்புரைகளும் எல்லாம் ஏதோ சில குறுங்குழுக்களின் குரல்கள் என நீங்கள் சொல்வதை நம்பக் கடினமாக உள்ளது. குறிப்பாக சிறுப்பன்மை மக்களின் பார்வையில் இவை அனைத்தும் ஒரே தரப்புகளாகவே தோற்றமளிக்கின்றன. அதேபோலவே நீங்கள் சொல்லும் காந்தி எதிர்ப்பு இஸ்லாமிய, மார்க்ஸிய கமூனிஸ, கிறித்துவ தரப்புகளும் சிறு குழுக்களே அன்றி எல்லோருக்கும் பொதுவானவை அல்ல என்றும் நம்மால் உணர முடியும்.

கடந்த வருடம் நம்வாழ்வு கத்தோலிக்க இதழில் காந்தியின் சில கொள்கைகளை விமர்சித்து கொஞ்சம் கடினமான வார்த்தைகளில் வெளிவந்த தொடர் ஒன்று கிறித்துவ மக்களின், பாதிரியார்களின் எதிர் குரலால் இடையிலேயே நிறுத்தப்பட்டது நினைவில் வருகிறது. இன்றைய கோட்சே சிலை விவகாரத்துக்கும் இவற்றிற்கும் உள்ள மிக முக்கியமான வித்தியாசம் இது பொதுவெளியில் நடைபெறுகிறது என்பதே. காந்திய மறுப்பு என்பது நீங்கள் குறிப்பிட்ட பிற குழுக்களில் ஒரு ஐடியலாஜிக்கல் தளத்தில் நடைபெறுகிறது. அதற்கு ஐம்பது வருடகால வரலாறு உள்ளதென்றால் இதுவரை அவர்கள் பொதுவெளியில் காந்தியை வசைபாடியதாகவோ, அவரது சிலைகளை உடைத்து அவமதித்ததாகவோ அல்லது தற்போது டி.வி ஷோக்களில் சர்வசாதாரணமாக 'காந்தி தேசத் தந்தை அல்ல' என்று இந்துத்துவர்கள் முழங்குவதைப்போலவோ நான் எதையும் கண்டதில்லை.

காந்திக்கு எதிராக பரப்புரைகள் நிகழ்ந்தன என்றுகூட எனக்குத் தெரியாது. அவரவர் உள்கூட்டங்களில் உரையாடல்களில் சில பிரசுரங்களிகூட நிச்சயம் இது நடந்திருக்கும். காந்தி அறிவார்ந்த விமர்சனத்துக்கு அப்பாற்பட்டவர் அல்ல. அதே நேரம் நம் நாட்டில் மட்டுமல்ல உலகளவில் அவருக்கிருக்கும் புனிதத்தன்மைக்கு மதிப்பு தர வேண்டிய அவசியமும் உள்ளது.

பாஜக ஒரு குறிப்பிட்ட ஐடியாலஜியின் அரசியல்முகம். அது அரசியல் பலத்தை அடையும்போது அந்த ஐடியாலஜியின் எல்லா தரப்புகளும் வலிமைபெற்றெழுகின்றன. பாஜக 'டெவலப்மெண்ட்' குறித்து முன்வைத்த

தேர்தல் விளம்பரங்கள், அறிக்கைகளின் கூடவே இந்துத்துவா மற்றும் இந்திய கலாச்சார மைனாரிட்டிகள் குறித்த நிலைப்பாட்டையும் விரிவாக முன்வைத்திருக்க வேண்டும். ஆனால் அது அடிப்படைவாதிகளின் ஆதரவை குறைக்கும் என்பதால் எப்படியாவது பதவிக்கு வந்துவிட வேண்டும் என்கிற குறிக்கோளில் அது தவிர்க்கப்பட்டது. இன்றும் பாஜக தினசரி சமாளிப்புகளின் மூலம் இவற்றை கடந்து சென்றுகொண்டிருக்கிறதே அல்லாமல் திட்டவட்டமாக எதையும் சொல்லிவிடவில்லை.

குஜராத்திற்கு பயணித்து திரும்பும் என் நண்பர்கள் ஒவொருவரும் குஜராத் கலவரங்கள் ஒரு கலாச்சார விளைவு என்று கூறுகிறார்கள். அது என்ன என்றால். குஜராத்தின் மைனாரிட்டி இஸ்லாமியர்கள் அதிக திமிரானவர்கள், அவர்களிடமே அதிக சொத்தும், தொழில்களும் உள்ளன அங்குள்ள இந்துக்களை விட வாய்ப்பும் வசதியும் இவர்களுக்கே அதிகம் இருந்தன எனும் மனப்பதிவு குஜராத் இந்துக்களிடமிருந்தது. அவர்கள் திருப்பியடிக்க திமிருக்கு பாடம் புகட்ட ஒரு வாய்ப்புக்காக காத்திருந்தனர்.

நாஜி ஜெர்மெனியில் யூதர்களுக்கு எதிராக கூறப்பட்ட அதே வாதங்களாகவே இவை எனக்குத் தோன்றின. இவற்றில் உண்மை இருந்தாலும் அதை அதன் கொடூர விளைவுக்கு இட்டுச் செல்வதின் பின்னணியில் ஒரு அரசியல் நிச்சயம் இருக்கிறது. ஜெர்மெனியில் பிரச்சாரங்களும் பிரசுரங்களும் யூதர்களுக்கு எதிராக உருவாக்கப்பட்டன. அவர்கள் அழிக்கப்படவேண்டியவர்கள் எனும் எண்ணத்தை ஜெர்மானியர்களின் மனதில் விளைக்க பல முயற்சிகளும் தொடர்ந்து எடுக்கப்பட்டன. இறுதி விளைவுகள் ஒப்பிடக்கூடியவையே.

இன்றைக்கும் தேசிய அளவில் இப்படி ஒரு முயற்சி நடந்துகொண்டிருக்கிறதோ என்று எனக்குத் தோன்றுகிறது. தொடர்ந்து இந்துத்துவ கடுங்கூற்றுக்கள், அடிப்படைவாத கோஷங்கள் ஊடகங்கள் எங்கிலும் பரவிக்கிடக்கின்றன. பாஜக பேச்சாளர் ஒருவர் நாமே பல்லாயிரக்கணக்கான வருடங்கலாக சர்வைவ் ஆகிவரும் இனம் ஆக இங்குள்ள வழிமுறைகளே டார்வினின் கோட்பாட்டின்படி சிறந்தவை என்று உளறுகிறார். அவருக்கு யாராவது நாம் மட்டுமல்ல இன்று உயிருடன் வாழும் ஒவ்வொருவருமே டார்வினின் கூற்றின்படி இந்த வழியில் வந்தவர்களே என்று சொல்லலாம். இதுபோன்ற அறிவியலைப்போன்ற கதையாடல்கள் தொடர்ந்து பாஜகவின் பேச்சாளர்களால் முன்வைக்கப்படுகிறது.

நம் பாரம்பரியங்களின் மீது மிகுந்த பெருமிதம் நம் எல்லோருக்கும் நிச்சயம் தேவை ஆனால் நம் பார்வை பின்னோக்கி அல்ல முன்னோக்கியே செல்ல வேண்டும். கிரேக்க தத்துவமும், அறிவியலும் நவீன அறிவியலால் வெறும் புராணங்களின் நிலைக்கு தள்ளிவிடப்பட்டு இன்று நவீன அறிவியல் சென்று கொண்டிருக்கும் தொலைவை நாம் பின்னோக்கிச் சென்று எட்ட முடியுமா தெரியவில்லை. நாம் நம் வரலாற்றின் மீதும் கலாச்சாரத்தின்மீதும் நமக்கு ஏற்படுத்தப்பட்டிருக்கிற தாழ்வுமனப்பான்மையை களைய வேண்டும் என்பது உண்மை. இதை இன்று பல்வேறு அறிவுத் துறைக்ளிலும் சாதித்துக்கொண்டிருக்கும் இந்தியர்கள் செய்துகொண்டிருக்கிறார்கள். இந்தச் சமூகம் அவர்களை நோக்கிச் சென்றாலே போதுமானதாய் இருக்கும்.

நம் கலாச்சாரத்தில் ஓங்கி நின்ற பல அறிவுத்துறைகள் ஏதோ வகைகளில் இந்த மண்ணில் தொடர்ச்சியற்று போயின. இன்று நம் வாழ்கை முறை மேறிகின் அறிவியலை பின்பற்றியதாக இருக்கிறது. இந்தியாவின் பல “பின்தங்கிய” இடங்களிலும் இன்றைக்கும் நாம் பழைய வாழ்கை முறைகளை பின்பற்றுகிறோம் என்றாலும், அங்கேயும் நாம் வழங்க விரும்புவது ‘டெவலப்மெண்ட்’ எனும் மேற்கின் போக்கையே. இன்றைய நிலையில் நவீன அறிவியல் ஒன்றே எல்லோருக்கும் ஓரளவேனும் சமமான நல்வாழ்கை ஒன்றை தரமுடியும். நாம் சிறந்து நின்ற அறிவுத்துறைகளிலிருந்து அவற்றை இன்றைய காலகட்டத்தின் வாழ்கைக்கு பொருத்திச் சொல்லவேண்டிய தேவை நமக்குள்ளது. கட்டடக்கலை, கணிதம், உயர்தத்துவம், போன்றவை இன்றைக்கும் நம்மால் மீட்டெடுக்க முடியக்கூடியவை.

ஆனால் வெற்றுப் பெருமிதங்களை திரும்பத் திரும்பச் சொல்வதன் மூலம் நாம் இதை ஒரு கேலிப்பொருளாக்கிக்கொண்டிருக்கிறோம். இதற்குப்பதில் நாங்கள் இதுவரை ஒன்றும் செய்துவிடவில்லை ஆனால் இனிமேல் செய்கிறோம் என்று சொல்லிவிடலாம். நம் கலாச்சாரமும் வரலாறும் ஒருசில கதைகளை மட்டுமே முன்வைத்து சொல்லப்படுகின்றன என்றே தோன்றுகிறது. கூடவே இதில் ஒளிந்திருக்கும் சாதியப் பெருமிதமும் கணக்கில் கொள்ள வேண்டியது. ஆக ஒரு அசலான, உண்மையான, இன்றுவரைக்கும் மொத்த மனித இனமும் கண்டுவந்திருக்கும் நுண்ணறிவியலுக்கும் பொருந்தக் கூடிய விஷயங்களன்றி வேறெதையும் நாம் உலகின் முன்வைக்க முடியாது.

ஆனால் தொடர்ந்து நாம் இந்த பிளாஸ்டிக் சர்ஜரி, சூப்பர் சானிக் கதைகளை கேட்டு வருகிறோம். இந்துத்வ சிந்தனையில் இருக்கும் வெற்றுப் பெருமிதமும் பழமைவாதம் மட்டுமே இதன் மூலம் தெரியவருகிறது. நாம் நம் பாரம்பரியத்திலிருந்து இந்த நவீன உலகிற்கு அளிக்க விரும்புவது என்ன என்பதைத் தேடியடையவேண்டிது அவசியமேயன்றி நம்மை ஒட்டுமொத்தமாக பல நூற்றாண்டுகள் பின்னிழுத்துச் செல்வதல்ல இன்றைய தேவை.

ஊடகங்களை கவனித்தால் தொடர்ந்து இந்த போலி அறிவியல் கூற்றுகளும், சிறுபான்மையினருக்கு எதிரான கோஷங்களும் அவதூறுகளும், இந்திய ஜனநாயகத்தின் மீதான மட்டையடி விளாசல்களும் வந்துகொண்டேயிருக்கின்றன. இதை ஒரு சில ஃபிரிஞ் அமைப்புகளின் வேலை மட்டும் என்று எடுத்துவிடாமல் இதை தொடர்ந்து அனுமதிக்கும் ஒரு அமைப்பை நாம் உருவாக்கியுள்ளோம் என்பதையும் உணரவேண்டியுள்ளது.

அது ஊடகங்களில் தன் ஆதிக்கத்தை செலுத்தியுள்ளது, இந்திய அறிவியல் நிறுவனங்களில் நுழைந்துள்ளது, கல்வியமைப்பில் கைவைக்கத் தவறவில்லை. கிறித்துவர்களுக்கென இந்த நாட்டில் இப்போது வழக்கத்தில் இருக்கும் ஒரே விடுமுறையான கிறிஸ்துமஸையும் இது கிட்டத்தட்ட அதிகாரபூர்வமாக மறுக்கிறதென்றால். இதை எப்படி ஒரு சில அமைப்புகளின் செயல்பாடு என்று ஒதுக்க முடியும்? இந்து முஸ்லிம்,. கிறித்தவர் இன்னும் எத்தனையோ கலாச்சார பிரிவுகளும் இந்தியனாக ஒன்று நின்று பெற்ற சுந்திர இந்தியாவில் ஒரு ஜனநாயக அரசாங்கம் இப்படி செய்யுமென்றால் பிற அமைப்புகளை குறை சொல்வானேன்.

Tyranny of the majority எனும் ஒரு கருத்து ஜனநாயகம் துவங்கப்பட்ட காலத்திலிருந்தே விவாதிக்கப்படுகிறது. ஜனநாயகத்தின் அடிப்படை கோளாறு (Flaw) இது. அதாவது ஆட்சி அதிகாரம் ஒரு கலாச்சார மெஜாரிட்டியின் கையில் செல்லுமானால் அந்த கலாச்சார பெரும்பான்மையினர் பிற கலாச்சார சிறுபான்மையினரை ஒடுக்குவார்கள். என்பதுவே அதன் அடிப்படை. இது அரசியலிலும் தத்துவத்திலும் விவாதிக்கப்பட்டிருக்கிறது. இந்தியாவில் இன்று நிகழ்ந்துகொண்டிருக்கும் ஆட்சிக்கு இப்படி ஒரு முகம் உள்ளதோ எனும் சந்தேகம் இயல்பாக எழுகிறது. தொடர்ந்து சிறுபான்மையினர் மீது வெறுப்பை உருவாக்கும் பேச்சுக்கள் வந்துகொண்டேயிருக்கின்றன. ‘தாய்மதம்’ எனும் ஒரு போலி கருத்தாக்கம்

உருவாக்கப்படுகிறது. எனது தாயையும் எனது தாய்மதத்தையும் நானல்லவா முடிவு செய்யவேண்டும்?

இன்றைக்கு செய்யப்படும் மதமாற்றங்களுக்கு முகலாயர் காலத்து வரலாறுகளைத் தேடி எடுத்து காரணம் கொடுக்கின்றனர். இதுதான் நாம் கட்டமைத்திருக்கும் ஜனநாயகமா? நாம் நம்மை கண்டடைய வரலாற்றின் எத்தனை பக்கங்கள் பின் சென்றால் போதுமானது எனும் வரையறைகள் ஏதேனும் உள்ளதா? சிறுபான்மை மக்களும் அவர்களின் கலாச்சாரமும் வாழ்கையும். தத்துவமும் இந்தப் பெரும் நாட்டுக்கு ஒரு துளி நன்மையையேனும் செய்துவிடவில்லையா என்ன? சிறுபான்மையினர் எல்லோரும் வேற்றுநாட்டிலுள்ள தாய்தந்தையருக்குப் பிறந்தவர்களா? திரும்பத் திரும்ப இந்தக் கேள்விகளைத் தூண்டும் விவாதங்களே ஊடகங்களிலும், சிலநேரங்களில் ஆட்சியிலுள்ளவர்களிடமிருந்தும் வந்துகொண்டிருக்கின்றனர்.

ஒரு ஜனநாயகத்தின் பலம் ஒரு கலாச்சார பெரும்பான்மை கலாச்சார சிறுபான்மையை பேணும் பாங்கிலேயே வெளிப்படுகிறது எனலாம். இந்திய ஜனநாயக அமைப்பை பல நூறாண்டுகள் பின்னோக்கி எடுத்துச் செல்லும் முயற்சிகள் இப்போது நடந்துகொண்டிருக்கின்றன. கலாச்சார சிறுபான்மையினருக்கு சமமான குரல் ஜனநாயகத்துக்குள் எழவேண்டும் என்பதால்தான் அவர்களுக்கு சில சலுகைகள் இருக்கின்றன.

மிக விரிவாக இவற்றை எழுதவும் விவாதிக்கவும் வேண்டியுள்ளது. உண்மையில் எனக்கு தனிப்பட்டமுறையில் இதில் மனக்குறை என்று ஒன்று உண்டென்றால் அது சிறுபான்மை நிறுவனங்களின் தார்மீகத் தோல்வியே. அவர்கள் இந்த நாட்டில் நியாயமான கேள்விகளை எழுப்பும் தகுதியை இழந்துவிட்டார்களோ என சந்தேகிக்கிறேன். அவர்களும் இந்த நாட்டின் அதிகார அமைப்புகளுடன் பல்வேறு சமரசங்களை செய்துகொண்டுள்ளார்களோ என சந்தேகிக்கிறேன். இல்லையென்றால் அவர்களின் செவுளில் அறையும் மௌனத்தை எப்படி புரிந்துகொள்வது.

இந்த கோஷங்களும் தொடர் அவதூறுகளும் கர் வப்ஸி போன்ற பெரும்பான்மையின் வன்செயல்களும் ஒரு பெரும் வன்முறையை நோக்கியே சென்றுகொண்டிருக்கின்றன என்பது என் எண்ணம். இது 'உடையு, இந்தியா'த்தனமான ஒரு கான்ஸ்பிரஸி தியரியாகத் தோன்றலாம். அல்லது அடிபடும் முன்பே எழும் அழுகுரலாகவும் புரிந்துகொள்ளப்படலாம்.

எப்படியானாலும் இந்த நாட்டின் நடுநிலையாளர்களும், அறிவின் மீதும் அறிவியலின் மீதும் நம்பிக்கையுடையவர்களும் இந்த நாட்டின் ஜனநாயகத் தன்மைமீது மதிப்பும் நம்பிக்கையும் உடையவர்களும் தங்கள் மௌனங்களை சமரசமின்றி கலைக்க வேண்டும்.

உண்மையில் பாஜக மத்தியில் கொண்டுவந்துள்ளது அதே காங்கிரஸ் அரசாங்கமே. இந்துத்து அடிப்படைவாதம் இலவச இணைப்பாக இணைந்துள்ளது. அதை மடியில் கட்டிய ஓணான் என நீங்கள் சொல்கிறீர்கள் நான் அதை அவர்களின் செல்லப்பிள்ளை என சந்தேகிக்கிறேன். ஒருபுறம் பாக்கிஸ்தானையும், ஆப்கானிஸ்தானையும் மத்தியகிழக்கையும் விமர்சித்துக்கொண்டு இன்னொருபுறம் அவற்றைப்போன்றதொரு ஐடியாலஜியை இங்கே கொண்டுவர முயல்வது. இந்துத்துவா மட்டுமல்ல கலாச்சார தூய்மைவாதம், கலாச்சார அடிப்படைவாதம் எல்லாமே வேகமாக காலவதியாகிவருகின்றன நாமோ எல்லாவற்றையும் முதலிலிருந்து துவங்குகிறோம். உங்களிடமிருந்து ஒரு முழுமையான பதிலை எதிர்பார்க்கிறேன்.

இதை தளத்தில் வெளியிடும்பட்சத்தில் என் பெயரை சேர்க்க வேண்டாம். உண்மையில் இங்கிருக்கும் நிலவரங்களை என்னால் சரியாக எடைபோட முடியவில்லை.

அன்புடன்

x

அன்புள்ள நண்பருக்கு,

உங்கள் கடிதத்தின் கடைசி வரிதான் முக்கியமான விமர்சனம். மிகவும் சங்கடமளிக்க்க்கூடியது அது.

நான் கிறித்தவப்பெரும்பான்மை உள்ள ஒரு மாவட்டத்தில் பிறந்து வளர்ந்தவன். இங்கே இந்துத்துவம் கால்பதிப்பதற்கு முன்னரே கடுமையான காந்திவெறுப்பு கல்விமட்டத்திலேயே எனக்குக் கிடைத்தது. அதை இங்கே பரப்பியவர்கள் கிறித்தவ, கம்யூனிசக் கருத்தியல் கொண்டவர்கள். காந்தியை வசைபாடிய கிறிஸ்தவ ஆசிரியர்களிடமிருந்தே நான் காந்தியை அறிந்துகொண்டேன் என்றுகூட சொல்லலாம்.

இது இன்றும் தொடர்கிறது. என் மகனும் மகளும் படித்த பள்ளிகளில்கூட இது நிகழ்ந்தது. எட்டாம் வகுப்பு படித்தபோது காந்தி இரு பெண்களைக் கற்பழித்தவர் என்று அவளுக்கு ஓர் ஆசிரியர் கற்பித்தபோது என் மகள் அழுதுகொண்டே பள்ளியில் இருந்து வந்திருக்கிறாள். நான் என் மகள் படித்த கான்வெண்ட் பள்ளிக்கே சென்று காவல்நிலையத்தில் புகார்கொடுப்பேன் என்று மிரட்டியிருக்கிறேன். பள்ளி இறுதி படிக்கையில் இன்னொரு ஆசிரியர் காந்தி தீண்டாமையைக் கடைப்பிடித்தார் என்று பேசியபோது என் மகளே எழுந்து தட்டிக்கேட்டிருக்கிறாள்.

நான் பல கிறித்தவக் கல்விநிறுவனங்களில் கடுமையான காந்தி வெறுப்பு கற்றுக்கொடுக்கப்படுவதை நேரில் கண்டிருக்கிறேன். சுந்தர ராமசாமி மதுரை இறையியல் மையத்தில் ஒருமுறை தங்கியிருந்தபோது 'கேடுகெட்ட நாயே' என்று காந்தியை வசைபாடும் பாடல் ஒன்றை அங்குள்ள குழந்தைகள் அதிகாலையில் பாடுவதைக் கேட்டு கண்ணீர் விட்டதை சொல்லியிருக்கிறார். மிகப்புகழ்பெற்ற அதே கல்லூரியில் அதே பாடலை நான் மேடையில் கேட்டிருக்கிறேன்.[இங்குலாப் என்ற திராவிட இயக்கக் கவிஞர் எழுதியது] நாகர்கோயில் இறையியல் மையத்தில் புனித சவேரியார் கல்லூரியில் அதேபோன்ற வசைகளைக் கேட்டிருக்கிறேன்

கேரளத்தின் காந்திய வெறுப்பு என்பதும் அப்படி கம்யூனிஸ்டுகளால் பரப்பப்பட்டதே. கொஞ்சநாள் முன் அருந்ததி ராய் காந்தியை இந்தியா கண்ட மாபெரும் சாதிவெறியர் என்றும் அவரது பெயரை பல்கலையில் இருந்து நீக்கவேண்டும் என்றும் பேசியதை அறிந்திருப்பீர்கள். அருந்ததி இந்துத்துவர் அல்ல. கிறிஸ்தவர். அன்று அவருக்கு எதிர்ப்பு தெரிவித்தவர்கள் நாராயணகுருவின் இயக்கத்தினர் மட்டுமே. கம்யூனிஸ்டுகளோ கிறிஸ்தவர்களோ அல்ல.

இங்குள்ள திராவிட இயக்கத்தினர் காந்தியை எந்தக் கொள்கை அடிப்படையிலும் எதிர்க்கவில்லை. அவர் பெண்களின் தோளில் கையிட்டு நடந்துசெல்வதைத்தான் மேடைமேடையாக அண்ணாத்துரை ஆபாசமாக நக்கல் செய்தார். அதற்கு ஜெயகாந்தன் அளித்த கடுமையான எதிர்ப்பும் பதிவாகியிருக்கிறது. இங்கே இந்துத்துவம் வேரூன்றுவதற்கு ஐம்பதாண்டுகளுக்கு முன்னரே காந்தியை சாதிவெறியர், மதவெறியர் என முத்திரைகுத்தும் அரசியல் நிலைபெற்றுவிட்டது.

தமிழில் காந்தியைப்பற்றிய மிகக் கீழ்த்தரமான அவதூறு நூல்களை எழுதியவர்கள் எஸ்.வி.ராஜதுரை போன்ற இடதுசாரி – திராவிடவாதிகள்தான். எஸ்.வி.ராஜதுரையின் 'இந்து இந்தி இந்தியாவை' வாசித்துப்பாருங்கள். இங்குள்ள திராவிட இயக்கத்தவர் நடுவே மிகச்செல்வாக்குள்ள இந்நூல் இந்துத்துவத்தின் முதன்மைச் சிந்தனையாளரே காந்திதான் என வாதிட்டு நிறுவுகிறது! அவர் செய்ததெல்லாம் இந்தியாவில் அவரது பனியா சாதி ஆதிக்கம் பெறுவதற்கான உத்திகள் மட்டுமே என சொல்கிறது. கீழ்நத்தரமான தந்திரசாலி காந்தி என விவரிக்கிறது. இதுதான் காந்திமீதான கருத்தியல்சார்ந்த ஆக்கபூர்வமான விமர்சனம் என்கிறார்களா?

நான் 'இன்றைய காந்தி' எழுதியபோது எனக்கு காந்திபற்றி வந்த கடிதங்கள்,அவதூறுகள், வசைகளில் இந்துத்துவர் எழுதியவை சிலவே. பெரும்பாலானவை இடதுசாரிகளாலும், தலித்தியர்களாலும், திராவிட இயக்கத்தினராலும் எழுதப்பட்டவை. அவையெல்லாம் காலாகாலமாக இங்கே சொல்லப்பட்டவை. அவற்றுக்குத்தான் நான் பதில் சொல்லியிருக்கிறேன். அந்நூல் அவர்களிடமே உரையாட முயல்கிறது

சும்மா ஒருமுறை இணையத்தில் தேடி வாசித்துப்பாருங்கள். காந்தி பற்றிய வசைகள், அவதூறுகளை அதிகமாக யார் எழுதியிருக்கிறார்கள் என்று தெரியும். யாருக்கு காந்தி அவசியமோ, யார் காந்தியை தங்கள் பதாகையாகக் கொள்ளவேண்டுமோ அவர்கள்!

அவர்கள் செய்த அந்தபிழையின் மேலேயே இந்துத்துவத்தின் காந்திய வெறுப்பு ஏறி அமர்ந்திருக்கிறது என்பது தமிழகம், கேரளத்தைப் பொறுத்தவரை ஓர் உண்மை. இந்த அப்பட்டமான உண்மையை மழுப்பிக்கொண்டு மேலே பேசுவதில் பொருள் இல்லை.

இனிமேலாவது அந்த மனநிலையில் இருந்து வெளியே வரவேண்டும் என்பதே நான் சொல்வது. காந்தி இங்குள்ள ஜனநாயகவாதிகள் அனைவருடைய பதாகையாக ஆகவேண்டும். வேறுபாடுகளுக்கு அப்பால் மனிதர்களைத் தொகுக்க அவரால்தான் முடியும். இந்துக்களின் மனசாட்சியுடன் பேசிய நவீன இந்து அவரே. இந்துத்துவ அரசியலை இந்து எதிர்ப்பாளர்களால் ஒருபோதும் வெற்றிகரமாக நிகழ்த்த முடியாது. அதற்கு இந்துக்களின் மரபுடன், ஆன்மாவுடன் பேசும் காந்தியைப்போன்ற ஒருவராலேயே முடியும்.

நான் சொல்ல வருவது இதையே. கடந்த இருபதாண்டுக்காலமாக மீண்டும் மீண்டும் சொல்லிவருவதும் இதைத்தான்

*

காந்தியின் கொலையாளியை வீரவழிபாடு செய்ய முன்வந்திருப்பவர்கள் இந்துத்துவ உதிரி அமைப்புகள் என்றுதான் நான் சொல்கிறேன். ஆர்.எஸ்.எஸ், பாரதிய ஜனதா மட்டும் அல்ல காங்கிரஸ் கூட அதற்கு எதிராக பெரிய எதிர்ப்பை தெரிவிக்காமல் அடங்கியே செல்கிறார்கள்.

ஆர்.எஸ்.எஸ், பாரதியஜனதா இரண்டும் இவ்விஷயத்தில் உண்மையான நேரடியான நிலைபாடு எடுத்து கோட்சேயை அவர்கள் ஆதரிப்பதாகச் சொல்வார்கள் என்றால் இந்திய அரசியலிலேயே ஒரு தெளிவான துருவப்படுத்தல் உருவாகும் என்பதே என் கருத்து. அது ஜனநாயகத்தைப்பற்றிப் பேசுவதற்கு மிக உகந்தது. காந்தியா கொட்சேவா யார் தேவை என இந்தியா முடிவெடுக்கட்டும் என்று தான் எழுதியிருக்கிறேன்.

மற்றபடி அனைத்து ஊடகங்களிலும் மெல்லமெல்ல பரப்பபடும் இந்துத்துவ மூர்க்கம், ஆட்சியாளர் தரப்பில் உள்ள ஜனநாயகத்துக்கும் மதச்சார்பின்மைக்கும் எதிரான ஆணவம் இந்த தேசத்தின் சிறுபான்மையினரை அன்னியப்படுத்தும் கண்மூடித்தனம் அச்சமூட்டுகிறது. பல தளங்களிலும் இந்தியா இந்துத்துவத் தாலிபானியம் நோக்கிச் செல்கிறது என்பதே என் எண்ணம்.

ஆரம்பம் முதலே இந்த மாற்றத்தை ஐயத்துடன் பயத்துடன் மட்டுமே நான் அணுகி வந்தேன். இன்று இந்துத்துவ தரப்பிலேயேகூட காந்திய நோக்கும், சற்று நிதானமும் கொண்ட குரல்கள் அமுக்கப்பட்டு மறைக்கப்பட்டு நாலாந்தர மேடைக்குரல்கள் ஓங்கி ஒலிக்கத் தொடங்கியிருக்கின்றன. நான் சுட்டிக்காட்டியிருப்பது இந்த மாற்றத்தையே.

ஆனால் அது இப்போது ஆரம்பித்தது அல்ல. அது தொடங்கி பல ஆண்டுகளாகின்றன. இந்துத்துவ தாலிபானியம் என நான் எழுதியதற்கு வந்த எதிர்வினைகளை நினைவுகூர்வீர்கள் என நினைக்கிறேன். இந்துத்துவ லும்பன் குழுக்களின் குரல் எழுவதும் செல்வாக்கு பெறுவதும் தான் உண்மையான சிக்கல் என நான் நினைக்கிறேன்

அதை எதிர்ப்பதற்கான வழி என்பது இஸ்லாமியத் தீவிரவாதக் குழுக்களுடன் கைகோர்த்து அரசியல் பேசுவது அல்ல. இந்து மதத்தையும் இந்தியப் பண்பாட்டையும் இந்தியத் தேசியத்தையும் ஒட்டுமொத்தமாக எதிர்த்து சிறுமைப்படுத்தும் பொறுப்பற்ற அரசியலும் அல்ல.

இந்துத்துவ எதிர்ப்பு அரசியல் பேசுபவர்களின் இந்த கண்மூடித்தனமான மூர்க்கமே இந்தியப்பெரும்பான்மையை இந்துத்துவத் தீவிரவாதம் நோக்கி தள்ளுகிறது. காஷ்மீரின் தேசத்துரோக மதவெறிகொண்ட பிரிவினைவாதிகளை வெளிப்படையாக ஆதரிக்கும் ஒருவர் இந்துத்துவ அரசியலை விமர்சிக்கும்போது உண்மையில் அதற்கு ஆதரவாளர்களை உருவாக்கி அளிக்கிறார்.

நீங்களே இன்று இணையத்தில் எழுதப்படுவதை மட்டும் பாருங்கள். இந்துமதத்திலும் இந்தியதேசியத்திலும் நம்பிக்கை கொண்ட அனைவரையும் இந்துத்துவர் என இவர்கள் முத்திரை குத்தி வசைபாடுகிறார்கள். மகாபாரதத்தை ஒருவன் எழுதினாலே அது இந்துத்துவா. பகவத்கீதையை பேசினாலே அவன் இந்துத்துவா. இதுதான் இவர்களின் மொண்ணையான அரசியல்.

இந்துமதத்திலும் நவீன இந்தியதேசியத்திலும் நம்பிக்கை கொண்டவர்கள்தான் இந்த தேசத்தின் முக்கால்வாசிப்பேர். அவர்களை இந்துத்துவ அரசியல் நோக்கிச் செலுத்துவது இந்த மூர்க்கமே. இவர்களின் தேசவெறுப்பு அரசியலே இந்துத்துவத்தை வளர்க்கும் மிகப்பெரிய சக்தி. அவர்கள் அறுவடைசெய்வதெல்லாம் இங்குதான்.திரும்பத்திரும்ப இதையே சொல்லிக்கொண்டிருக்கிறேன்.

நான் முன்வைக்கும் மாற்று காந்திதான். இப்போது நேருவும். போகிறபோக்கைப் பார்த்தால் ராகுல்காந்திக்கே போய்சேருவேன் என நினைக்கிறேன்.)))

*

பல கட்டுரைகளில் பலவாறாகச் சொன்ன விஷயங்களை மீண்டும் தொகுத்துச் சொல்கிறேன்

1. இந்துமதம் ,இந்துப்பண்பாடு, இந்து சிந்தனை ஆகியவை அழியவேண்டியவை என நான் நினைக்கவில்லை. அவற்றை அழிக்க

முடியும் என்றும் எண்ணவில்லை. அவற்றை அழிப்பதன் வழியாகவே இந்த்துவத்தை அழிக்கமுடியும் என்றால் அதைப்போல இந்துத்துவத்தை வாழவைக்கும் சிறந்த வழியும் வேறில்லை

2 இந்துமதம், இந்துப்பண்பாடு, இந்துசிந்தனை ஆகியவை புனிதமானவை முழுமையானவை என நான் நினைக்கவில்லை. அவை இங்கே இருந்த பலநூறு தொல்குடிகளின் ஆன்மீகமும் வாழ்க்கைமுறைகளும் கலந்து உருவானவை. ஆகவே தொகுப்புத்தன்மை கொண்டவை. பல்வேறு வகையான சிந்தனைகள் அதில் உள்ளன. பல்வேறு புதியசிந்தனைகள் கிளைக்கவும் அதில் இடமுள்ளது

3. பல்லாயிரமாண்டுக்காலமாக நீடித்துவரும் ஓர் ஆன்மீக மரபை, மாபெரும் தொன்மத்தொகையை அவை முன்வைக்கின்றன. அது மானுடத்தின் சொத்து. அது அழியவிடப்படும் என்றால் மானுட நாகரீகத்துக்கே மாபெரும் இழப்பு

4 நீண்ட வரலாறு கொண்டவை என்பதானலேயே அவற்றில் எல்லாவகையான வரலாற்றுக்குப்பைகளும் இருக்கும். தன் குறைகளை திருத்திக்கொள்ள அது என்றுமே தயங்கியதில்லை. விவேகானந்தர், நாராயணகுரு , வள்ளலார் போன்ற மாபெரும் சீர்திருத்தவாதிகளினால் உருவாக்கப்பட்டது அதன் இன்றையவடிவம். இனியும் அது அவ்வண்ணமே தன்னை திருத்திக்கொண்டு மேலே செல்லும். ஏனென்றால் மாற்றமுடியாத, மறுவிளக்கம் கொடுக்கக்கூடாத எதுவுமே இந்துமரபில் இல்லை

5 ஆகவே இந்துமதத்திற்கு எதிரான சர்வதேச அளவிலான அவதூறுப்பிரச்சாரங்கள், வசைகள் ஆகியவற்றினூடாக இந்துமதத்தை அழிக்க நினைக்கும் சக்திகள், அதற்குக் கூலிபெற்று துணைபோகும் அறிவுஜீவிகள் ஆகியோரை நான் எதிர்க்கிறேன்.

6 இந்தியா என்ற இன்றைய அமைப்பு வரலாற்றின் ஒருகட்டத்தில் உருவாகி வந்தது. இந்தியாவின் நில்ப்பரப்பில் எல்லா பகுதியிலும் எல்லாவகையான மக்களும் வாழ்கிறார்கள். ஆகவே பிரிவினைவாதம் என்பது பிராந்திய பெரும்பான்மைவாதமாகவே இருக்கும். அது அழிவையே உருவாக்கும். இங்கே பேசப்படும் எல்லா பிரிவினைவாதங்களும் மதவாத, சாதியவாத, இனவாத அடிப்படைகொண்டவை

7 இந்தியா என்ற இந்த அமைப்பு காந்தி நேரு அம்பேத்கர் போன்றவர்களின் சிருஷ்டி. இதை எதிர்ப்பவர்கள் அழிவுச்சக்திகள்

8 இந்துமரபு, இந்தியா என்பவை வேறு இந்துத்துவ அரசியல் வேறு. இந்த வேறுபாட்டை மீண்டும் மீண்டும் அழுத்திச் சொல்லவேண்டியிருக்கிறது. இந்தியா இந்துமதம் இந்துத்துவ அரசியல் மூன்றும் ஒன்றே என்று சொல்லி எதிர்ப்பவர்கள் மக்களை மெல்லமெல்ல இந்துத்துவ அரசியல் நோக்கி செலுத்திக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள் இஸ்லாமிய தாலிபானியர்களுடனும் பிரிவினைவாதிகளுடனும் குலாவுகிறார்கள் நிதிபெற்றுக்கொண்டு அவர்களின் குரலாக ஒலிக்கிறார்கள்.

9 அதாவது சாமானியனுக்கு இன்று இருக்கும் தெரிவு ஒருபக்கம் இந்துத்துவ அரசியல். மறுபக்கம் தேசவிரோத குறுகிய அரசியல். அவன் தெரிவு செய்வது இந்துத்துவமாக உள்ளது. இன்று தேவையாக உள்ளது நவீன ஜனநாயக தேசிய அரசியல்

10 நவீன தேசியவாதம் ஐரோப்பாவில் இருந்து நமக்கு வந்தது. அதற்கு இருமுகங்கள். ஒன்று பண்பாட்டுத் தேசியவாதம் இன்னொன்று நவீன தொகுப்புத் தேசியவாதம். பண்பாட்டுத்தேசியவாதமே மதம், இனம், மொழி ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டது. இந்துத்துவமும் சரி, திராவிட அரசியலும் சரி, இங்குள்ள பிரிவினை இயக்கங்களும் பண்பாட்டுத்தேசியவாதத்தை முன்வைப்பவைதான்.

11 பண்பாட்டுத்தேசியவாதம் ஐரோப்பாவில் ஃபாசிசத்தை உருவாக்கியது. அதன் அமைப்பிலேயெ பிறரை, எதிரிகளை உருவாக்கும் மனநிலை உண்டு ஆகவே அது வெறுப்பரசியலை நோக்கியே செல்லும்

12 நவீன தொகுப்புத் தேசிய வாதம் என்பது அனைத்துமனிதரையும் தொகுத்து பொதுவான அடையாளங்கள் வழியாக உருவாக்கப்படும் தேசியம். காந்தி நேரு அம்பேத்கர் முன்வைத்த தேசியவாதம் அதுவே.அதன அடிப்படையிலேயே இந்தியா உருவாக்கப்பட்டது

13 இந்திய அரசியலில் நமக்கு இருந்த மூன்று வாய்ப்புகள் 1. நவீன தொகுப்புத் தேசியவாதம் 2. பண்பாட்டுத்தேசியவாதம் 3 இடதுசாரி சர்வாதிகார தேசியவாதம். மூன்றாம் வாய்ப்பு இன்று இல்லை. ஆகவே இருப்பது இரண்டு. இன்றைய இந்தியா பண்பாட்டுத்தேசியவாதத்தை தேர்வுசெய்துள்ளது

14 மாற்று என்பது நவீனத் தொகுப்புத் தேசியவாதமே. காந்தியும் நேருவும் அம்பேத்கருமே. இன்று வலுவாக முன்வைக்கப்படவேண்டிய மாற்று அரசியல் அதுதான்

15 இங்கே நேற்றுவரை ஆட்சியில் இருந்தது காங்கிரஸின் நவீன தொகுப்புத் தேசியவாதம். அதை எதிர்த்த இடதுசாரி தேசியவாதம் அதை பலவாறாக உடைக்க முயன்று ஒரு கருத்தியல்போரை நிகழ்த்தியது. அதன் மையப்புள்ளியான காந்தியை அது சிதைத்தது. அதை அவதூறு வழியாகச் செய்தனர். ஏனென்றால் இடதுசாரிகள் உலகம் முழுக்க கைகொண்ட வழிமுறை அது. தங்களுக்குள் கூட அவர்கள் அவதூறுப்போரையே செய்துகொள்கிறார்கள்

16 இந்தியாவெங்கும் உள்ள பிரிவினை அரசியல்வாதிகள் முன்வைத்தது பண்பாட்டுத் தேசியவாதம். அவர்களும் இந்தியாவின் நவீனத் தேசியத்தையும் அதன் அடையாளமாகிய காந்தியையும் அவதூறு மூலம் உடைத்தனர்

17 இன்று அந்த இடைவெளியைப் பயன்படுத்தி பண்பாட்டுத்தேசியவாதம் ஆட்சியை அடைந்துவிட்டது. அதை வெல்ல ஒரே வழி என்பது நவீன இந்திய தொகுப்புத்தேசியத்தை மீண்டும் முன்வைப்பதே. காந்தியை நேருவை அம்பேத்கரை. ஆனால் தோற்றுப்போன இடதுசாரி சர்வாதிகார தேசியத்தையோ அல்லது பிரிவினைவாத ஃபாசிச அரசியலையோ முன்வைப்பதுதான் இங்கே நிகழ்கிறது

18 சாதி, மொழி, வட்டார, இனவாத ஃபாசிச பிரிவினை அரசியலை , அதன் வெறுப்புக்குரலைக்கொண்டு இந்துத்துவ அரசியலை எதிர்ப்பது அவர்களை மேலும் வலுப்படுத்தவே செய்யும்.

19 இந்தியாவுக்கும் இந்துமதத்துக்கும் எதிரான எந்த அரசியலும் இந்தியாவையும் இந்துமதத்தையும் காப்பாற்ற தாங்கள் மட்டுமே உள்ளோம் என்ற இந்துத்துவர்களின் நிலைபாட்டை வலுப்படுத்தவே செய்யும்

20 மட்டையடிகள், அதிரடிக்கூச்சல்கள் கொண்ட பேச்சுகளே இங்கே நிகழ்கின்றன. வெறுப்பின் குரலுக்குப் பதிலாக ஓங்கி ஒலிக்கவேண்டியது காந்தியின் நிதானமான குரல்

*

இந்த 20 கருத்துக்களையும் இதேபோல எண்ணிட்டு நான் முதன்முதலாக எழுதியது 1992 ல்! [அதே சிற்றிதழில் கிருஷ்ணம்மாள் ஜெகன்னாதன் பற்றியும் எழுதியிருந்தேன்] பிறகு மருத்துவர் ஜீவா 1995 ல் ஈரோட்டில் நடத்திய கருத்தரங்கில் இக்கருத்துக்களை இதே போல எண்ணிட்டு பேசினேன். அதன்பின் பலமுறை. மீண்டும் மீண்டும் எழுதிக்கொண்டே இருக்கிறேன். இங்கே அரசியல்பேச்சு என்றால் தொண்டை புடைக்க ஒற்றைப்படையாக கூச்சலிடுவதுதான். சமநிலைகொண்ட பேச்சுக்கு இடமே இல்லை

நான் சொல்லவருவது மிகவும் நுட்பமான ஒரு அரசியல் சிக்கல். ஒரு முக்கியமான வேறுபாடு. இந்துமரபு வேறு இந்துத்துவ அரசியல் வேறு. இந்துத்துவ அரசியல் நூறுவருட வரலாறுகூட இல்லாதது. இந்துமரபு பல்லாயிரம் வருடத் தொன்மை கொண்டது. மிகவிரிவான உள்ளடுக்குகள் கொண்டது. அடிப்படையா ஆன்மீகத்தையும் தத்துவத்தையும் கொண்டது. அது அரசியல் அல்ல. அதிலிருந்து அரசியல் உருவாக்கப்பட்டிருக்கிறது. அவ்வரசியலை எதிர்க்க அதை எதிர்ப்பது மூடத்தனம்.அவ்வளவுதான்.

இதை திரும்பத்திரும்பச் சொல்லிக்கொண்டிருக்கிறேன். மீண்டும் மீண்டும் மொண்ணைத்தனமாக 'அப்டீன்னா நீ இந்துத்துவா, கீதைய பேசுறேல்ல?' என்ற குரல் எழுந்தபடியே இருக்கிறது

சொல்லிச்சொல்லி எனக்கு கொஞ்சம் தெளிவான மொழி வந்துவிட்டிருக்கிறது. அதுதான் லாபம். சரிதான் காந்தி 75000 பக்கம் ஏன் எழுதினார் என்று புரிகிறது

## (7) இந்துத்துவன்

அன்புள்ள ஆசிரியருக்கு,

உங்களுடைய " ரூபாய்க்கும் மதிப்பு இருக்கும் என்பதை என்றாவது நீங்கள் உணரக்கூடும்" என்ற வரியை இதைவிட சிறந்த தருணத்தில் வாசித்திருக்க முடியாது என்று தோன்றுகிறது....

இலக்கியம் வாசிக்கும் நண்பர்கள் எல்லோருடனும் விடிய விடிய பேசிவிட்டு இப்பொழுது வீட்டுக்கு வருகிறேன்.

உங்களைப் பற்றி பேசாத இலக்கியப் பேச்சா.. எனக்கு உங்கள் எழுத்துக்கள் போல் மற்றவர்கள் எழுத்து அறிமுகம் இல்லை என்பதால் நான் உங்களைப்பற்றி மட்டுமே பேசினேன். இன்னொரு நண்பரும் பேசினார் அவரும் உங்கள் வாசகரே. எல்லோருமே உங்கள் படைப்புகளில் எது உச்சம், எது சுமாரன மோசமான படைப்பு என்றெல்லாம் பேசி வந்தார்கள். இதுவரையும் சரி. இதற்கு அடுத்து அவர்கள் முன் வைத்த கருத்தோடு முற்றிலும் மாறுபட ஆரம்பித்தேன். ஜெ.மோ இந்துத்துவா அரசியல் செய்கிறார். அவரின் படைப்புகள் இந்து மதத்தில் இவ்வளவு இருக்கிறது என்பதை நாம் உணராமல் போய்விட்டோமே என்ற பயத்தை ஏற்படுத்துகிறது இது இவர் செய்யும் அரசியல் என்றார்கள். வீட்டிற்கு வந்தால் ரூபாய்க்கும் மதிப்பிற்கும் என்ற உங்கள் பதிவைப் படிக்கிறேன்....

எனக்கு சத்தியமாக இவர்கள் பேசுவது புரியவில்லை.. உங்கள் படைப்பாளுமையை ஒத்துக்கொண்டவர்கள் கூட முரண்படும் இடம் பிடிபடவில்லை. ஒருவர் சொல்லும் எல்லாவற்றையும் ஒத்துக்கொள்ள வேண்டியதில்லை என்றாலும் அடிப்படையையே எப்படி மறுக்க முடியும். எனக்கு உங்கள் வலைதள பதிவுகளே முதலில் அறிமுகம். எனக்கு பல விளக்கங்களைத் தந்துள்ள பதிவுகள் அதிகம். எனக்குத் தெரிந்த விளக்கத்தை வைத்துக்கொண்டு நீங்கள் இந்துத்துவாதி என்பதை ஏற்க முடியவில்லை. கடவுள் என்று பேசினாலே ஆத்திகனா..இந்து மதத்தைப் பேசினாலே தப்பா.. என்னதான் சொல்கிறார்கள்.. விஷ்ணுபுரத்தில் இருந்து பல இடங்கள் நினைவுக்கு வந்து கொண்டே இருந்தன.. தூங்கிக் கொண்டிருக்கும் ஆழ்வாரை தட்டியவுடன் அவர் ஏதோ சொல்லிவிட்டு தூங்கி விடுவார். அதை வைத்துக் கொண்டு மற்றவர்கள் தொடர்வார்கள்.. அஜிதர்

ஒவ்வொருவராய் வெல்லும் போதெல்லாம் ஒரு விளக்கு எரியும்.. பின்னர் சித்தரும் அந்த சிறுவனும் பாதாள அறைக்குப் போகும்போது அதெல்லாம் அந்த இடத்தின் கட்டுமான ரகசியம் என்பதைப் பார்ப்பார்கள்.. கண்ணன் ஒரு ஞானி.. அவன் தெய்வமாக்கப் படுகிறான் என்று செல்கிறீர்கள்.. இதெல்லாம் சேர்ந்தது இந்து மதம் என்று சொல்பவரை இந்துத்துவா என்ற சொல்லில் ஏன் அடைக்க வேண்டும்.. எனக்கு உங்களைப் புனிதப் படுத்த வேண்டும் என்ற எண்ணம் இல்லை. அவர்கள் சொல்வதுமாதிரியே இருந்தாலும் இல்லாவிட்டாலும் உங்கள் எழுத்து என் சிந்தனைத் தளத்தை வேறு தளத்திற்கு எடுத்துக் கொண்டு போவதாகவே நான் உணர்கிறேன். எந்தத் தத்துவம் சரியென்று சிறுவன் கேக்கும்பொழுது சித்தர் இந்த இளம் துறவி எல்லோரையும் வென்றிடுவான்அதற்குப்பின் அவன் நிலையை நினைத்து வருந்துகிறேன்னு சொல்லுவார்.. அஜிதர் எல்லாரையும் ஜெயிச்சுட்டு தனிமைல தோட்டத்துல நடக்கும்போது என்னடா எல்லாத்தையுமே தருக்கப்படுத்திட்ருக்கோம்ன்னு தவிப்பார்.. எனக்கு இந்த எழுத்து கொண்டுபோற இடத்துல வேற எதுவும் தேவையில்லை.. இந்துத்துவா ன்னு இவங்க சொல்றது எதத்தான் தெரிஞ்சுக்கத்தான் இத எழுதுறேன்

இப்படிக்கு
விஷ்ணுபுரம் வாசகர் வட்ட ஆளுன்னு முத்திரைக் குத்தப்பட்ட :)
சங்கர்

அன்புள்ள சங்கர்,

பலமுறை சொன்ன பதில்தான்

ஒரு சின்ன வரலாற்று வரைபடம். இந்தியா வாழ்க்கைமுறையில், கலையில், அறிவியலில் மேலோங்கியிருந்த ஒரு நாகரீகம். சீனாபோல, எகிப்துபோல, கிரேக்கம் போல. இதை எவரும் மறுக்கவியலாது. ஆனால் அந்தபெரும் பாரம்பரியத்தில் ஒரு சீரான சரிவு பன்னிரண்டாம் நூற்றாண்டுமுதல் தொடங்கியது. இந்தியாமீதான அன்னியப்படையெடுப்புகள் அதன் கட்டமைப்பை அழித்தன.

பெருமைக்குரிய நாகரீகங்கள் தங்கள் வளார்ச்சிப்போகிலேயே அழிவை நோக்கிச் செல்கின்றன. ஏனென்றால் பண்பாட்டு வளர்ச்சி என்பது

பன்மைத்துவம் நோக்கிக் கொண்டுசெல்லும். ஒவ்வொரு உட்கூறும் தனித்து வளரும். அவ்வாறு வளர்பவை ஒன்றுடன் ஒன்று முரண்படும். அந்நிலையில் அது ஒற்றைப்படையான, வலிமையான போர்ச்சமூகமாக அல்லாமலாகும். ஒருமையும் தீவிரமும் கொண்ட, அதேசமயம் பண்பாட்டில் பின்நிலையில் நிற்கும் சமூகங்களால் அவை தோற்கடிக்கப்படும். இந்தியாவிற்கும் அது நேர்ந்தது

எழுநூறாண்டுக்காலத் தேக்கம். அதன்பின்னர் பதினெட்டாம்நூற்றாண்டில் ஒரு மறுமலர்ச்சி உருவானது. அதற்குக்காரணம் ஆங்கிலக்கல்வி. ஐரோப்பியத் தொடர்பு.அதையே இந்திய மறுமலர்ச்சி என்றும் இந்துமறுமலர்ச்சி என்றும் சொல்கிறார்கள். இந்துமதச்சிர்திருத்த இயக்கங்களான பிரம்ம சமாஜம், ராமகிருஷ்ண இயக்கம், நாராயணகுரு இயக்கம், வள்ளலார் இயக்கம் போன்றவை உருவாகின. இந்தியாவின் தொன்மையான பண்பாடு மறுகண்டுபிடிப்பு செய்யப்பட்டது. மறுவரையறை செய்யப்பட்டது.

அந்த மறுமலர்ச்சியே இந்தியச் சுதந்திரப்போராக மலர்ந்தது. இந்தியா விடுதலை அடைந்தது. இந்த பெரும் இயக்கத்தின் கனிகளே தாகூரும், பாரதியும், குவெம்புவும், குமாரனாசானும், பிரேம்சந்தும், மாணிக் பந்தியோபாத்யாயவும், சிவராம காரந்தும், புதுமைப்பித்தனும் ,தாராசங்கர் பானர்ஜியும் இன்னும் பலநூறு ஒளிமிக்க தாரகைகளும்.

அன்று ஒரு பெரிய கனவு இருந்தது. இந்தியாவின் மெய்ஞான மரபை, அறிவியலை, தத்துவத்தை அறுபட்ட இடத்திலிருந்து எடுத்து வளர்த்து நவீன உலகின் அறிவியக்கத்திற்கு நிகரானதாக முன்னே கொண்டுசெல்வது. பத்தொன்பதாம்நூற்றாண்டில் அது மீளமீளப்பேசப்பட்டது.இந்திய மறுமலர்ச்சியில் இரு முகங்கள் இருந்தன. ஐரோப்பாவின் சிறந்த பண்பாட்டுக்கூறுகளை உள்வாங்குதல், இந்தியப் பண்பாட்டுக்கூறுகளை வளர்த்தெடுத்தல்.

ஆனால் சுதந்திரத்திற்குப்பின் நம் பார்வையில் ஒரு முக்கியமான மாற்றம் நிகழ்ந்தது. சுதந்திரப்போரில் இருந்து உருவானவர் என்றாலும் அடிப்படையில் இந்தியமெய்ஞான மரபில் நம்பிக்கையற்றவரும் ஐரோப்பிய மரபு மீது கண்மூடித்தனமான வழிபாட்டுணர்வு கொண்டவருமான நேரு பிரதமரானார். இந்தியாவின் பெரும்பஞ்சங்களை நேரில் கண்ட அவருக்கு உடனடியான வறுமை ஒழிப்பு மட்டுமே முக்கியமானதாகத் தோன்றியது.

அதற்கான கல்வி, அதற்கான சிந்தனை ஆகியவற்றை இங்கே அவர் வடிவமைத்தார். அத்துடன் சுதந்திரம் கிடைத்தபோது உருவான பெரும் மதக்கலவரங்களும் அதை ஒட்டி உருவான காழ்ப்புகளும் அவர்களை அச்சுறுத்தின. கல்வியை மதத்தில் இருந்து பிரிக்க திட்டமிட்டனர்.

நேருவும் அவரது அணுக்கர்களான மகாலானோபிஸ் பி.என்.ஹக்ஸர் போன்றவர்களும் இணைந்து இங்கே உருவாக்கிய கல்விமுறை என்பது இந்திய மரபு சார்ந்த அனைத்தையுமே மதம்சார்ந்தது என விலக்கிவைப்பதாக இருந்தது. ஒரு தேசம் அதன் தத்துவப்பாரம்பரியத்தை – உலகின் மிகப்பெரிய தத்துவப்பாரம்பரியங்களில் ஒன்றை- ஒரு சொல்கூட தன் மாணவர்களுக்கு கற்பிக்காத கல்விமுறை ஒன்றை உருவாக்கியிருக்கிறது என்றால் அது இந்தியாவில் மட்டும்தான். உலகவரலாற்றிலேயே முன்னும் பின்னும் அதற்கு உதாரணம் இல்லை. முழுமையான ஐரோப்பியக்கல்வி இங்கே பொதுக்கல்வியாக ஆகியது. சோறிடும் கல்வியே கல்வி என்றாயிற்று

வெள்ளையர் ஆட்சிக்காலத்திலேயே இந்தியச் சிந்தனைத்தளத்தில் திட்டமிட்டு உருவாக்கி நிலைநிறுத்தப்பட்ட இந்தியமரபு வெறுப்பு, இந்துமரபு வெறுப்பு என்பது சுதந்திரப்போராட்ட காலத்தில் அன்றைய உணர்ச்சிகளால் கட்டுக்கடங்கி இருந்தது. சுதந்திரத்திற்குப்பின்னர் நம்முடைய நவீனக் கல்விமுறையானது அதை தீனிபோட்டு வளர்த்து பேருருவம் கொள்ளச்செய்தது. அத்தனை கல்விநிறுவனங்களும் பண்பாட்டு நிறுவனங்களும் இந்தியவெறுப்பாளர்கள், இந்து வெறுப்பாளர்களால் நிறைந்தன.

எழுபதுகளில் இந்தியா ஒரு வலிமையான நாடாக எழக்கூடும் என்ற அச்சம் எழுந்தபோது [செஸ்டர் பவுல்ஸ் போன்ற ராஜதந்திரிகளின் நூல்கள் அவ்வச்சத்தை பதிவுசெய்கின்றனர். அணுகுண்டு வெடிக்கப்பட்டதும், பிராந்திய வல்லரசாக இந்தியா மாறமுயன்றதும் ஒரு காரணம்] உலக ஆதிக்க சக்திகள் இந்தியாவின் மீதான மறைமுகப்போரை கருத்துத்தளத்தில் தொடங்கின.

ஆகவே இந்திய ஒருமைப்பாட்டுக்கு எதிரான அனைத்து சிந்தனைகளுக்கும் நிதி குவியத்தொடங்கியது. இந்திய எதிர்ப்பு மனநிலை கொண்ட அனைவருமே நிதிகளில் திளைத்தனர். அவர்களுக்கு மட்டுமே நிதிக்கொடைகள், பயணங்கள், விருதுகள், சர்வதேச அங்கீகாரம்

கிடைத்தது. இந்திய மரபை, இந்துமரபைச் சார்ந்து சற்றேனும் பேசக்கூடிய அனைவருமே விதிவிலக்கே இல்லாமல் புறக்கணிக்கப்பட்டார்கள்.

இந்திய ஒருமைப்பாட்டுக்கு இந்துமதம் காரணம் என எண்ணப்பட்டதனால் இந்துமதத்தை இழிவும் அவதூறும் செய்வது பெருந்தொழிலாகவே அன்னிய சக்திகளால் பேணப்பட்டது. ஒட்டுமொத்தமாக இந்திய -இந்து எதிர்ப்பு என்பது நம் அறிவுத்துறையில், ஊடகத்துறையில், கல்வித்துறையில் ஒரு எதிர்க்கமுடியாத பெரும் சக்தியாக நின்றது. இன்றும் நீடிக்கிறது. அது உருவாக்கிய சிந்தனைமுறை, நம்பிக்கைகள் ஒற்றைவரிகளாகவே இளைஞர்களுக்கு வந்து சேர்கின்றன. அவற்றைச் சொல்லிக்கொண்டிருப்பதே நவீனசிந்தனையாளனாகக் காட்டுவது என்று நம்புகிறார்கள் இவர்கள்.

மறுபக்கம் 1925ல் இந்தியாவில் இந்துத்துவ அரசியல் தொடங்கியது. இந்தியதேசிய மறுமலர்ச்சி, இந்துமத மறுமலர்ச்சி ஆகியவை உருவாக்கிய உணர்வலைகளை அரசியல் சக்தியாகத் திரட்டுவதற்கான முயற்சி அது. முஸ்லீம்லீக் தோன்றி இஸ்லாமிய மதவாதம் ஓர் அரசியல்சக்தியாக எழுந்தபோது அதற்கு எதிர்வினையாகத் தோன்றியது இந்து மதவாத அரசியல். காங்கிரஸின் பிழைகளால் அது மெல்லமெல்ல வளர்ந்தது. எண்பதுகளில் வலிமையான அரசியலாக ஆகி இன்று ஆட்சியைப்பிடித்துள்ளது

இந்துமதம் என்பதை ஓர் ஒற்றை அடையாளமாகக் குறுக்கி மக்களைத் திரட்டுவது இந்துத்துவம். அதற்கும் இந்து மெய்ஞான மரபுக்கும், இந்து தத்துவமரபுக்கும், இந்துமதத்திற்கும் எந்தத் தொடர்பும் இல்லை. இந்துமரபு என்பது பன்மைத்தன்மை கொண்டது. ஒன்றுடன் ஒன்று முரண்பட்டு வளர்வது. ஆனால் இந்து எதிர்ப்பாளர்கள், இந்திய எதிர்ப்பாளர்கள் தொடர்ச்சியாக இந்துத்துவ அரசியலும் இந்துஞானமரபும் ஒன்றே என வாதிட்டு வருகிறார்கள். இந்துமரபை அவதூறு செய்து சிறுமைசெய்து அழிக்கும் முயற்சி என்றே அதைக்கொள்ளவேண்டும்

இதுதான் பின்புலம். ஓர் எழுத்தாளனாக நான் இந்துமெய்ஞான மரபில் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டவன். நாராயணகுருவின் வேதாந்த மெய்ஞான மரபில் வந்தவன். மெய்யியலிலும் உயர்தத்துவத்திலும் இந்துமரபையும் பௌத்தமரபையும் ஏற்றவன். என் எழுத்துக்களில் அவற்றை வெளிப்படுத்துகிறேன். இந்திய மரபை, இந்துமரபை ஒட்டி எழும்

சிந்தனையும் இலக்கியமும் வளர்ந்து நீளுமென்றால் அது உலக நாகரீகத்திற்கே ஒரு பெருங்கொடை என நினைக்கிறேன். விவேகானந்தரும் தாகூரும் பாரதியும் கண்ட கனவுதான் அது.

நான் நவீன எழுத்தாளன். ஆகவே நம்பிக்கைகளை முன்வைப்பதில்லை. ஆராய்கிறேன். பரிசீலிக்கிறேன். வாதிடுகிறேன். மேலும் இம்மரபு அளிக்கும் படிமங்களைக்கொண்டு கனவு காண்கிறேன். அக்கனவினூடாக என் மரபின் ஆழ்மனதை சென்றடைகிறேன். என் காலகட்டத்தின் மொழியில் அவற்றை முன்வைக்கிறேன். பல்லாயிரம் வருடப் பாரம்பரியம் கொண்ட ஒரு பண்பாட்டின், இலக்கிய இயக்கத்தின் சமகால நீட்சி நான். கம்பனின் காளிதாசனின் பாரதியின் தொடர்ச்சி என என்னை எண்ணிக்கொள்கிறேன்.

ஓர் இந்துவாக நான் எந்த மதத்திற்கும் எதிரி அல்ல. எல்லாவற்றையும் இணைத்துக்கொள்ள முயல்பவன். தேசியவாதி என்றமுறையில் நான் ஏற்பது காந்தி முன்வைத்த மதச்சார்பற்ற இந்தியாவைத்தான். என் இந்தியதேசியத்தில் இந்துக்களுக்கு நிகரான இடத்திலேயே அனைவரும் இருக்கிறார்கள்.

.

இங்குள்ள இந்துவெறுப்பாளர்கள் மற்றும் இந்திய எதிர்ப்பாளர்கள் அவர்களின் வெறுப்பரசியல் காரணமாக எனை ஏற்றுக்கொள்ள முடியாது. நான் சொல்வதை அவர்களால் புரிந்துகொள்ளவும் முடியாது. அவதூறு ,காழ்ப்பு ,கசப்புகள் மூலம் மட்டுமே அவர்கள் என்னை எதிர்கொள்ளமுடியும். இந்துப்பாரம்பரியம், இந்து மெய்ஞான மரபு, இந்தியதேசியம் பற்றிய எச்சிந்தனையையும் இந்துத்துவ அரசியல் என முத்திரையிட்டபின்னரே அவர்களால் பேசமுடியும். அது அவர்களின் செயல்திட்டம். அதற்காக அவர்கள் நியமிக்கப்ப்ட்டிருக்கிறார்கள். ஊதியமும் பெறுகிறார்கள்

என் படைப்புலகை வாசிப்பவர்கள் எவருக்கும் நான் எழுதுவதென்ன என்று தெரியும். அது மதவாதம் அல்ல. மதமே அல்ல. அது மதத்தை மையமாகக் கொண்ட ஒரு பெரிய பாரம்பரியத்தின் தொடர்ச்சியாக நின்று எழுதப்படும் நவீன இலக்கியம், நவீன சிந்தனை. அதைப்புரிந்துகொள்பவர்களே என் வாசகர்கள். நான் எழுதுவதைப்புரிந்துகொள்ளாதவர்கள் பற்றி எனக்குக் கவலை இல்லை. இன்றைய இந்து-இந்திய எதிர்ப்புப்பிரச்சாரகர்களின்

புகைமூட்டம் கலையும். அன்று நான் இப்பாரம்பரியத்தை விமர்சனத்துடன் அணுகி முன்னெடுத்த எழுத்தாளனாகவே அறியப்படுவேன்.

## (8) இந்தியா ஒன்றா?

அன்புள்ள ஜெமோ,

வணக்கம். தங்களின் பயண அனுபவங்கள் உங்களுக்கே உரிய பார்வையுடன் எழுதியிருந்தீர்கள். நானும் மிக ஆவலுடனே படித்துவந்தேன்.

இதேபோல் பயணங்களில் ஆர்வமுடன் செல்பவன் என்ற முறையில் தங்களின் அனுபவங்களையும் உணர்வுகளையும் தங்களின் எழுத்து மூலமே என்னால் பெறமுடிந்தது. சில நேரங்களில் அலுவலக நிமித்தமாகவும் பல நேரங்களில் ஆர்வத்தாலும் பயணம் செய்யும் நான் ‘இந்தியா ஆபத்தான நாடா’ என்ற கட்டுரை காரணமாக சில கருத்துக்களை தங்கள் முன் வைக்கிறேன்.

இந்தியாவில் வடதென் பிரிவு நம் கலாச்சார ரீதியிலேயே உள்ளது என்றே நினைக்கிறேன். ஒரே இதிகாச பின்புலத்தில் கட்டப்பட்ட இரு வேறு கட்டமைப்புகளாக இருக்கிறது. உதாரணம் நம் வழிபாட்டுத் தலங்கள் மற்றும் தெய்வ விக்கிரகங்கள். வடக்கு கிழக்கு மேற்கு மாநிலங்களில் கோயில்களும் வழிபாட்டு முறைகளும் ஏறத்தாழ ஒரே மாதிரியே உள்ளன. ஆந்திரா, கர்நாடகம், தமிழ்நாடு ஆகிய மூன்று மாநிலங்களில் ஒரு மாதிரியாகவும் கேரளத்தில் வேறு மாதிரியாகவும் தென்னிந்தியாவில் உள்ளது. இந்தப் பிரிவின் வரலாற்று அறிவு எனக்கு எட்டவில்லை. இரு வேறு கலாச்சாரங்கள் எங்கே இணைந்தன? காரணங்கள் யாவை?

இந்து மதத்தின் ஆறு பெரும் வழிபாட்டு தெய்வங்களில் சுப்பிரமணிய வழிபாடு பெருமளவு வட இந்தியாவில் இல்லை. அது ஏன்?

என் பார்வையில் வறுமை மற்றும் பொருளாதார ஏற்றத்தாழ்வு தென் மாநிலங்களைக் காட்டிலும் வட மாநிலங்களில் அதிகம்.

ஜாதியின் சமுதாய ஆளுமை கேரளா, தமிழ்நாட்டைக்காட்டிலும் மற்ற பிரதேசங்களில் இன்றும் வலுவாகவே உள்ளது. வளமான மாநிலமான மகாராஷ்டிராவில் சில பெரும் நகரங்கள் பொருளாதார மேன்மையில் இருந்தாலும் பரவலாக வறுமை இருக்கிறது. மாநில உள்கட்டமைப்புகள் மிகக் குறைவாகவே உள்ளன. ம.பி., ஒடிசா, உ.பி., பிஹார், சட்டிஸ்கர்,

ஜார்கண்ட் ஆகிய மாநிலங்கள் இன்னும் மோசம். அவர்களின் நிலைமையும் பிரச்சினைகளும் பரவலான ஊடகங்களில் இடம் பெறுவதேயில்லை.

குஜராத் உள்கட்டமைப்பிலும் வாழ்வின் தர வரிசையிலும் முதன்மையாகவே இருக்கிறது என்று நினைக்கிறேன்.

வரலாற்றுக் காரணங்களால் மத நல்லிணக்கம் சற்று குறைவாகவே வட மாநிலங்களில் உள்ளது. உள்ளழுத்தம் எந்த ஏதுவான சூழலிலும் உடனே வெடிக்குமளவு உள்ளது என்பதே என் எண்ணம்.

இவை எல்லாவற்றிற்கும் கீழே இழையும் இறையாண்மை நம்மை இணைக்கும் கருவாகவே உள்ளது. அப்படி இந்த பூலோகப் பகுதியை இணைக்கக் காரணம் என்ன? ஒரு காலத்தில் பாகிஸ்தான் மற்றும் ஆப்கானிஸ்தான் பகுதிகளும் நம் கலாச்சார ஆளுமையிலும் பிராந்திய எண்ண ஓட்டத்திலும் இணைந்தே இருந்தது. ஆனால் இன்று நாடுகளாகப் பிரிந்தமையால் காலப்போக்கில் இந்த வரலாற்றுத் தாக்கங்களிலிருந்து விலகிவிடும்.

அதேபோல் வெறும் ஒன்றுபட்ட நாடாக நாம் இருக்கிறோம் என்ற காரணத்தினால்தான் இந்த ஒற்றுமையைக் காணவிழைகிறோமா அல்லது வேறு ஏதாவது பிராந்திய உள்ளுணர்வு ஒன்று இருக்கிறதா?

அன்புடன்
திருச்சி வே. விஜயகிருஷ்ணன்

அன்புள்ள விஜயகிருஷ்ணன்,

இந்தியாவில் பயணம் செய்யும்போது நாம் தொடர்ச்சியாக எல்லாமே மாறிக்கொண்டு வருவதைக் காணலாம். முக்கியமாக முகங்கள். மொழி, உடை, உணவு, வீடுகள் எல்லாமே மாறுபடுகின்றன. இசை மாறுபடுகிறது. ஏன் மாடுகளின் கொம்புகளில் கூட தொடர்ச்சியான வேறுபாட்டைக் காணலாம்.

அதேசமயம் தொடர்ச்சியாக ஓடும் பொதுத்தன்மையையும் காணலாம். இந்தப்பொதுத்தன்மை இருவகை. ஒன்று இந்தியாவில் நவீனகாலகட்டத்துக்குப் பின்னர் உருவாகி வந்த வணிகப்பண்பாட்டு அம்சங்களால் ஆனது. இது மேலோட்டமானது.

இன்னொன்று, சமூக வழக்கங்களிலும் நம்பிக்கைகளிலும் சடங்குகளிலும் எல்லாம் உள்ள ஆழமான பொதுத்தன்மை. இது மிகமிகத் தொன்மையானது. லோத்தலிலும் டோலாவீராவிலும் உள்ள ஐந்தாயிரமாண்டுப் பழமை உடைய சின்னங்களைப் பார்க்கையில் அன்று முதல் இன்றுவரை அந்தப் பண்பாட்டுப்பொதுத்தன்மை நீடிக்கிறது என்றும் தோன்றுகிறது.

ஒருவர் வேற்றுமைகளைக் காண விரும்பினால் அவற்றைக் காணலாம். ஒற்றுமைகளைக் காண விரும்பினால் அவற்றை கவனிக்கலாம். நான் இந்த வேற்றுமைகளை அந்த ஒற்றுமை எப்படி கோர்த்திணக்குகிறது என்பதையே கவனிக்க விரும்புவேன். ஏனென்றால் அந்த ஒற்றுமையே நமது பலம். அது சிதறினால் உருவாகும் அழிவு பிரம்மாண்டமானது.

இந்தியச்சிற்பக்கலையின் வெவ்வேறு பாணிகளைப்பற்றி விரிவாகவே எழுதப்பட்டுள்ளது. கே.ஆர்.சீனிவாசன் எழுதிய 'தென்னிந்தியக் கோயில்கள்' என்ற நூல் நல்ல அறிமுகத்தை அளிக்கக்கூடியது.

இந்தியச் சிற்பக்கலை வடக்கே காந்தாரக்கலை வழியாக வந்த குகைக்குடைவு கோயிற்கலையும் , இங்கே இருந்த செங்கல்கோயிற்கலையும், மரக்கட்டிடக்கலையும் இணைந்து உருவான ஒன்று. அதாவது இது ஆங்காங்கே தனித்தனியாக உருவானதல்ல. ஒன்றுடன் ஒன்று உரையாடி மெல்லமெல்ல திரண்டு வந்தது.

இந்த உரையாடல் ஒவ்வொரு இடத்தில் ஒவ்வொரு சரிவிகிதத்தில் நிகழ்ந்தது. அதுவே வெவ்வேறு பாணிகளாக ஆகி வளர்ந்தது.

இந்தியச்சிற்பக்கலையில் மூன்று பாணிகள் உள்ளன என்பது சிற்பநூல்களின் வரையறை. நாகரம், வேசரம், திராவிடம் என அவை வகைப்படுத்தப்படுகின்றன. திராவிடம் என்ற சொல் தென்னகம் என்ற பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளது. இவை இந்தியாவின் வெவ்வேறு பகுதிகளுக்குரியவை.

ஆனால் இந்த வேறுபட்ட தன்மைக்குள் பொதுக்கூறுகள்தான் அதிகம். முதல்பார்வைக்கு மூன்று பாணிகளும் வெவ்வேறு எனத் தெரியும். பார்க்க ஆரம்பித்தால் அவற்றின் பொதுவான அழகியல் ஆச்சரியமூட்டும். அதாவது ஒரு பாணிக்குள் மற்ற பாணிகளின் செல்வாக்கு ஊடுருவி இருக்கும்.

கேரளத்திலும் வடகிழக்கிலும் உள்ள கோயில்பாணி இந்த மரபான சிற்பசாஸ்திர வரையறைக்குள் வராது. அது சீன செல்வாக்குடையது.

மரத்தாலும் ஓடுகளாலும் ஆனது. ஆனாலும் அவற்றிலும்கூட கட்டிட அமைப்பில் பிறவகையான இந்தியக் கோயில்களுடன் உள்ள ஒப்புமையே அதிகம்.

திராவிட கோயிற்கலைக்குள்ளேயே பல வளர்ச்சிப்படிநிலைகள் உள்ளன. மாமல்லபுரம் ரதக்கோயில்களுக்கும் ஸ்ரீவில்லிபுத்தூர் கோபுரத்துக்கும் இடையேயான வேறுபாட்டை கவனிக்கலாம். கோயிற்கலைப் பாணிகள் ஒன்றுடன் ஒன்று கலப்பதும் உண்டு. கஜுராஹோ கோயிலுக்கும் தஞ்சை பெருவுடையார் கோயிலுக்கும் உள்ள ஒற்றுமை ஆச்சரியமூட்டுவது. குஜராத்திலும் ராஜஸ்தானிலும் திராவிடபாணி கோயில்கள் பல உள்ளன.

கோயில்களின் அமைப்பில் உள்ள இந்த வேறுபட்ட தன்மைகூட சிற்பங்களில் இல்லை. சிற்பங்களின் முத்திரைகளில், சின்னங்களில் நுண்ணிய மாறுபாடுகள் உண்டு. அது காலத்துக்குக் காலம், இடத்துக்கு இடம் மாறிக்கொண்டே இருக்கும். அத்துடன் ஒவ்வொரு பேரரசும் அதிகமுக்கியத்துவம் கொடுத்து வடிக்கும் சிற்பங்கள் உண்டு. எப்படி சோழர்களுக்கு நடராஜர் ஒரு பண்பாட்டு அடையாளமோ அப்படித்தான் ராஷ்டிரகூடர்களுக்கு பூமாதேவியை ஏந்திய பூவராக மூர்த்தி.

ஆகவே வடக்கு தெற்கு என ஒரு பிளவு உள்ளது என்பது உண்மை அல்ல. இங்கே இருப்பது வெவ்வேறு கலைப்பாணிகள். அவை ஒன்றுடன் ஒன்று தொடர்புள்ளவை. கோயில்களையும் சிற்பங்களையும் இன்னும் கொஞ்சம் கூர்ந்து கவனித்தால் இதை உணரலாம்.

இந்திய நிலப்பரப்பில் இருந்த வெவ்வேறு பண்பாட்டு மூலங்கள் காலப்போக்கில் இணைந்து உரையாடுவதன் மூலமே இந்திய, இந்துப் பண்பாடு உருவானது. ஒவ்வொரு பண்பாட்டுக்கும் அதற்கான பங்களிப்பு இந்த மைய ஓட்டத்தில் உள்ளது. அதன்பின் இந்த மைய ஓட்டத்தில் இருந்து ஏராளமான கிளைகளும் பிரிந்து வளர்ந்தன.

உதராணமாக நெல்லையப்பர் கோயிலில் உள்ள கற்சாளரம் போன்றவை மரத்தாலான கட்டுமானத்தை கல்லில் பிரதி செய்பவை. தெளிவாகவே சேரச் செல்வாக்கு தெரியும். திருவனந்தபுரம் பத்மநாபசாமி கோயிலில் தெளிவான பாண்டியச் சிற்பக்கலைப் பாதிப்பு உள்ளது.

வட இந்தியாவில் எட்டாம் நூற்றாண்டுவரைக்கும் குமரக்கடவுளை முக்கியமான தெய்வமாகக் கொண்ட கௌமாரம் பெரும் செல்வாக்குடன்

இருந்துள்ளது. அங்கே பத்தாம் நூற்றாண்டுவரை கட்டப்பட்ட கோயில்களில் எல்லாம் ஏராளமான முருகனின் சிலைகள் உள்ளன.

முருகனுக்குரிய பெருநூலான ஸ்காந்தம் [ஸ்கந்த புராணம்] சம்ஸ்கிருதமொழியில்தான் உள்ளது. அதன் மொழியாக்கமே கச்சியப்ப சிவாச்சாரியாரின் கந்த புராணம். முருகனைப்பற்றிய ஒரே இந்தியப் பெருங்காவியம் காளிதாசனின் குமாரசம்பவம். குப்தர் காலத்தில் முருகன் முக்கியமான தெய்வமாக இருந்திருக்கலாம். கோயில்களும் இருந்திருக்கலாம்.

எட்டாம் நூற்றாண்டுக்குப்பின் உருவான பக்தி இயக்கம் சைவ, வைணவ மதங்களை பெருமதங்களாக வளர்த்தெடுத்தது. கௌமாரம் சைவத்தில் இணைந்தது. பக்தி காலகட்டத்தில் வடக்கே சைவத்தைவிட வைணவம் பிரம்மாண்டமாக வளர்ந்தது. ராமனும் கிருஷ்ணனும் பக்தி இயக்கத்தால் அங்கே இந்து மதத்தின் மையக்கடவுள்களாக ஆக்கப்பட்டனர்.

தென்னிந்தியாவில், குறிப்பாக கர்நாடகத்திலும் தமிழகத்திலும், சைவம் வலுவாக நீடித்தது. அதில் தமிழகத்தில் மட்டும்தான் முருகன் பெருந்தெய்வமாக ஆனார். ஆனால் தமிழ்நாட்டில்கூட சைவ, வைணவப் பேராலயங்கள் அளவுக்கு முருகனுக்கு முக்கியமான ஆலயங்கள் இல்லை என்பதே உண்மை.

உண்மையில் இந்தியாவிலேயே முருகனுக்கான தனிப்பேராலயம் என்பது திருச்செந்தூர் மட்டுமே. அது பிற்காலத்தில் கட்டப்பட்டது. மற்ற ஆலயங்கள் எல்லாமே சிறியவை. காலப்போக்கில் முருகக்கோயில்களாக விரிவாக்கம் செய்யப்பட்டவை. உதாரணமாக திருப்பரங்குன்றத்தில் மையத்தெய்வம் முருகன் அல்ல, கொற்றவை.

நீங்கள் ஒரு பொதுவான மனப்பதிவில் இருந்து அடுத்ததுக்குத் தாவிச் செல்கிறீர்கள். இந்தியா விரிவான நிலப்பரப்பு. இங்கே ஒவ்வொரு இடத்துக்கும் அங்குள்ள இயற்கைவளம், வரலாற்றுப்பின்புலம் சார்ந்து சமூக வளர்ச்சியும், கல்வி வளர்ச்சியும் உள்ளது. வறண்ட ராஜஸ்தானும் மத்தியப்பிரதேசமும் வளர்ச்சி குன்றியவை. மக்கள்நெருக்கம் கொண்ட பிகாரும் உத்தரப்பிரதேசமும் நெருக்கடிகள் நிறைந்தவை.

தென்னாட்டு மாநிலங்கள் துறைமுகங்கள் கொண்டவை. அந்த அம்சம் அவற்றின் வளர்ச்சியில் பெரும் பங்களிப்பாற்றுகிறது. ஆறுகள் செழித்த

பஞ்சாப் இந்தியாவின் முக்கியமான மாநிலமாக உள்ளது. குஜராத்தின் கதை வேறு. அது பட்டேலின் தனிக்கவனத்துக்கு உள்ளானது. மொரார்ஜி தேசாய் போன்ற மாபெரும் நிர்வாகிகளால் முன்னெடுக்கப்பட்டது.

நீங்கள் வேறுபாடுகளை மட்டுமே பார்க்கிறீர்கள். ஒற்றுமைகளைப் பார்க்க ஆரம்பித்தால் வேறுபாடுகள் பொருட்படுத்தத் தக்கவையாக இல்லை என்பதை உணர்வீர்கள். இத்தனை பெரிய நிலப்பரப்பில் இந்த அளவுக்காவது வேறுபாடுகள் இல்லாமலிருக்க முடியாது என்பதைப் புரிந்துகொள்வீர்கள்.

மார்க்ஸிய ஆய்வாளரான கெ.சச்சிதானந்தனின் ஒரு கட்டுரையில் இந்திய வரலாறு முழுக்க இங்கே நிகழ்ந்த எல்லாமே ஒரு 'அகில இந்தியத்தன்மையுடன்' மட்டுமே நிகழ்ந்திருக்கின்றன என்று மிக விரிவாக விளக்குகிறார். வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலேயே வைதிகமதமும், வேதாந்தஞானமும் இந்தியா முழுக்க ஏறத்தாழ ஒரே காலகட்டத்தில் பரவின. பின்னர் பௌத்த, சமண மதங்களும் அவ்வாறே இந்தியா முழுக்க ஒரே வீச்சாகப் பரவின.

பின்னர் பக்தி இயக்கம் தென்னகத்தில் இருந்து வடக்கே பரவி ஆட்கொண்டது. பிற்கால வேதாந்த ஞானிகளான சங்கரரும், ராமானுஜரும், மத்வரும் தெற்கில் இருந்து வடக்கே தங்கள் ஞானத்தை விரித்துப் பரப்பினர். இஸ்லாம் வடக்கே இருந்து தெற்கே வந்தது. இந்துமதச் சீர்திருத்த இயக்கங்கள் அகில இந்தியத் தன்மை கொண்டிருந்தன. காங்கிரஸும் கம்யூனிஸ்டுக் கட்சியும் அகில இந்தியாவையும் ஒரே அலையாக நிறைத்தன. நக்சலைட் இயக்கமும், தலித் இயக்கமும் அவ்வாறே அகில இந்தியத் தன்மை கொண்டவை.

ஏனென்றால் இந்த நாடு ஒரே மக்கள்திரளையே கொண்டிருக்கிறது. அந்த மக்கள்திரள் தங்கள் எண்ணங்களால், வாழ்க்கைமுறையால் ஒன்றாகவே இருக்கிறார்கள். ஒன்றாகவே சிந்திக்கிறார்கள்.

இந்தியா முழுக்க மக்கள் நூற்றாண்டுகளாக இடம்பெயர்ந்துகொண்டே இருக்கிறார்கள். இந்தியாவின் மாநிலங்களில் வங்கம், கேரளம் போன்ற சில மாநிலங்கள் தவிர பிற இடங்களில் எல்லாமே ஈராயிரம் வருடமாக தொடர்ந்து வெளியே இருந்து மக்கள் வந்து குடியேறியபடியே இருக்கிறார்கள்.

எல்லா மொழிவாரி மாநிலங்களிலும் வேற்று மொழி பேசுபவர்கள் மூன்றில் ஒரு பங்கேனும் இருக்கிறார்கள்.

இந்த நிலப்பரப்பு நூற்றாண்டுகளாக மக்கள் குடியேறிக்குடியேறி கலந்து கலந்து உருவம் கொண்டதாக உள்ளது. இங்கே உள்ள மக்களை நிலம், மொழி, இனம் என்னும் அடிப்படைகளில் பிரிக்க முடியாது. நன்றாக கலக்கி ஒரே சமூகமாக ஆக்கிவிட்டிருக்கிறது காலம்.

இந்த தேசத்து மக்களை ஒன்றாக இணைக்கும் சக்தி என்ன என்றால் இந்தக் கலப்பைத்தான் சொல்வேன். இம்மக்கள் கலக்க ஆரம்பித்த பின்னர்தான் உலக நாகரீகமே உருவாகத் தொடங்கியது. இந்தக் கலப்பை பின்னோக்கிக் கொண்டு சென்று இம்மக்கள்திரளை பல தனித்தனிப் பண்பாடுகளாக, தேசங்களாகப் பிரிக்கலாம் என்பது ஆதிக்கவாதிகளாக பிரிட்டிஷாரின் திட்டம். இன்று அமெரிக்க-ஐரோப்பிய ஆதிக்கசக்திகளின் கனவு.

இந்தக் கலப்புநிகழ்வு மூலம் இந்த நிலத்து மக்கள் நாலாயிரம் வருடங்களுக்கும் மேலாக ஒரு தொடர் உரையாடலில் இருக்கிறார்கள். அவர்களிடம் இருக்கும் நாகரீகம், வாழ்க்கைமுறை, மதம், கலைகள், இலக்கியங்கள் எல்லாமே இந்தக் கலப்பின் விளைவாக உருவானவை. அவைதான அவர்களின் ஆழ்மனத்தை உருவாக்குகின்றன.அந்த ஆழ்மனத்தால் அவர்கள் இணைக்கப்பட்டிருக்கிறார்கள். ஆகவேதான் அவர்கள் ஒன்றாகச் சிந்திக்கிறார்கள்.

இந்த ஒற்றை உடலை இயந்திரபாகங்களைப் பிரிப்பதுபோலப் பிரிக்க முடியாது. ஆதிக்கவாதிகளும் அரசியல்வாதிகளும் அப்படிப் பிரிக்க முனைந்தால் பேரழிவுதான் உருவாகும். அந்தப் பிரிவின் ரணங்கள் நூற்றாண்டுகள் தாண்டியும் ஆறாது. இந்தியா பாகிஸ்தான் பிரிவினையின் அழிவுகளும், தொடர்ந்து வந்த போர்களும், இன்றும் நீடிக்கும் கசப்புகளும் வெறுப்புகளும் அதையே நிரூபிக்கின்றன.

இந்தியர் ஒன்றாக இருப்பதன் ரகசியம் இதுவே. ஒரே பெற்றோருக்குப் பிறந்து ஒரே வீட்டில் பல்லாயிரம் வருடங்களாக வாழும் சகோதரர்கள் இவர்கள்.

## (9) இந்தியா குறித்த ஏளனம்...

அன்புள்ள ஜெமோ,

இங்கு எனது வெள்ளைகார நண்பர்கள் அடிகடி கூறும் இந்தியா பற்றிய கருத்து இது தான். இங்கு வேலை செய்யும் பல இந்தியர்கள் இந்தியர் அல்லாதவர்களிடம் அதிகம் பழகுவது இல்லை. பெரும்பாலனவர்க்கு நான் சொல்வது புரியுமா தெரியவில்லை. நான் அமெரிக்க'வில் ஒரு காட்டில் படித்தவன், அங்கு இந்தியர்கள் அதிகம் இல்லாத்தினால், இவர்களுடன் பழகும் பழக்கம் பட்டவன்.

இது உண்மை தானா இல்லை ஏன் இப்படி என்று எங்களுக்கு சொல்ல முடியுமா ?

1) இந்தியா ஏழை நாடு.

2) இந்தியா சுகாதாரம் அற்ற நாடு. இந்தியர்கள் சுத்தமற்றவர்கள்.

3) இந்தியர்கள் நாற்றம் பிடித்தவர்கள், குளிப்பதில்லை. இதை அவர்கள் ஒரு வெறுப்பாக சொல்ல வில்லை. உண்மையிலேயே சொல்கிறார்கள். எனக்கு சீன ( நான் சைவம் ) உணவகத்துக்கு போனால் என் முகம் எப்படி மாறுமோ அப்படி இவர்கள் இந்தியர்களின் உணவு ( முக்கியமாக மசாலா ) வாசத்தை கண்டு முகம் சுழிகின்றனர். இந்தியா உணவை உண்டாலும், இவர்கள் அலுவலகத்தில் body spray அடித்து, mint எடுத்து கொள்கிறார்கள். சில இந்தியர்கள் பக்கத்தில் வந்து பேசும் பொழுது Mint தருவார்கள். நீ நாற்றம் அடிக்கிறாய் என்பதை மறைமுகமாக சொல்லும் உத்தி அது ( என் கற்பனை அல்ல இந்த உத்தியை பற்றி ஒருவரின் மூலமாக கேட்டது ) . நம் இந்திய மக்களும் வெள்ளந்தியாக சிரித்து கொண்டு வாங்கி கொள்வார்கள்.

சீன , ஜப்பானிய மக்களுடன் எளிமையாக பழகுகிறார்கள். அவர்களுக்கு ஆங்கிலம் சரியாக தெரியா விட்டாலும். இந்தியர்கள் என்றால் ஏளனம் தான். இந்தியர்கள் நிறைய மெனக்கிட வேண்டி உள்ளது. ஒரு Dance floor சென்றால் அங்கு பல இந்தியர்கள் வெட்டியாக யாரும் இல்லாமல் ஒரு கண்காட்சி பொருளாகவே உள்ளனர். என்னை சொல்ல வில்லை, நான் என்னை மாற்றி கொண்டேன். எனக்கு இந்த பிரச்சனை இல்லாவிடிலும், சக இந்தியர்களை ஏளனமாக பார்க்கும் போது கோவம் வருகிறது. இந்தியாவை பற்றி இப்படி

சொல்லும் பொழுது , என்ன சொல்வது என்று தெரிவதில்லை. உங்கள் பார்வை தளம் அதிகம் என்பதினால், உங்களுக்கு தெரிந்ததை சொல்ல முடியுமா ?

நன்றி,

பிரகாஷ்

அன்புள்ள பிரகாஷ்,

நான் ஓரளவே வெளிநாட்டுப் பயணங்களைச் செய்திருக்கிறேன். ஓரளவே வெளிநாட்டினருடன் பழகியிருக்கிறேன். இந்த எல்லைக்குள் நின்று என் கவனிப்புகளைச் சொல்ல முயல்கிறேன்.

பொதுவாக இன்னொரு நாட்டைப்பற்றி எந்த நாட்டிலும் இருக்கும் பாதிப்பங்கு மனப்பதிவு தவறானதாகவே இருக்கும். நமது அமெரிக்கா பற்றி என்ன மனப்பதிவு இருக்கிறது? செல்வந்த நாடு. கருத்துச் சுதந்திரம் கொண்ட நாடு. கட்டற்ற பாலியல் வழக்கங்களின் நாடு. ஆனால் அமெரிக்காவை நாம் அறியும்போது இந்த நம்பிக்கைகள் பொய்யானவை என்று அறிகிறோம்.

அமெரிக்காவில் மதிய உணவுக்கு மட்டுமே பள்ளிக்கு வரும் பல லட்சம் பேர் உள்ளனர். அன்னதான சத்திரங்கள் உள்ளன. அவற்றை நானே சென்று பார்த்திருக்கிறேன் அங்கே கருத்துச் சுதந்திரம் மிக மிக வரையறுக்கப்பட்டது. அதை நான் அறிந்திருக்கிறேன்.அத்தேசத்தில் பாதிப்பேர் கட்டுப்பெட்டிகள்…

நமக்கு சீனர்களைப் பற்றி, பாகிஸ்தான் பற்றி என்ன மனப்பிம்பம் இருக்கிறதென்று பார்த்தாலும் இம்மாதிரியான தவறான சித்திரமே கிடைக்கும். அதேபோலத்தான் அவர்களும் நம்மைப்பற்றி நினைப்பார்கள் இல்லையா? இது மிக இயல்பான ஒன்று.

இந்த மனப்பிம்பங்கள் எப்படி உருவாகின்றன என்று பார்த்தால் வரலாற்றுப்பின்னணி ஒன்றை கண்டுகொள்ள முடியும். நான் ஆய்வுமுடிவாகச் சொல்லவில்லை, இலக்கியப்படைப்புகள் அளித்த செய்திதான். நமக்கு நம்மை அடக்கி ஆண்டவர்கள் என்பதனால் பிரிட்டிஷார்மீது ஒரு மயக்கம் உண்டு. அவர்களின் கறாரானதன்மை,

மிகையின்மை, மரபார்ந்த தன்மை, கட்டுப்பெட்டித்தனம் போன்ற பல விக்டோரிய யுகத்துப் பண்புகளை இன்றும் அவர்கள் மீது ஏற்றிவைத்து பார்க்கிறோம்.

அமெரிக்கா நமக்கு பிரிட்டிஷாருக்கு நேர் எதிரான ஒன்றாகக் காட்டப்பட்டுவிட்டது. ஆகவே இன்றைய மனப்பிம்பம் உருவாகியிருக்கிறது. இந்திய சுதந்திரப்போராட்ட காலம் முதலே நாம் அமெரிக்காவை பிரிட்டனுக்கு நேர் எதிரான நாடு என எண்ண ஆரம்பித்துவிட்டோம்.

மேலும் இன்று நமக்கு ஒவ்வொரு நாட்டைப்பற்றியும் இருக்கும் மனப்பிம்பம் என்பது இரண்டாம் உலகப்போரால் உருவாக்கப்பட்டது. இரண்டாம் உலகப்போரின்போதுதான் இந்தியாவின் நடுத்தர வற்கம் உலகநாடுகளைப் பற்றிக் கேள்விப்படுகிறது. இரண்டாம் உலகப்போர்தான் செய்திகளால் நெருக்கமாக பின் தொடரப்பட்ட போர்.

அதனூடாக உருவான மனச்சித்திரம் பல்வேறு வகையில் ஊடகங்கள் மூலம், உரையாடல்கள் மூலம் இளமையிலேயே நமக்கு அளிக்கப்படுகிறது. ஜெர்மனி என்றால் கட்டுப்பாடான உறுதியான ராணுவத்தன்மை கொண்ட நாடு. பிரான்ஸ் ஷோக்கான நாடு. இத்தாலி கட்டுப்பாடற்ற நாடு…இப்படியெல்லாம். பிறகு வரும் சமகாலச் செய்திகள் மூலம் அது சற்றே திருத்தப்படுகிறது. சீனா, ஜப்பான், ருஷ்யா போன்ற நாடுகளைப்பற்றிய சித்திரம் நமக்கு கொஞ்சம் மாறியது அவ்வாறே.

இந்தப்பிம்பங்கள் பெரும்பாலும் மேலோட்டமானவை. பலசமயம் பொய்யானவை. அரசியல் நோக்குடன் உருவாக்கப்பட்டவையும் உண்டு தற்செயலாக உருவானவையும் உண்டு. நீங்கள் ஏதாவது ஓர் ஆப்ரிக்க நாட்டுக்கு வேலைக்குச் செல்கிறீர்கள் என்று சொல்லிப்பாருங்கள். ”அய்யய்யோ” என்று பதறுவார்கள் சக இந்தியர்கள். எப்படி அந்த எதிர்மறைச் சித்திரம் உருவாகியது?

‘பிறன்’ என்று நாம் உருவகிக்கும் எவரையும் பற்றி எதிர்மறையாக எண்ணுவது பழங்குடிச் சமூக வாழ்க்கையில் இருந்து நமக்குக் கிடைத்துள்ள ஒரு மனக்கூறு. பிறர் அனைவருமே நம்மை விட தாழ்ந்தவர்கள், நம்மை அழிக்க நினைப்பவர்கள் என்னும் எண்ணம். ஒரு சமூகம் எந்த அளவுக்கு பழங்குடித்தன்மையுடன் இருக்கிறதோ அந்த அளவுக்கு இந்த மனநிலையும் காணப்படுகிறது.

ஏன் நாடுகளைப் பார்க்கவேண்டும். மலையாளிகள் தமிழர்களைப் பற்றி என்ன நினைக்கிறார்கள்? குளிக்காத, சுத்தமற்ற மக்கள். பண்பாடற்று கூச்சலிடுபவர்கள். மொட்டையாக சாரமற்று அரட்டையடித்துக் கொண்டே இருப்பவர்கள்.. தமிழர்கள் மலையாளிகளைப் பற்றி என்ன நினைக்கிறார்கள்? சதிகார மனமுடைய தந்திரமான மக்கள். இங்கிதமில்லாதவர்கள், ஆணவம் மிக்கவர்கள், தனிநபர் ஒழுக்கம் இல்லாதவர்கள்.மலையாளப்பெண்கள் எல்லாம் ஜில்பான்ஸிகள்.

சரி , நம்முடைய சமூகத்திற்குள்ளேயே என்னென்ன மனப்பிம்பங்கள் உள்ளன? நம் அருகே வாழும் ஒரு பிற சாதியை நாம் எப்படி மதிப்பிட்டிருக்கிறோம்? சுத்தமற்றவர்கள், மோட்டாவானவர்கள், தந்திரமானவர்கள், பொறுப்பில்லாதவர்கள், கட்டுப்பாடில்லாதவர்கள் இப்படி ஏதேனும் ஒரு எதிர்மறைச் சித்திரமே நம்மிடம் இருக்கும் இல்லையா?

நம்மில் பெரும்பாலானவர்களுக்கு நம் ஊரிலேயே உள்ள இன்னொரு சாதியினருடைய அன்றாட வாழ்க்கை, அவர்களின் சடங்குகள் ஆசாரங்கள் பற்றி எதுவுமே தெரிந்திருக்காது. சந்தேகமிருந்தால் நீங்கள் பிறந்து வளர்ந்த ஊரில் உள்ள இன்னொரு சாதியைப்பற்றி உங்களுக்கு எவ்வளவு தெரியும் என்று பாருங்கள்.

மேலைநாடுகள் இந்தியா மற்றும் ஆப்ரிக்காவைப்பற்றி கொண்டிருக்கும் மனச்சித்திரம் எப்படி உருவானது? அதற்கு ஒரு வரலாற்றுப் பின்புலம் உண்டு. இந்நாடுகளை காலனியாக்கி ஆண்டவர்கள் அவர்கள். இந்நாடுகளை நிரந்தரமாக தங்கள் பிடியிலேயே வைத்திருக்க கிறித்தவ மதத்தை ஓர் ஆயுதமாக பயன்படுத்தியவர்கள்.

ஆகவே, இந்நாடுகளின்பண்பாடுகளை கீழானது என்றும் அவர்களை சீர்திருத்தி முன்னேற்றும் பொறுப்பு தங்களுக்கு உண்டு என்றும் அந்த நல்லெண்ணத்துடன் தான் இவர்களை காலனிகளாக்கி வைத்திருக்கிறோம் என்றும் இவர்கள் வரலாறுகளை உருவாக்கினார்கள். இது 'வெள்ளையனின் பொறுப்பு' என்று சொல்லப்பட்டது [ White man's burden ]

ஆரம்பகால மேனாட்டு வரலாற்றாசிரியர்கள் இந்தியாவைப்பற்றி இப்படிப்பட்ட மட்டப்படுத்தும் சித்திரத்தையே உருவாக்கினார்கள். எழுத்தாளர்கள்கூட இத்தகைய நம்பிக்கைகளை எழுதினார்கள்.

வெள்ளையனின் பொறுப்பு என்ற சொல்லாட்சியே மாபெரும் எழுத்தாளரான ருட்யார்ட் கிப்ளிங் உருவாக்கியது.

அதேபோல கிறித்தவ மதப்பரப்புநர்கள் தொடர்ச்சியாக இந்தியாவின் மரபு, மதம், பண்பாடு குறித்து மிக எதிர்மறையான சித்திரத்தையே அங்கே அளித்தார்கள். இந்த காட்டுமிராண்டித்தனமான அஞ்ஞானிகளுக்கு கிறித்தவ ஒளியை அளிக்கவேண்டியதன் தேவையைப்பற்றி பேசினார்கள். இந்தியாவிலும் இவர்கள் மதம் மாற்றிய சாதிகள் அனைத்துக்கும் இறந்தகாலமே இல்லாமல் ஆக்கிவிட்டார்கள்.

'கிறிஸ்துவின் சீடர்களான இவர்களுக்கு இந்துக்கள் அப்படி என்னதான் செய்துவிட்டார்கள்? ஒவ்வொரு கிறித்தவக் குழந்தைக்கும் இந்துக்களை கொடியவர்கள் தீயவர்கள் பிசாசுக்கள் என்று நம்ப கற்றுக்கொடுக்கிறார்களே' என்று மனம் வெதும்பினார் சுவாமி விவேகானந்தர் அமெரிக்காவிற்குச் சென்று.

'பாரதேசம் முழுக்க எழுந்து நின்று இந்துமகாசமுத்திரத்திற்கு அடியில் உள்ள சேற்றை முழுக்க அள்ளியெடுத்து மேலைநாடுகள் மீது வீசினாலும்கூட நீங்கள் இன்று எங்கள்மேல் வீசும் சேற்றுக்கு பதில் செய்வதாக ஆகாது' என்று விவேகானந்தர் சொல்கிறார்

இன்றும் அது தொடர்கிறது. ஒரு சராசரி வெள்ளையக் குழந்தை இந்தியாவைப்பற்றி இத்தகைய சித்திரத்தை பெற்றுக்கொண்டு தான் வளார்ந்து வருகிறது. அதில் இருந்து அது வெளிவருவது கடினம்.

நானே சிக்காகோவில் ஒரு தேவாலயத்தில் இந்தியா பற்றி வைக்கப்பட்டிருந்த துண்டுப்பிரசுரங்களை எடுத்து சிறில் அலெக்ஸுக்குக் காட்டினேன். இந்தியாவில் குழந்தைகளை ஆலயங்களில் பலிகொடுக்கிறார்கள்,. முதியவர்களை ஆற்றங்கரைகளில் கைவிடுகிறார்கள் என்றெல்லாம் அது சொன்னது. அவர்களை ஒளிக்குக் கொண்டுவர நிதி கோரியது

நான் பார்த்தவரையுல் மேலைநாடுகளில் யார் மதத்தில் இருந்து முழுமையாக வெளியேறியிருக்கிறார்களோ அவர்களால் மட்டுமே பிற மனிதர்களை மதிக்கவும் சமானமாக எண்ணவும் முடிகிறது. மதநம்பிக்கை கொண்டவர்கள் பிறரை கீழானவர்களாக, பரிதாபத்துக்குரியவர்களாக எண்ணி சேவை மட்டுமே செய்ய முடியும்.

சமீபத்தில் ரயிலில் மார்ட்டின் கெர்ஜோ·ப் என்ற டச்சுக்காரரைச் சந்தித்து நண்பரானேன். அவர்தான் இந்த விஷயத்தை மிக உறுதியாகச் சொன்னார். மதமனநிலையை வைத்துக்கொண்டிருக்கும் வரை இந்தியர்களையோ ஆப்ரிக்கர்களையோ பிறரையோ வெள்ளையர்களால் 'தாங்கிக்கொள்ள' முடியுமே ஒழிய இயல்பாக சமாமாக எண்ணவும் விரும்பவும் முடியாது என்றார் அவர்.

இவ்வளவுக்கும் பிறகு நம்முடைய சிக்கல்கள் உள்ளன. 'இந்தியா ஏழை நாடு' என்றால் அது உண்மைதானே? இன்றும் இந்தியாவின் பெரும்பகுதி அச்சமூட்டும் வறுமையில்தான் மூழ்கிக் கிடக்கிறது. எலிவளை போன்ற வீடுகளில் மெலிந்து கறுத்த மனிதர்கள் நடைபிணங்கள் போல வாழ்கிறார்கள். ஒரு வேளைச் சோறு கொடுக்கப்பட்டால் முண்டியடித்து நூற்றுக்கணக்கில் உயிரை விடுகிறார்கள்.

அந்த வறுமையைக் கண்டு நாம் வெட்க வேண்டும். வேதனை கொள்ளவேண்டும். அந்த வறுமை இல்லை என்று வாதிடுவதையோ அந்த வறுமைக்கு காரணங்கள் கண்டுபிடிப்பதையோ ஒருபோதும் செய்யக்கூடாது. குறைந்தது ஒரு வெள்ளையன் சொல்லும்போதாவது நமக்கு அது உறுத்தட்டுமே.

இந்தியா சுத்தமில்லாத நாடு என்றால் அது மேலும் உண்மை. நான் அறிந்த வரையில் சுகாதார உணர்வே இல்லாத மக்கள் என்றால் இந்தியர்களே. இந்தியாவில் குடியிருப்புகளைச் சுற்றி நான் பார்த்த குப்பைமலைகளை உலகில் எங்குமே பார்த்ததில்லை. இதில் செல்வம் கல்வி என எதுவுமே விலக்களிப்பதில்லை. ஒரு சர்வதேச விமானநிலையக் கழிப்பறையை நம்மால் சுத்தமாக வைத்துக்கொள்ள முடியவில்லை. தேசமக்களில் பாதிப்பேர் தெருக்களில் மலம் கழிக்கிறார்கள். எங்கும் துப்பி வைக்கிறார்கள். இந்திய நகரங்கள் மலைபோலக் குப்பைகள் சூழ்ந்தவை. தலைநகரான டெல்லி உட்பட.

ஆகவே நம் வணிகர்கள் அமெரிக்க ஐரோப்பிய குப்பைகளை இறக்குமதிசெய்து இங்கே நகரங்களில் ஏற்கனவே உள்ள குப்பைமலைகளுடன் சேர்த்துக்கொட்டி பணம் சம்பாதிக்கிறார்கள். உள்ளூர் அதிகாரிகள் லஞ்சம் வாங்கீக்கொண்டு அனுமதி கொடுக்கிறார்கள். அரசியல்வாதிகள் பேசாமலிருக்கிறார்கள்

சிகாகோ நகரத்து கக்கூஸ் நாப்கின்கள் தூத்துக்குடிக்கு வந்து தாமிரவருணிக்கரைகளில் கொட்டப்படும்போது நாம் எப்படி சுத்தமான நாடாக இருக்க முடியும்? நம்மை அசுத்தமானவர்கள் என்று சொல்ல சிக்காகோ வாசிகளுக்கு என்ன தகுதி இருக்க முடியும்?

சென்ற வாரம் சீனாவிலிருந்து தூத்துக்குடிக்கு வந்த மாபெரும் குப்பைமலையை அடையாளம் கண்டார்கள். ஆனால் இறக்குமதி செய்தாகிவிட்டது. திருப்பி அனுப்ப முடியாது. தூத்துக்குடி முதல் குமரிவரை கடலோரமாக அவற்றைக் கொட்டி வைப்பார்கள் [சி.பி.எம் ஆட்களிடன் கொடுத்தால் விரும்பி வாங்கி வீட்டுக்குள் கொட்டி வைப்பார்கள். 'தி இந்து'வில் என் ராம் சீனா இந்தியாவுக்கு ஒரு மாபெரும் செல்வத்தை அள்ளி தந்திருப்பதாக கட்டுரை வனைவார்]

இந்தநிலையில் உலகிலேயே சுகாதார உணர்வற்ற அசுத்தமான நாடுகளில் ஒன்றுதான் இந்தியா என்ற உண்மையை நாம் ஒருபோதும் மறைக்க முடியாது. ஒரு சுற்றுலாப்பயணி ஒருமுறை கன்யாகுமரிக்கு வந்தால் அதன் பின் அவன் சாப்பாட்டு நேரத்தில் இந்தியா என்றே நினைக்க விரும்ப மாட்டான்.

வருடத்துக்கு ஐந்துகோடி ரூபாய்க்கு கன்யாகுமரியில் கான்கிரீட் வேலைகள் செய்பவர்கள் மாதம் ஐம்பதாயிரம் செலவிட்டு குப்பையை அள்ளவோ, நான்கு வாட்ச்மேன்களைப் போட்டு மலம்கழிப்பவர்களை தடுக்கவோ முனைவதில்லை. சுற்றுலா அமைச்சரின் சொந்த தொகுதி இது. நமக்கு சுத்த உணர்வில்லை என்பதற்கு மேலதிக ஆதாரம் எதற்கு?

நம்முடைய உணவு வீச்சம் மிக்கது. பொதுவாக பூமத்திய ரேகைநாடுகளின் உணவே காரமும் வாசனையும் மிக்கது. கண்டிப்பாக அது பிறருக்கு கஷ்டமாக இருக்கும். நாம் அதற்காக நம்மை தயாரித்துக்கொள்ளத்தான் வேண்டும்.

ஆக, இந்த எதிர்மறை பிம்பங்களை இயல்பாக எடுத்துக்கொள்வதே நல்ல மன்நிலை. அது மானுட இயல்பு. கூடவே அவ்விமர்சனங்களில் ஏதேனும் உண்மை இருக்குமென்றால் அதை நாம் கருத்திகொண்டு நம்மை திரும்பிப்பாக்கவும்வேண்டும்.

*

ஆனால் இந்த விஷயத்தில் இன்னொரு கோணமும் உண்டு. வெறுப்பு அல்லது ஏளனத்தில் இருந்தே இந்த விஷயங்கள் பெரிதாகத் தெரிகின்றன. சென்ற கால்நூற்றாண்டுக்கு முன்னால்வரை சீனாவைப் பற்றி இதைவிட படு மோசமான மனச்சித்திரமே ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் இருந்தது. இன்று சீனத்தவர்கள் உலகின் வல்லரசாக ஆகிவிட்டிருக்கிறார்கள். அவர்களும் இந்தியாவுக்கும் ஆப்ரிக்காவுக்கும் குப்பைமலைகளை அனுப்பும் தகுதி பெற்றுவிட்டிருக்கிறார்கள். ஆகவே இன்று சீனாவைப் பற்றிய பிம்பம் மாறிவிட்டது. இன்று சீனன் நாறுவதில்லை.

நாமும் வெல்லும்போது நறுமணம் வீச ஆரம்பிக்கலாம். ஆப்ரிக்காவிற்கு குப்பைகளை அனுப்பி வைக்கலாம். சுத்தமற்ற ஆப்ரிக்கர்களை நோக்கி நமுட்டுப்புன்னகை செய்யலாம்.

# (10) இந்தியாவின் மகள்

அன்பு ஆசிரியருக்கு,

கண்டிப்பாக இது தங்களுடைய வேலை பளுவில், கேட்ககூடாத விசயம்தான்.தேவை அற்ற சர்ச்சை கிளப்பி தங்களை எப்படி தொந்தரவு செய்யலாம் என்று காத்திருக்கும் கூட்டத்திற்கு இது அவலாக போய் விடும் என்று கேட்காமல் இருந்தோம்.

ஆனால் மிகவும் விவாதிக்கப்படும் ஒவ்வொரு சமுதாய நிகழ்விலும், நாங்கள் எவ்விதம் நோக்குவது என்று குழம்பும் பொழுது தங்கள் எழுத்து தெளிவடைய செய்யும்.

இந்த ஆவணப்படம் எடுக்கப்பட்ட விதம் சரியானதா என்ற கேள்வியே முதலில் எழுகிறது. அதை எடுத்தவர் எதோ சிறு சிறு சினிமா படங்கள் எடுத்து வேலை இல்லாமல் இருந்த பொழுது BBC-க்கு இந்த நிகழ்வை எதோ ஒரு விறு விறுப்பான சினிமாவாக எடுத்து தருகிறேன் என்று உறுதி அளித்து, கற்பழிப்பு காட்சி, கற்பழித்தவனின் பேட்டி, அவன் வழக்கறிஞரின் பேட்டி இவற்றை எடுத்து, சில குப்பங்களின் வீடியோ பதிவுடன் இந்தியாவின் மகள் என்று வெளியிட்டு இருக்கிறார்.

மிகுந்த சமுதாய பொறுப்புடன் இதை செய்து இருப்பதாகவும் இந்தியா எந்த பொறுப்பும் பெண்கள் மீது இல்லாமல், அதை தடை செய்து விட்டதாகவும் ஊடகங்களுக்கு சொல்லி கொண்டு இருக்கிறார்.

உண்மையிலேயே இந்த ஆவணப்படம் எடுத்த விதம் சரியானதா? அதில் இடம் பெற்று இருக்கும் காட்சிகளும், தொகுக்கப்பட்ட விதமும் சரியா? அந்த மிருகத்தின் பெட்டியை எடுத்து அதை இந்தியாவின் ஆண்களின் கருத்தாக சித்தரித்து இருப்பது சரியா? முதலில் அவன் பேட்டி எதற்கு? ஆவணத்தில், சாதாரண குடிமகன் கருத்து, அரசியல்வாதிகளின் கற்பழிப்புக்கு எதிரான நடவடிக்கை, காவல் துறையின் நடவடிக்கை, இந்தியாவில் பெண்களின் முன்னேற்றம் என பலதும் கலந்திருந்தால் கூட ஏற்றுக்கொள்ளலாம்.

இங்கிலாந்தில் ஒரு நாளைக்கு 350 பாலியல் வன்முறைகள் நடைபெறுகின்றனவாம். ஆனால் இந்தியா கற்பழிக்கும் கயவர்களின் நாடு என்பது போல் உலக ஊடகங்கள் சித்தரிப்பது சரியா?

எங்களுக்குள் மிகுந்த விவாதங்களுக்கு பிறகு, ஜெயமோகன் அவர்களின் கருத்தே இறுதியானது என்று முடிவு செய்து இதை தங்களுக்கு இங்கு எல்லோர் சார்பாகவும் எழுதுகிறேன்.

நேரம் கிடைத்தால் இது குறித்து தங்களின் கருத்தை எதிர்பார்க்கிறோம்.

தாழ்மையுடன்,
சரவணகுமார்.

அன்புள்ள சரவணக்குமார்,

இந்த விஷயமாக பேசப்பட்டதில் மருதன் என்ற மார்க்ஸியர் தமிழ்பேப்பர் இணையதளத்தில் எழுதியது என்கவனத்தைக் கவர்ந்தது. இந்தியாவில் இந்துமதம் இருப்பதனால்தான் பாலியல் வல்லுறவுகள் நிகழ்கின்றன என்று அவர் வாதிட்டிருந்தார்.

உலகமெங்கும் பெண்களுக்கெதிரான வன்கொடுமை நிகழ்ந்துவருகிறது.கறாரான சட்டங்கள் கொண்ட நாடுகளில்கூட இது மிக அதிகம். பெண்ணுரிமைகள் கட்டுப்படுத்தப்படும் நாடுகளிலும் சரி பெண்ணுரிமை முழுமையாகத் திகழும் நாடுகளிலும் சரி பாலியல் வல்லுறவு என்பது தொடர்ந்து நிகழ்ந்து வருகிறது. அதிகரித்தும் வருகிறது.

பாலியல் வல்லுறவுகள் பெண்களுக்கும் சிறார்களுக்கும் எதிராக நிகழ்வதில் மதஅமைப்புகளுக்குரிய பங்குகள் தொடர்ந்து வெளியாகின்றன. மேலைநாட்டுப் பல்கலைகளில் பாலியல்வல்லுறவு பெருகி வருவதைப்பற்றிய விவாதத்தை இணையத்தில் நீங்கள் ஏராளமாக வாசிக்கலாம்.

மருதனின் 'ஆய்வுக்கருத்தை' வாசிக்க நேர்ந்த அதே நாளில்தான் இணையத்தில் இன்னொன்று வாசிக்கக் கிடைத்தது. ஓர் ஆஸ்திரேலியப் பேராசிரியரின் பேச்சு. அதில் உயராய்வு மாணவிகள் பாலியல் வல்லுறவுக்கு உள்ளானால் புகார் செய்யவேண்டாம், அதனால் ஒன்றும் ஆகப்போவதில்லை என்றிருந்தார்.

பாலியல் வல்லுறவு குறித்த விவாதத்தை மூன்று தளங்களில் விரிவாக முன்னெடுக்கலாம். ஒன்று உயிரியல் தளம். மானுடருக்கு மிக அண்மையான விலங்காகிய சிம்பன்ஸி போன்றவற்றில் பாலுறவு பெரும்பாலும் வல்லுறவுதான் என ஆய்வுகள் காட்டுகின்றன. இந்த

மனநிலைக்கு மனிதனின் உயிரியல்பரிணாமத்தில் வேர்கள் உண்டா, பண்பாடுமூலம் அதை வென்று அடக்கித்தான் மானுடம் முன்னகர முடியுமா என்பது ஒரு முக்கியமான வினா

நிலவுடைமைச் சமூகம் குலம், குடி போன்ற அடையாளத்தை அடிப்படையாகக் கொண்டு கட்டமைக்கப்பட்டது. அவற்றின் அடையாளத்தைப் பேணுவது பெண்ணின் கருப்பை. இன்னார் மகன் இன்னார் என்பது, இன்னகுடியினன் என்பது பெண்ணை கட்டுப்படுத்துவதன் மூலமே சாத்தியம். ஆகவே பெண் குலத்தின், குடியின் உடைமையாகக் கருதப்பட்டாள்.

அந்நிலையில் பெண்ணைக் கைப்பற்றுவதென்பது பிறகுலங்களை கைப்பற்றுவதுதான். ஆகவே பாலியல் வல்லுறவு என்பது அச்ச்சமூகங்கள் அனைத்திலும் போரின் ஒருபகுதியாக நிகழ்ந்தது.பாலியல் வல்லுறவு ஆண் பெண்ணை வன்முறைமூலம் அடைவதென்பது ஆண்மையாக, வெற்றிகொள்ளலாக எண்ணப்பட்டது

நிலவுடைமைச்சமூகம் இருந்த அத்தனை நாடுகளிலும் இம்மனநிலை ஒரேமாதிரித்தான் இருந்தது. இன்றும் இம்மனநிலை நிலவுடைமைச்சமூகத்தின் எச்சமாக உலகமெங்கும் நீடிக்கிறது. நிலவுடைமைச்சமூக மனநிலைகள் குல ஆசாரங்கள், மதநம்பிக்கைகள் வடிவில்தான் நீடிக்கமுடியும். ஆகவே அவற்றை அவ்வாறு விளக்கிக்கொள்ளவும் இடமுள்ளது.உலகமெங்கும் நிகழும் பாலியல் வல்லுறவ்ன் இரண்டாம்தளம் இது.

நிலவுடைமைச்சமூகம் அழியும்தோறும் பெண்மீதான இந்த அடையாளச்சுமை குறைகிறது. பெண் உடைமையாக அல்லாமல் ஆளுமையாகக் கருதப்படுகிறாள். பெண்ணின் பாலியல் உரிமை அங்கீகரிக்கப்படுகிறது. ஆனால் இது அடுத்தகட்ட பிரச்சினைகளை உருவாக்குகிறது.

சுதந்திரமான பாலுறவு உருவாகும்தோறும் உண்மையில் அனைவருக்கும் பாலுறவுக்கான வாய்ப்புகள் கூடுவதில்லை. ‘தகுதியான’ ஆண்களுக்கே அந்த வாய்ப்புகள் கிடைக்கின்றன. அதுவே உயிரியல் விதி. தெருநாய்களில் பெரும்பாலானவை வாழ்க்கையில் ஒருமுறைகூட உடலுறவுகொள்வதில்லை என்று தெரியுமா? அச்சூழலில் தகுதிவாய்ந்த ஆண்கள் வன்முறையால்

மோதிக்கொண்டு அதில் வெல்பவனுக்கு வாய்ப்பு கிடைக்கவேண்டும். மனிதர்கள் அதை அனுமதிக்கமுடியுமா என்ன?

சுதந்திரமான பாலியல் பெருகும்தோறும் பணம், அதிகாரம், இனஅடையாளம் என பலவகைகளில் வெளித்தள்ளப்பட்டவர்கள் பாலியல்ரீதியாக ஒதுக்கப்படுகிறார்கள். நான் இதை பல மேலைநாட்டினர் மனம் உடைந்து புலம்பிக் கேட்டிருக்கிறேன். குறிப்பாகப் பெருநகர்களில் கடுமையான பாலியல் வரட்சி உருவாகிறது.

மறுபக்கம் பெண்ணை பாலியல் பண்டமாக அல்லாமல் பார்க்கப்பழகிய நவீன முதலாளித்துவ சமூகம் கூடவே பாலுறவை கேளிக்கையாக பண்டமாக பார்க்கத் தொடங்குகிறது. பாலுறவு சார்ந்த எழுத்தும் கலையும் உற்பத்திசெய்து குவிக்கப்படுகின்றன. பாலுறவுசார்ந்த செய்திகள் காட்சிகள் பெருகி சராசரி ஆணைச் சூழ்கின்றன.

அதாவது ஆண் ஒருபக்கம் பாலியல் வறுமை அடைகிறான். மறுபக்கம் பாலியலால் வரையின்றி சீண்டப்படுகிறான். நவீனச் சூழலில் பெருகும் பாலியல்வன்முறையின் பின்னணி இது. இது மூன்றாவது தளம். இந்த மூன்று தளங்களிலும் இன்று உலகளாவிய தளத்தில் நிகழும் பாலியல் வல்லுறவை விளக்கமுடியும்.

நான் சொல்வது மிக எளிய ஒரு வரைபடம். இதை எப்படியெல்லாம் அணுகலாம், என்னென்ன சிக்கல்கள் உள்ளன என்பதற்கான ஒரு வழிகாட்டு. ஆனால் இந்துமதம் இந்தியாவில் இருப்பதனால்தான் பாலியல் வல்லுறவு பெருகுகிறது என்று ஒரு மார்க்ஸியர் வாதிடுகிறார்.

மருதனின் இந்த மனநிலையை கூர்ந்து நோக்குங்கள்.ஓரளவு எழுதப்படிக்கத்தெரிந்த ஒருவருக்கே மருதன் சொல்வது உளறல் மட்டுமே என புரியும். அப்படியென்றால் இந்த அபத்தமான வாதத்தை அவர் ஏன் சொல்கிறார்?

அவரை உள்நோக்கம் கொண்டவர் என நான் சொல்லமாட்டேன். ஒருவகை அப்பாவி [அதாவது அசடு] என்றே நான் மதிப்பிட்டிருக்கிறேன். அவர் சொல்வது இங்கு சென்ற இருநூற்றாண்டுக்காலமாக தொடர்ந்து நிகழ்ந்துவரும் ஒரு பெரும்பிரச்சாரத்தின் எளிய எதிரொலியை மட்டுமே.

இந்தியாவின் வறுமை, அசுத்தம், குற்றங்கள், அனைத்துக்குமே இந்தியமாபு, இந்தியப்பண்பாடு, இந்துமதம் மட்டுமே காரணம் என திரும்பத்திரும்ப

இங்கே சொல்லப்பட்டிருக்கிறது. கல்விமுறை, ஊடகங்கள், பொதுவான அறிவியக்கம் வழியாக நாலைந்து தலைமுறைகளாக சராசரி இந்திய மனம் அப்படி நம்பும்படிப் பயிற்றுவிக்கப்பட்டிருக்கிறது.

இந்த மூளைச்சலவையில் இருந்து வெளிவருவது அத்தனை எளிதல்ல. சொல்லப்போனால் இன்றைய சூழலில் அது சாத்தியம்கூட அல்ல. ஏனென்றால் அந்த மூளைச்சலவைக்கு ஆளானால் நீங்கள் 'நவீனச்சிந்தனை' கொண்டவர், மறுத்தால் 'மதவாதி' என ஆக்கப்பட்டிருக்கிறது.

இச்சூழலில்தான் இந்தியாவின் மகள் போன்ற ஆவணப்படங்கள் வருகின்றன. இவை உருவாக்கும் பிம்பங்கள் இந்தியா மீது அக்கறையுடன், இச்சமூகத்தை சீர்திருத்த எண்ணும் சிந்தனைகளுடன் இணைந்துகொள்வதில்லை. அவை இந்தியாவை எதிர்மறையாகச் சித்தரிக்கக்கூடிய, இந்தியப்பண்பாட்டையும் மதத்தையும் இழிவுபடுத்தக்கூடிய வலுவான சிந்தனைப்போக்கின் ஆதாரங்களாகவே மாறுகின்றன. ஆகவேதான் இவற்றை ஐயத்துடன் பார்க்கப்படுகின்றன.

இந்தியாவின் மகள் அத்தகைய நுண்மையான காட்சிச்சித்தரிப்புகள் கொண்ட ஆவணப்படம். அதில் இந்தியாவின் சராசரி ஆணின் மனநிலை வெளிப்படுத்தப்பட்டிருப்பதாகவே கொள்வோம். அந்த பாலியல்வல்லுறவுக்கு எதிராக இந்தியா முழுக்க எழுந்த மாபெரும் தார்மீகக் கோபம், அரசையே அதிரவைத்த அலை பதிவாகியிருக்கிறதா? இல்லை. ஏனென்றால் அது அந்த அம்மாள் இந்தியாபற்றி உருவாக்க எண்ணும் மனநிலைக்கு எதிரானது

அந்தப்படம் தடைசெய்யப்பட்ட போது அவர் கொடுத்த பேட்டியில் இந்தியா நோயுற்ற சமூகம் என்கிறார். அவர் காட்டவிரும்பியது அதை மட்டுமே.

ஆகவேதான் ஒரு ஜெர்மானியப்பேராசிரியர் இந்தியா என்பது கற்பழிப்பின் தேசம், இந்திய ஆண்களுக்கு உயர் ஆய்வில் இடமளிக்கமுடியாது என்று முடிவு எடுக்கிறார். சிந்தனைசெய்து பாருங்கள், ஒரேயொரு ஆவணப்படம் அப்படிச் சொல்லவைக்குமா என்ன?. அது தொடர்ச்சியாக நிலைநிறுத்தப்படும் ஓர் பிம்பம், இந்தப்படம் அதில் சென்று சேர்ந்துகொள்கிறது. பிரச்சினை இருப்பது இங்குதான். [University of Leipzig ன் பேராசிரியர்

Annette Beck-Sickinger]

இந்தியாவில் பாலியல் வல்லுறவுக்குற்றங்கள் அதிகமா? அதற்கு இந்திய ஆண்களின் சராசரி மனநிலை காரணமா? இந்தியாவின் இன்றுள்ள சமூகமனநிலை பாலியல் வல்லுறவை மறைக்கவும் அதன் மூலம் ஊக்குவிக்கவும் செய்கிறதா? இந்தியச்சட்டமும் காவல்துறையும் பாலியல் வல்லுறவுக்கு சாதகமானவையா? எல்லாவற்றுக்கும் என் பதில் ஆம் என்பதே.

அதை வெளிப்படுத்தி இந்திய உளவியல் மேல் வலிமையான தாக்குதலைத் தொடுக்கவேண்டுமா? ஆவணப்படங்கள், திரைப்படங்கள் தேவையா? அனைத்துக்கும் என் பதில் ஆம் என்பதே

ஆனால், இந்த தேசத்தின் மக்கள் மீதான அன்புடன், நன்மதிப்புடன் அது செய்யப்படவேண்டும். லெஸ்லியின் இந்த ஆவணப்படத்தை இந்தியாவின் சமூகசீர்திருத்தவாதி ஒருவர் எடுத்திருந்தால் அதன் பொருள் வேறு. இங்கே இவரது நோக்கம் சீர்திருத்தம் அல்ல. இந்த அம்மணி இந்தப்படத்தை இந்தியாவிற்காக எடுக்கவும் இல்லை. இது வெளிநாடுகளுக்காக இந்தியா பற்றி எடுக்கப்பட்ட ஒரு பிரச்சாரப்படம்.

இந்தப்படத்தை முழுமையான நல்லெண்ணத்துடன் நோக்கி இதை ஆதரிப்பவர்களின் பரந்தஉள்ளம் பாராட்டுக்குரியது. ஆனால் நான் ஆதரிக்கவேண்டும் என்றால் எனக்கு இதை எடுப்பவர்களின் வரலாறு தடையாக உள்ளது.

ஏன் இந்தியாமீதான இந்த தொடர்அவதூறு நிலைநிறுத்தப்படுகிறது? முதற்காரணம், இது இந்தியாவை வெள்ளையர் ஆண்டபோது உருவாக்கப்பட்ட கருத்துநிலை. இந்தியர்களுக்கு தங்களைத்தாங்களே ஆண்டுகொள்ளும் அறிவுத்திறனும் அறவல்லமையும் இல்லை என்று அவர்கள் ஊட்டிய எண்ணமே இங்கே காலனியாதிக்கத்தை நிலைநாட்டியது. இன்றும் காலனியாதிக்கமனநிலையை தக்கவைத்துக்கொள்ளவே மேலைநாட்டு ஊடகங்களில் ஒருசாரார் விழைகிறார்கள். பிபிஸி எப்போதுமே அந்த எண்ணம் மேலோங்கிய ஊடகம்

இரண்டு, இவ்வாறு இந்தியர் மனதில் உருவாக்கப்படும் தன்வெறுப்பு மதமாற்ற சக்திகளுக்கு மிகமிகச் சாதகமானது. இந்தியாவின் பண்பாடு, மதம், வரலாறு மீதான மதமாற்ற சக்திகளின் தொடர்தாக்குதலை காந்தி , அம்பேத்கர் முதல் பலர் தொடர்ந்து எழுதிவந்திருக்கிறார்கள். இந்தியர்

மனதில் அது உருவாக்கும் தாழ்வுணர்ச்சி ஒருபக்கம். மறுபக்கம் இங்கே மதமாற்ற நோக்கங்களுக்காக அங்கிருந்து நிதியளிப்பவர்களுக்கு மதமாற்ற சக்திகள் அங்கே உருவாக்கியிருக்கும் சித்திரத்துடன் அது ஒத்துபோகிறது என்பது. ஆகவே அவர்களுக்கு அது உவப்பானது.

ஜெர்மானியப்பேராசிரியர் இந்தியா கற்பழிப்பின் நாடு , ஆகவே இந்திய ஆய்வுமாணவன் சகமாணவிகளை கற்பழிப்பான் என முடிவுகட்ட இதுவே காரணம். அவன் அங்குள்ள ஒரு சர்ச்சிற்குச் சென்றுவருவான் என்றால் அந்த எண்ணத்தை மாற்றமுடியும்! நான் லெஸ்லியின் இந்த ஆவணப்பட விவகாரத்தை இங்குள்ள மதப்பிரச்சாரகர்கள் தொடர்ந்து மேடையில் பேசிவருவதைக் காண்கிறேன். கற்பழிக்கும் இந்துக்களின் மனம் மாற அருளும் கர்த்தாவே என நெக்குருகுகிறார்கள்!

காலனியாதிக்கக் காலகட்டத்தில் உருவான இந்த இந்திய வெறுப்பு, இந்தியப்பண்பாட்டு எதிர்ப்பு, இந்துமதநிராகரிப்பு மனநிலையை ஏன் ஐரோப்பா, குறிப்பாக பிபிஸி போன்ற பிரிட்டிஷ் அமைப்புகள் நீடிக்க விழைகின்றன?

சமீபத்தில் ராய் மாக்ஸம் சொன்னார், இந்தியாவில் பெரும் செயற்கைப்பஞ்சங்களை பிரிட்டிஷ் ஆட்சி உருவாக்கியது என்பதை பெரும்பாலான பிரிட்டிஷார் அறிந்திருக்கவில்லை. அறிஞர்களுக்குக் கூட அது தெரியாது. அது ஆதாரபூர்வமாகச் சொல்லப்படும்போது சராசரி பிரிட்டிஷ்மனம் கொதிப்படைகிறது. நாகரீகம் இல்லாமல் பஞ்சத்தில் செத்துக்கொண்டிருந்த இந்தியாவை பிரிட்டிஷார் மீட்டனர் என்பதே அவர்கள் நம்புவது. அவர்களுக்குச் சொல்லப்பட்டிருப்பது அதுவே

சமீபத்தில் நீங்களே எழுதிய கடிதத்திலும் இதைக் குறிப்பிடுகிறீர்கள். பஞ்சம் பற்றிய தகவல்கள் சொல்லப்படும்போது பிரிட்டிஷார் எப்படி கொந்தளிக்கிறார்கள் என்று. அதாவது சராசரி பிரிட்டிஷ்குடிமகன் எதை அறியவேண்டும், எதை நினைக்கவேண்டும் என்பதை இந்த வகையான ஆவணப்படங்கள்தான் நிர்ணயிக்கின்றன

இந்தியாவில் பிரிட்டிஷார் உருவாக்கிய செயற்கைப்பஞ்சத்தைப் பற்றி, அது உருவாக்கிய பேரழிவுகளைப்பற்றி பேச அங்குள்ள ஊடகங்கள் விரும்புவதில்லை. அந்த அழிவுகளுக்குக் காரணம் இந்தியாவின் பின்தங்கிய உற்பத்திமுறை, இந்தியப்பண்பாட்டில் உள்ள சாதிமுறை, இந்துமதம்

போதிக்கும் மனிதாபிமானம் அற்ற கருத்துக்கள் மட்டுமே என நூறு வருடமாக திரும்பத்திரும்ப வாதிட்டு வருகிறார்கள். அதை மறுக்கும் எதையும் அவர்கள் அனுமதிப்பதில்லை.

உதாரணமாக பஞ்சம் பற்றி எழுதும் ராய் மாக்ஸம் போன்ற நடுநிலை எழுத்தாளர்களின் நூல்கள் அங்கே விற்பதில்லை. ராய் எழுதிய உப்புவேலி அமெரிக்காவில்தான் விற்றது. பிரிட்டனின் புறக்கணிக்கப்பட்டது. இந்தியாவில் அது கிடைக்காமலேயே பார்த்துக்கொள்ளப்பட்டது. அதை டாலர்விலையில் இணையம் மூலம் வெளிநாட்டில் இருந்துதான் வாங்கமுடியும்.இத்தனைக்கும் ராயும் இந்தியா மேல் கடுமையான விமர்சனத்துடன்தான் இருக்கிறார்.கூடவே கொஞ்சம் பிரிட்டிஷ் வரலாற்றையும் சொல்கிறார்.

ராய் மாக்ஸம் கேட்டார், ஏன் இந்தியா ஒட்டுமொத்தமாக பஞ்சத்தை மறந்துவிட்டது? இடதுசாரி ஆய்வாளர்கள், கல்வியாளர்கள் எவரும் அதைப்பற்றிப் பேசவில்லை என. நான் சொன்னேன். இடதுசாரி ஆய்வாளர்கள் ஐரோப்பாவே உலகை காக்கும் என்றும் பிரிட்டன் இந்தியாவின் ரட்சகன் என்றும்ம் கார்ல் மார்க்ஸ் எழுதியதை மதநம்பிக்கையாகக் கொண்டவர்கள். அவர்களின் ஐரோப்பியவழிபாட்டு மனநிலை பஞ்சங்களை நோக்கி கண்மூடவைத்தது. அவர்கள் இந்தியாவை பின்தங்கிய பண்பாடு என்று சொல்லவே எப்போதும் முயல்கிறார்கள். நமது கல்வியாளர்களைப் பொறுத்தவரை அவர்கள் நாடும் அங்கீகாரம் முழுக்க மேலைநாட்டில் இருந்தே வரவேண்டும். மேலைநாட்டு அறிஞர்களுக்குப் பிரியமற்ற எதையும் அவர்கள் பேசமாட்டார்கள்.

இச்சூழலில் வந்திருக்கிறது இந்த ஆவணப்படம். இதில் உண்மை இருக்கிறதா என்பதைப்பார்ப்பதற்கு முன்னால் இது எவரால் எவருக்காக எடுக்கப்பட்டிருக்கிறாது என்பதையே பார்க்கவேண்டும். எந்த மனநிலையை இது உருவாக்குகிறது என்றே பார்க்கவேண்டும். இதைச் சொல்பவர்கள் எதையெல்லாம் மறைக்கிறார்கள் எதையெல்லாம் மிகைப்படுத்துகிறார்கள் என்பதை கவனிக்கவேண்டும்.

ஆக, ஓர் இந்தியனாக நான் இந்த ஐரோப்பியர்களின் நல்லெண்ணத்தை நம்பவேண்டுமென்றால் முதலில் இவர்கள் கொஞ்சமேனும் தன்னைப்பற்றிய உண்மைகளைச் சொல்லவேண்டும். கொஞ்சமேனும் தங்கள் செயல்களை மறுபரிசீலனை செய்துகொள்ள வேன்டும். பஞ்சம், அதன் காரணங்கள்,

பின்விளைவுகள் பற்றி ஒரு பத்து உண்மையான ஆவணப்படங்களை பிபிஸி எடுக்கட்டும். பிரிட்டிஷ் மக்களிடம் உண்மையைப் பேசட்டும். அதன் 'மனிதாபிமான- அற -ஒழுக்க உணர்ச்சியை' நானும் ஏற்றுக்கொள்கிறேன்.

## (11) இந்தியாவின் மகள் -விவாதம்

அன்புள்ள ஜெ,

உங்களின் இந்தியாவின் மகள் குறித்த கருத்துக்களுடன் முழுக்க முழுக்க ஒத்துப் போகிறேன். செறிவான புள்ளிவிவரங்களுடன், விரிவான வரலாற்றுப் பின்புலத்துடன் அணுகி இருக்கிறீர்கள். நேரமெடுத்து இதற்கு பதில் சொன்னதற்கு நன்றி.

இங்கே என் ஐரோப்பியத்தோழர் ஒருவர் “இந்தியாவில் உங்கள் பெண்களுக்கு பாதுகாப்பு இல்லையாமே? அவர்கள் ஒன்று கற்பழிக்கப் படுகிறார்கள் அல்லது மேல் ஜாதியால் அவமதிக்கப்பட்டு கொல்லப்படுகிறார்கள். மிகுந்த அதிர்ச்சியாயிருக்கிறது.”, என்று வெள்ளையர்களுக்குரிய சுமை தாங்கும் கனிவுடன் கேட்டார். “நீங்கள் புள்ளி விவரங்களை மட்டும் கேட்டீர்களானால், நாகரீக ஐரோப்பாவின் எந்த தேசத்தை விடவும் எங்கள் தேசம் பெண்களுக்கு மரியாதை அளிக்கும் தேசம் தான்; அத்தனை பெரிய தேசத்தில், இவ்வளவு மக்கள் தொகைப் பெருக்கத்தில் இவை ஒன்றும் ஆபத்தான சதவீதம் அல்ல என்று எளிதாக நிறுவ முடியும். அதை வைத்து நான் இதை நியாயப் படுத்த முயலவில்லை. நீங்கள் சொல்வது போல ஒட்டுமொத்தமாக பாதுகாப்பு அற்றுப் போன தேசம் அல்ல என்னுடையது. ஆனால் சராசரி இந்திய ஆண் மனதில் ஓர் மாற்றத்தின் தேவை உள்ளது. அதை நோக்கி நிச்சயம் நாங்கள் செல்வோம். எவ்வகையில் ஆனாலும் இத்தகைய செயல்கள் எங்களுக்கு தலைகுனிவே. ஆயினும் இந்தியா ஓர் மேலும் மேலும் குடிமைப் படுத்தப்பட்ட சமூகமாக மாறத் தேவையான விதிகளை இத்தகைய சம்பவங்களின் மூலம் நாங்கள் அடைகிறோம். சீக்கிரம் அந்த மாற்றம் வந்து சேரும்” என்றேன். “இந்த நாகரீக உலகில் இது காட்டுமிராண்டித்தனம் அல்லவா? எவ்வளவு நாளில் அம்மாற்றத்தை எதிர்பார்க்கிறீர்கள்?” என்றார் அவர். “தேவாலயத்தைக் கேள்வி கேட்ட பெண்களை எரித்தும், கூண்டுகளில் அடைத்து தேவாலய உச்சியில் தொங்கவிட்டு பறவைகளுக்கு உணவாக்கியும் மரியாதை அளித்த ஐரோப்பா மாற எடுத்துக் கொண்டதை விடச் சீக்கிரம் மாறிவிடுவோம்” என்று பதிலிறுத்தேன். அவர் என் தலைமுறையை, அதாவது நுகர்வுத் தலைமுறை, சார்ந்தவர். எனவே அதற்கு மேல் வரலாற்று விசாரணைக்கெல்லாம் செல்லாமல், “உங்களைக் காயப் படுத்த இதைச் சொல்லவில்லை” என்று சொல்லிவிட்டு சென்று விட்டார்.

இந்தியாவின் மகள் உலகெங்கும் சாதிக்க விரும்புவது இதையே. அந்த ஆவணப் படம் இங்கே இந்தியா என்பது பாம்பாட்டிகளின் தேசம் என்பதில் இருந்து கற்பழிப்பாளர்களின் தேசம் என்ற பெயர் மாற்றத்திற்கே பயன்படுகிறது. நீங்கள் சொல்லியிருந்தது போல், அந்த நிகழ்வுக்குப் பிறகு ஒட்டு மொத்த இந்தியாவும் அதற்காக ஒன்றிணைந்ததை அந்த ஆவணப் படம் காத்திரமாகக் காட்சிப்படுத்தவில்லை. அப்பெண்ணின் குடும்பத்தினர் இக்கொடுமையைக் கையைக் கட்டிக் கொண்டு வேடிக்கை பார்க்கும் அவல நிலையைத்தான் இந்தியா அளித்திருக்கிறது என்ற பிம்பத்தை ஏற்படுத்தும் வகையில் இரு சாராரின் குரல்களில் அத்துயர நாளை மீளுருவாக்கம் செய்கிறது அந்த ஆவணப் படம். உண்மையில் அது கற்பழித்தவனின் தரப்பு மட்டுமே ஓங்கிப் பேசப்பட்ட ஒரு ஆவணப் படம். அது பற்றிக்கேள்வி வரக்கூடாது என்பதற்காக அந்த அம்மையார் ஓர் பேட்டியில் அப்பெண்ணின் தோழன் இச்சம்பவம் பற்றிப் பேச பணம் கேட்டதாகவும், தான் கொடுக்க மறுத்ததால் தான் அவன் இப்படத்தில் இடம்பெறாமல் போய் விட்டதாகவும் பேசுகிறார். முகேஷ் சிங்கிற்கு நாற்பதாயிரம் ரூபாய் கொடுக்கப்பட்டதாக ஓர் தகவல் இணையத்தில் படிக்க நேர்ந்தது. அந்த வக்கீல்கள் தாங்கள் கூறியதையே மீண்டும் மீண்டும் ஆணித்தரமாகச் சொல்வது அவர்களுக்கும் ஏதேனும் பொசிந்திருக்கலாம் என்றே எண்ணத் தோன்றுகிறது. அந்த சம்பவம் இந்தியாவில் எத்தகைய அதிர்வலைகளைத் தோற்றுவித்தது, இந்திய அரசாங்கம் அதை எவ்வாறு எதிர்கொண்டது போன்றவற்றைப் பற்றியும் பேசியிருந்தால் ஆவணப் படம் என்ற அளவிலாவது முழுமையான ஒன்றாக இருந்திருக்கும். ஆனால் அது அவர்கள் எதிர்பார்த்த பிம்பத்தை ஏற்படுத்தாதே!

ஆனால் அதைத் தடை செய்தது என்னைப் பொறுத்தவரை தவறான முன்னுதாரணம். அதற்குப் பதிலாக அப்படம் விட்ட கோட்டைகளை, அது சொல்லாமல் விட்ட தகவல்களை தொகுத்து பரப்பியிருந்திருக்க வேண்டும். தடை செய்யாமல், அப்படத்தின் பின்னணியை மேலும் தெளிவாக இந்தியாவிடமும், உலகத்திடமும் எடுத்துரைத்திருக்க வேண்டும். அப்படத்திற்கான நமது கண்டனங்களை, அக்கண்டனங்களுக்குப் பின்பு உள்ள நமது உணர்வுகளை சோர்வில்லாமல் எடுத்து வைத்து இருக்க வேண்டும். இதைச் செய்யும் பலம் தற்போதைய அரசுக்கு உண்டு. ஆனால் அவர்கள் இந்த வாய்ப்பைத் தவற விட்டுவிட்டனர் என்றே நினைக்கிறேன்.

இங்கே மேற்குலகில் அந்த அம்மையார் இனி ஐ.நா வின் பெண்ணுரிமைக் காவலாரக நியமிக்கப்படுவார் என்று எதிர்பார்க்கலாம்.

அன்புடன்,
மகராஜன் அருணாச்சலம்

அன்புள்ள அருணாச்சலம் மகாராஜன்,

இந்தியாவின் துரதிருஷ்டங்கள் இரண்டு. ஒன்று சற்றேனும் இந்த நாடு, மக்கள் மேல் நன்மதிப்பில்லாத மூளைச்சலவைக்கூட்டம். இன்னொரு பக்கம் தெருச்சண்டை, அதிகார மொண்ணைத்தனம் அன்றி அறிவார்ந்த செயல்பாடுகளே இல்லாத இன்னொரு கூட்டம். இருவரும் மற்ற தரப்புக்கான நியாயங்களை உருவாக்கி அளிப்பதிலேயே குறியாக இருக்கிறார்கள். இந்தியாவின் மகள் தடைசெய்யப்பட்டிருக்கக் கூடாது. அது விரிவாகக்கருத்துத் தரப்பில் முறியடிக்கப்பட்டிருக்கவேண்டும். ஒரு ஐம்பது லட்சம் ரூபாயை நல்ல ஆவணப்பட இயக்குநர் ஒருவருக்கு அளித்து இந்த ஆவணப்படத்தின் உள்விளையாட்டுகளையும் உண்மைகளையும் எடுத்திருந்தாலே போதும்.

உதாரணமாக அருந்ததி ராய் என்ற இன்னொரு லெஸ்லி காந்தியைப்பற்றி அவதூறாகவும் திரிபாகவும் அம்பேத்கர் நூலுக்கு முன்னுரை என்ற பாவனையில் எழுதியதை ராஜ் மோகன் காந்தி அம்பலப்படுத்தியதைச் சுட்டிக்காட்டலாம். அருந்ததியின் திரிபுகளை, உள்நோக்கம் கொண்ட பிழைகளை, திட்டமிட்ட பொய்கள நிதானமாக அம்பலப்படுத்தும் அந்தக்கட்டுரை அருந்ததி எழுதியதை முற்றிலுமாக காலிசெய்துவிட்டது. இதுவே அறிவுத்தள எதிர்வினை. [காலச்சுவடு அருந்ததி எழுதியதை நூலாக வெளியிடவிருக்கிறது]

நம்மூர் டிவியில் லெஸ்லியின் படம் பற்றி ஒரு விவாதம் வரட்டும். எந்த நியாயமும் பேசப்படாது. எச். ராஜா மாதிரி ஏதாவது ஒருவர் வந்து அமர்ந்து லெஸ்லியின் கையை உடைப்போம் என்று பேசுவார். மறுபக்கம் அய்யோ கருத்துசுதந்திரம் அழிக்கப்படுகிறது என கூச்சல் கிளம்பும். அவ்வளவுதான்

ஜெ

Sh Jeeyamohan

I am an ardent reader of your books. (I nowadays cut and paste your shortstories from the internet and send to all my relatives and friends to share what I enjoyed, cried and laughted with.)

I am writing this mail in English, because you will laugh at my Tamizh, and also it would take lot of time for me to write this in Tamizh.

I read your post about Indias daughter documentary. I was surprised at your reaction. Hence this …

My point is this:

1. Look at the documentary as a documentary. It shows up what happened in India and even now such incidents happen routinely, some get reported some go unnoticed. Whether it happens outside India – of course yes, But that does not mean you cannot have a documentary on what happened here.
2 You may agree or disagree, (but that after seeing the documentary, not based on the opinions of certain parties or persons). A documentary film needs to be looked at irrespective of the nationality of the maker of the documentary. Bringing in the atrocities committed by the British (of course it is true) does not mean we should not watch a documentary by a Britisher!
3. Banning something does no good to anyone. More people will end up seeing it. And I did not understand the logic of the banning – is it because it is portraying India in a bad way? It portrays the type of administration we have in the country. Where Law and order machinery is used only for protecting politicians of all hues.
4. And now I read that the Court feels that the Judges of the Supreme court may be swayed by the rapists interview. Are we having some duffers as Judges of the Supreme Court of India? At least till this time I was lead to believe that this was not true.
5. Indian Parliament discusses the issue – the ruling party finds the earlier ruling dispensation at fault because the documentary maker was allowed in jail. While there may be merit in what they said, still the product cannot be banned because the rules were not adhered to.
6. If we get into this mind set of banning anything and everything, soon we will be like the Talibanised Afghanistan. We just do not seem to understand the great democracy that we are. I realised this when I spent quite some time in the Gulf. (Perhaps the soft corner for BJP and for what it stands for originated during those days. My late father would be aghast to know of my views today!)

I am not saying NDTV is the holy grail. But Sonia Singh's religion and that her husband was a Congress minister etc. should in no way influence our decision to watch the documentary and decide for ourselves.

When the Govt has so many problems to overcome, this issue is certainly not a distraction it can ill afford.

What I like is the continued silence of the Prime Minister on the subject. Only wish other guys just told the opposition to shut up and continue with the parliamentary work.

I just wanted to present my view point. May be it was too long. Still ….,

visvanathan

அன்புள்ள விஸ்வநாதன் அவர்களுக்கு

நான் ஆங்கிலக் கடிதங்களுக்கு பொதுவாக பதிலளிப்பதோ பிரசுரிப்பதோ இல்லை. தமிழில் பேசமுடியுமா என்ற முயற்சியே இந்த தளம்

என் கருத்துக்களை மையத்தில் இருந்து விலகியோ, பிழையாகவோ புரிந்துகொண்டிருந்தாலும் பதிலளிப்பதில்லை. ஏனென்றால் பெரும்பாலானவை அத்தகைய கடிதங்களாகவே இருக்கும். அவற்றை போட்டால் தளம் நிரம்பிவிடும்

உங்கள் கடிதம் முதலில் வந்திருக்கிறது என்பதனால் இதை பதிலளித்து பிரசுரிக்கிறேன்

1. நான் அந்த ஆவணப்படம் ஒரு பிரிட்டிஷ் பெண் எடுத்திருப்பதனாலேயே பிழையானது என்று சொல்லவில்லை. தெளிவான ஏகாதிபத்திய-காலனியாதிக்க மனநிலை கொண்ட பிபிஸியின் படம் அது என்பது அந்தப்படத்தை மதிப்பிட முக்கியமான பின்னணி என்றே சொல்கிறேன். பின்னணியைப்பார்க்காதே என்று வாதிடுவதெல்லாம் வெட்டிவாதம். அதைப்பாராமல் எங்கும் எவரும் கருத்துக்களை பார்ப்பதில்லை. எந்தக்கருத்தும் தனியானதும் அல்ல அது ஒரு நீண்ட கருத்துப்பிரச்சார மரபின் ஒரு பகுதியாகவே முன்வைக்கப்படுகிறது. அந்தத் தொடர்ச்சியை அறியாமல் எவரும் கருத்துக்க்களை பார்க்கமுடியாது

2 அத்துடன் லெஸ்லியின் படம் படமாக மட்டுமே பார்க்கப்பட்டால்கூட தெளிவாகவே உள்நோக்கம் கொண்டதாகவும் அரைகுறையானதாகவும்தான் உள்ளது. நிர்பயா நிகழ்ச்சி இத்தனை பெரியதாக ஆனதற்குக் காரணமே இந்தியாவெங்கும் அது உருவாக்கிய அதிர்ச்சி அலை. அதற்கு எதிராக இந்தியாவெங்கும் உருவான கோபம் மற்றும் எதிர்ப்பு. எந்தப் பாலியல்வன்முறைக்கும் பிரிட்டனில் அப்படி ஒரு எதிர்ப்பு வந்திருக்காது. ஆனால் அப்படி ஒரு விஷயமே நிகழவில்லை என்றும் பாலியல்நிகழ்ச்சியை இந்தியா வெறுமே வேடிக்கைபார்த்தது என்றும்

மானசீகமாக இந்தியச்சமூகம் அதை ஆதரித்தது என காட்டமுற்படுகிறது லெஸ்லியின் ஆவணப்படம். லெஸ்லி உலகமெங்கும் சென்று இந்தியா நோயுற்ற சமூகம் என பேட்டியளித்துக்கொண்டிருக்கிறார். ஜெர்மனிய பேராசிரியருக்கு அந்த மாணவன் மேல் எழுந்த சினம் அதனால்தான் வந்தது.பாலியல் வன்முறையை 'மௌனமாக ஆதரித்த' இந்தியாவின் பெரும்பான்மை மக்களில் ஒருவராக அவரை அந்தப்பேராசிரியை புரிந்துகொண்டார். அந்த ஆவணப்படத்தின் நோக்கம் அதுவே

ஜெ

Hello Sir,

First my apologies for not writing in Tamil.

This is my first email to you, couldn't resist asking this. Aren't you contradicting yourself in your stance with regard to Maadhorupaagan and India's daughter?

Didn't Maadhorupaagan also try to depict a section of Indians and Hinduism in a bad light as India's daughter? Both the projects are foreign funded.
You rooted for Maadhorupaagan and but not doing so for India's daughter. Am I missing something here?

Hope I'm not disturbing you amid your schedule, if possible please clarify.

I see both the projects as ill minded and made to create a distasteful perception about India and Hinduism across the world.

Thanks,
Arvinth Esvaran

கவுண்டர்வாள் சமூகத்திற்கு,

கட்டுரையில் நான் தெளிவாகவே சொல்லிவிட்டேன். இந்தியர் ஒருவர் இந்திய சமூகத்தை விமர்சித்து எடுக்கும் படத்துக்கும் இதற்கும் வேறுபாடுண்டு

இரண்டு. இத்தகைய கருத்துக்களை தடைசெய்வது ஆர்ப்பாட்டம் செய்வது வழியாக எதிர்கொள்ளலாகாது. வலுவான எதிர்க்கருத்து வழியாக, பிரச்சாரம் வழியாக எதிர்கொண்டிருக்கவேண்டும்.

## (12) இன்றைய அரசியலில் ஒரு கனவு

அன்புள்ள ஜெயமோகன் அவர்களே,

சமீபத்தில் இராஜீவ் மல்ஹோத்ரா அவர்களும் அரவிந்தன் நீலகண்டன் அவர்களும் எழுதிய Breaking India புத்தகம் வாசித்தேன். அதற்கு சற்று முன்னர் உங்கள் தளத்தில் திராவிட கிறிஸ்தவம் பற்றி வந்திருந்த சில கட்டுரைகளையும் படிக்கும் வாய்ப்பு கிடைத்தது. கடந்த சில நாட்களாக தமிழர்களின் கருத்துலகில் பெரும் பணம் புழங்கிவருவதை பற்றியும் படித்து வருகிறேன்.

இது மிகவும் அதிபயங்கரமான, மனிதர்களை அடிமைப்படுத்தும் விதத்தில் விரிக்கப்பட்டுள்ள மாயவலையாக உள்ளது. இந்த வலையில் எந்த இடத்தில் என்ன முடிச்சு இருக்கும் என்று கூற இயலாது என்று புரிகிறது. ஒரு சாமானியனால் தீர்க்கவே முடியாத ஒரு பிரச்சினை. எந்தத் தரப்புக் கொள்கை பிடிப்பு கொண்டவராக இருப்பினும், சற்று ஆழமாக சிந்திப்பவராக இருந்தால் “நாம் எந்தத் தரப்பில் இருக்கிறோம், இதில் யாருக்கு எப்பொழுது ஆயுதமாகப் போகிறோம்?” என்ற கேள்வி மனதை உறுத்தும் என்பது நிச்சயம்.

இந்த நிலையில் தீர்வு என்ற அளவில் சாமானியர்கள் இந்தப் பிரச்சினையை நோக்குவது அர்த்தமற்றது என்றாகிறது. பிறகு எப்படி நோக்க வேண்டும் என்று சில முறை யோசித்திருக்கிறேன். சில சமயம், ஒரு அசட்டுத்தனமான தீவிரதேசியவாதம் இதற்குத் தீர்வாகுமா என்று தோன்றும். மறுகணமே, ஏன் அந்தத் தரப்பிலும் இவர்களால் ஊடுருவ முடியாதா என்று என் மனமே கேள்வியெழுப்பும்.

நான் கொஞ்சம் இந்துத்துவப் பற்றாளன். ஆனால் இணைய விவாதங்களில் ஹிந்துத்துவ ஆதரவாளர்களிடையே ஒரு குருட்டு முஸ்லீம் வெறுப்பு இருப்பதை கவலையுடன் பார்க்கிறேன். மனம் அதை ஏற்க மறுக்கிறது. ஆகையால் வேறு விதமாக சில சமயம் சிந்திப்பேன். யார் என்ன சிந்தனை விதையை விதைத்தால் என்ன, எல்லோருக்கும் நன்மை பயக்கும் சிந்தனையும் யாருக்கு தீங்கு நினைக்காத சிந்தனையுமாக இருந்தால் படிக்கலாம் என்று தோன்றும். ஆனால் எனக்கு நமது நாட்டில் மதச் சார்பின்மை என்பதே இது போன்றதொரு கருத்தாக்கம் என்பதும் ஆனால்

அதுவும் compromise ஆகியுள்ளது என்றும் தோன்றுகிறது (இதனால் தான் நான் இந்துத்துவவாதியாக என்னை நினைக்கிறேன்).

இப்படி எல்லா தரப்பும் இல்லை என்று ஆனால் மனிதன் என்னதான் செய்வான்? ஒரு யோசனை தோன்றியது. ஒரு விதமான அடிப்படைவாதம்தான் இந்த பிரச்சனைக்குத் தீர்வோ என்று தோன்றுகிறது. அதாவது ஆங்கிலேயர் காலத்திற்குப் பிறகு இந்தியாவினுள் வந்த எந்த சிந்தனையையும் எடை போடாமல் ஏற்றுக் கொள்ளாமல் இருப்பது. நம்மால் இயன்ற வரை பழந்தமிழ், சமஸ்கிருதம், பாலி, பிராகிருதம் என்று பழைய மொழிகளைப் பயின்று நம் கலாச்சாரத்தின் ஆழத்தை நாமே மொழிபெயர்ப்பாளர்களின் உதவியின்றி அறியமுற்படுவது. அதன் பிரச்சினைகளையும் first-handஆகப் புரிந்து கொள்வது, மேக்ஸ் முல்லர் போன்றோர் உதவியில்லாமல்.

இதில் பிரச்சினை இருக்கிறது. நவீனத்துவத்திலிருந்து விலகிவிடுவோம். உதாரணமாக நான் சமகாலப் புத்தகங்கள் வாசிப்பதையே கிட்டத்தட்ட நிறுத்திவிட்டேன். சமயம் கிடைத்தால் சங்க இலக்கியம் அல்லது வடமொழி இலக்கியம், இலக்கணம் என்று படிப்பது என்று ஆகிவிட்டேன். இந்த நோக்கையே நான் ஹிந்துத்துவமாகக் கொள்கிறேன், கலாச்சார அடிப்படைவாதம் என்ற வகையில். இது சரியான அணுகுமுறையா? இது ஒருவிதமான escapism தானா அல்லது இதனால் ஏதாவது நல்ல மாற்றங்கள் வரும் சாத்தியக்கூறுகள் உள்ளனவா? சில சமயங்களில் முஸ்லீம்கள் அடிப்படைவாதத்தை நோக்கிச் செல்வதற்கும் இதுதான் காரணமோ என்றும் தோன்றும். இதைப் பற்றிய உங்கள் கருத்து என்ன?

இப்படிக்கு,
கார்த்திக்

அன்புள்ள கார்த்திக்,

நீங்கள் உங்களை 'இந்துத்துவர்' என்று சொல்கிறீர்கள். அச்சொல்லை சரியான அர்த்தத்தில் பயன்படுத்துகிறீர்களா என்று தெரியவில்லை. '**இந்து மதத்தை ஒற்றைமையமும் ஒரேகட்டமைப்பும் கொண்ட நிறுவனமாக உருவகித்து, அதன் குறியீடுகளை அரசியல் ரீதியாக பயன்படுத்திக்கொண்டு, இந்துக்கள் என தங்களை உணரும் மக்களை**

**ஒரு அரசியல் தரப்பாக ஆக்கிக்கொண்டு அதன் மூலம் தேசிய அதிகாரத்தைக் கைப்பற்ற நினைக்கும் ஓர் அரசியல் தரப்பு’** தான் இந்துத்துவம். அதில் உங்களுக்கு உடன்பாடா என்ன?

எனக்கு உடன்பாடு இல்லை. அது இந்துமதத்தை இறுக்கமான அமைப்பாக்கி அதன் உள்விவாதங்களை அழிக்கும். அதன் மூலம் அடிப்படைவாதமே உருவாகும். அடிப்படைவாதம் எதிரிகளை முன்வைத்தே இயங்கும் தன்மை கொண்டது. வெறுப்பை தன் உள்ளாற்றலாக கொண்டது

பொதுவாக இன்று அரசியல் கோட்பாடுகள் ‘அன்னியரை’யும் ‘எதிரிகளை’யும் சுட்டிக்காட்டி அவர்களுக்கு எதிரான தீவிரமான வெறுப்பை உருவாக்குவதன் மூலமே இயங்குகின்றன. இந்து மதம் சார்ந்த அரசியல் உருவாகுமென்றால் அது இந்தியாவின் பிரிக்கமுடியாத உறுப்பான இஸ்லாம், பௌத்தம், சமணம் உட்பட உள்ள பிற மதங்களுக்கு எதிரானதாகவே ஆகும். அது நம்மை மத்தியகாலகட்ட மதப்போர்களுக்குக் கொண்டுசெல்லும்.

நான் இந்து ஞான மரபையும் இந்துப்பண்பாட்டையும் இந்துத்துவத்தில் இருந்து பிரித்தே பார்க்கிறேன். அதை மீண்டும் மீண்டும் சொல்லிவருகிறேன். இந்துமரபு என்பது பல்லாயிரம் வருடப் பாரம்பரியமுள்ள ஒரு மானுட ஞானத்தொகை. இந்துத்வம் என்பது அதைப் பயன்படுத்திக்கொள்ளும் ஒரு சமகால அதிகார அரசியல் போக்கு.

இந்துத்துவத்தையும் இந்துமரபையும் ஒன்று என்பவர்கள் பெரும்பாலும் இந்துமதத்தை அழிக்க நினைக்கும் மதமாற்ற சக்திகளும் அவர்களின் ஆதரவாளர்களும்தான். ஏனென்றால் மொத்த இந்து ஞானத்தையே சமகால அரசியலைக்கொண்டு அவதூறுசெய்ய அது வழிவகுக்கிறது. அவ்வரசியலின் எதிரிகளை எல்லாம் இந்துஞானமரபுக்கு எதிரிகளாக ஆக்கமுடிகிறது.

அந்தக் குறுக்கல்நோக்கை இந்துத்துவர்களும் ஏற்றுக்கொள்வார்கள். ஏனென்றால் தங்கள் அரசியலுக்கு அது பிரம்மாண்டமான பின்னணியை உருவாக்கி அளிக்கிறது. அதாவது ‘விவேகானந்தர் ஒரு விவேக் கட்டியார்தான்’ என்பார்கள் நம்மூர் இந்து எதிர்ப்பாளர்கள். ‘ஆமாம் ஆமாம், வினய் கட்டியார் விவேகானந்தரேதான்’ என்பார்கள் இந்துத்துவர்கள்.எனக்கு இருகுரலும் எதிரானவை.

இந்தக் குறுக்கல்வாதத்தை, அவதூறை, திரிபை எதிர்க்காமல் எதையுமே பேசமுடியாத நிலை இன்று ஏற்பட்டுள்ளது. ஆச்சரியமாக இருக்கிறது. நாம் நம் மதத்தை, நம் பண்பாட்டை, நம் பாரம்பரியத்தைப்பற்றிப் பேசுவதே ஃபாசிசம் என்ற கெடுபிடிநிலையை நம் மீது சுமத்திவிட்டார்கள். என்னுடைய தந்தையின் வழிபாட்டை நான் தொடர்ந்தால் என் குரு சொன்ன ஞானத்தைப்பற்றி நான் பேசினால், நான் மதிக்கும் ஒரு ஞானநூலில் இருந்து முற்றிலும் அன்பை போதிக்கும் ஒரு வரியை நான் மேற்கோள் காட்டினால் நான் மானுடவிரோதி, அறிவுக்கு எதிரானவன். எப்படி இந்தக் கெடுபிடி நம் சூழலில் உருவாகியது! உலகில் வேறெந்த நாட்டிலாவது இப்படி ஒரு நிலைமை உண்டா?

ஒரு தேசியக் கட்டமைப்புக்குள் வாழும் மக்களிடையே உருவாகும் அவநம்பிக்கைகள் மிக மிக அபாயகரமானவை . அவை மிக எளிதாக அந்நாட்டை சுரண்ட நினைக்கும் எதிரிகளால் பயன்படுத்தப்படும். ஒரு சிறு அதிருப்தியைக்கூட பெருநெருப்பாக ஆக்கி கோடானுகோடி மக்களை அழிக்கமுடியும். அதை ஆப்ரிக்கா நமக்குக் கண்கூடாக காட்டிக்கொண்டிருக்கிறது. ஆப்ரிக்காவிடமிருந்தும் நம் சென்ற காலத்தில் இருந்தும் நாம் பாடம் கற்றுக்கொள்ளாவிட்டால் நாம் பேரழிவுகளையே சந்திக்கவேண்டியிருக்கும்.

பிரம்மாண்டமான மக்கள்தொகை கொண்ட தேசம் இந்தியா. பல்வேறு பண்பாடுகளின் பெருந்தொகை இது. வரலாற்றின் போக்கில் இங்கே எல்லா பண்பாட்டினரும் எல்லா மதத்தினரும் எல்லா மொழியினரும் ஒன்றாகக் கலந்து எல்லா இடத்திலும் வாழ்கிறார்கள். ஒரு தனித்த பண்பாடுள்ள மொழியுள்ள மக்கள் மட்டுமே வாழும் நிலப்பிராந்தியங்களென அனேகமாக ஏதுமில்லை. ஆகவே பிளவுநோக்கும் வெறுப்பும் எங்கு மேலோங்கினாலும் அங்குள்ள சிறுபான்மையினரை அழிக்கும், அகதிகளாக்கும். அவ்வாறு நிகழ்ந்தால் உருவாகும் அழிவுகள் உலகம் இதுவரை காணாதவையாக இருக்கும்.

என்னுடைய அரசியல் என்பது அந்த அச்சத்தைச் சார்ந்ததே. இந்தியாவை நேரடியாகச் சுற்றிப்பார்த்து அறிந்த அச்சம் இது. தங்கள் பிளவுநோக்குகளை தீர்த்துக்கொண்ட ஐரோப்பாவா அல்லது அவற்றைப் பெருக்கி போரிட்டு அழியும் ஆப்ரிக்காவா எது நமக்கு முன்னுதாரணம் என்பதே என் கேள்வி.

ஐரோப்பிய நாடுகள் நம்மை ஆப்ரிக்காவாக ஆக்க முயல்கின்றன. நாம் செய்ய வேண்டிய கருத்தியல்போர் அந்த முயற்சிக்கு எதிராகவே.

நான் நம்பும் அரசியல் ஒரு தனிமனிதனைக்கூட இந்த தேசத்தில் எந்த நிலப்பகுதியிலும் அன்னியனாக உணரச்செய்யாதது. ஒரு மனிதனைக்கூட அகதியாக ஆக்கமுனையாதது. ஒருங்கிணைவை மேலும் மேலும் வலியுறுத்தும் ஜனநாயகத்தை நம்புவது.

இங்கே பொதுவாக இடதுசாரித்தரப்பில் இருந்தும் வலதுசாரித்தரப்பில் இருந்தும் பிளவுப்போக்கே முன்வைக்கப்படுகிறது. இடதுசாரிகள் தங்கள் அரசியல் லாபநோக்குக்காக சிறுபான்மையினரின் வாக்குவங்கியை கைப்பற்ற அவர்களின் மத அடிப்படைவாத நோக்குகளை ஆதரிக்கிறார்கள். பெரும்பான்மையின்மீது வெறுப்புகளை சிறுபான்மையினர் மனத்தில் அவர்களே கட்டமைத்து வளர்க்கிறார்கள். இந்தியாவின் மைய ஓட்டம் இந்துமதவெறி என அவர்கள் வேண்டுமென்றே சித்தரிக்கிறார்கள். அதன்மூலம் அன்னியமாகும் சிறுபான்மையினர் தங்கள் குடைக்கீழ் நிற்கும் வாக்குவங்கியாவார்கள் என நம்புகிறார்கள்.

இடதுசாரிகள் மதவாத எதிர்ப்பு என்ற பேரில் இந்தியப்பண்பாட்டையும் இந்துமரபையும் ஒட்டுமொத்தமாக அவதூறு செய்தும் திரித்தும் அழிக்க முனைகிறார்கள். இந்து மரபுக்குள் உள்ள ஒத்திசைவுப்போக்கை, சமரச நோக்கை வேண்டுமென்றே மறைக்கிறார்கள், திரிக்கிறார்கள். அதன் விளைவாக இந்தியாவை கட்டியெழுப்பியிருக்கும் அடிப்படையான தேசிய உணர்ச்சிகளை சிதைக்கிறார்கள். அவை நம்மை மேலும் அவநம்பிக்கைகளுக்குக் கொண்டுசெல்கின்றன.

இதற்கு எதிராக இந்துமரபின் ஒத்திசைவு நோக்கையும் சமரச நோக்கையும் முன்வைப்பதே காந்தியப் பார்வை. இந்தப்பண்பாட்டின் பரந்துபட்ட தன்மையை, முரண்பாடுகளை அங்கீகரிக்கும் தன்மையை விளக்கி இதுவே இந்நாட்டை உணமையில் நிலைநிறுத்தும் மையச்சரடு என்று காட்டுவதே காந்தியவாதிகளின் பணியாகும். அனைவருக்கும் அந்நம்பிக்கை உருவாகும்போதே இந்த நாடு நீடிக்கமுடியும். அதற்கு எதிரான சக்தியாக இடதுசாரிகளின் வாக்குவங்கி அரசியல் இன்றுள்ளது.

இந்து மதத்தை எதிர்மறையாகக் காட்டுவது இங்குள்ள மதமாற்ற அமைப்புகளின் தேவை. அதன் மூலம் உருவாகும் தேசிய அழிவில்

லாபம்பெறத் துடிக்கும் ஏகாதிபத்தியங்கள் இந்த மதமாற்ற அமைப்புகளுக்குப் பெரும் நிதியைக் கொட்டிக்கொடுக்கின்றன. ஆகவே அவர்கள் இடதுசாரிகளை பயன்படுத்திக்கொள்கிறார்கள். இடதுசாரிகளின் இந்துமத எதிர்ப்பு நடைமுறையில் மதமாற்ற சக்திகளுக்குச் சாதகமாகவே செல்கிறது. அதை உண்மையான இடதுசாரிகள் உணர்ந்திருந்தாலும் ஒன்றும் செய்யமுடியாமலிருக்கிறார்கள். இடதுசாரிகள் பலரின் நிதிப்பின்புலமாகவே இந்த மதமாற்ற சக்திகள் ஆகியிருக்கின்றன.

மறுபக்கம் இருவகையான வலதுசாரிப்பிரிவினை நோக்குகள். முக்கியமாகச் சொல்லப்படவேண்டியது இந்துத்துவமே. அது இந்துமதத்தின் இயல்பான சகிப்புத்தன்மையை அழிப்பதையே தன் அரசியலாகக் கொண்டிருக்கிறது. ஆர்.எஸ்.எஸ். அமைப்பின் சித்தாந்தியான கோல்வால்கர் 'துடிப்பான தேசியம்' என இதையே சொல்கிறார். இந்துமதத்தின் சமரசக்குரலை, ஒருங்கிணைவு நோக்கை அதன் பலவீனம் என இவர்கள் விளக்குகிறார்கள்.

இந்துஞானமரபின் மீது இடதுசாரிகள் தொடுக்கும் முற்றிலும் நியாயமற்ற தாக்குதல்கள் இந்துத்துவர்களின் மிகப்பெரிய சாதக அம்சம். ஒவ்வொரு சாதாரண இந்துவுக்கும் தன் மரபை இடதுசாரிகள் திரிக்கிறார்கள் அவதூறுசெய்கிறார்கள் என்று தெரியும். ஒருபோதும் அவன் தன் மதத்தை விட்டுவிடப்போவதுமில்லை. அத்துடன் இடதுசாரிகள் கிறித்தவ இஸ்லாமிய வாக்குவங்கி அரசியலுக்காக செய்யும் சமரசங்களும், அவர்களின் அடிப்படைவாதத்தை நியாயப்படுத்துவதும், அவர்களில் பலருக்குப்பின்னால் உள்ள மதமாற்ற அமைப்புகளின் நிதியும் சராசரி இந்துவுக்குள் கசப்பை உருவாக்குகின்றன.

உண்மையில் மெல்லமெல்ல இடதுசாரிகள் இந்தியாவில் தேய்ந்துகொண்டிருப்பதற்கான காரணமும் இதுவே. இந்தத் தவறான நோக்கை விட்டு இடதுசாரிகள் வெளிவருவது இன்று மிக அவசியமான ஒரு விஷயம். இடதுசாரிகளின் வலுவான தரப்பு இல்லையேல் இந்தியா போன்ற ஏழ்மை மிக்க நாடு, முக்கால்வாசித் தொழிலாளர்கள் இன்னமும் ஒருங்கிணைக்கப்படாத நாடு, பெருமுதலாளித்துவத்தின் தலைவாழை இலையில் சென்று விழும் என்பதே உண்மை. மிகப்பெரிய அபாயம் இதுவே.

சாமானியனின் அந்தக்கசப்பை வளர்த்தெடுத்து அவனை மெல்ல மெல்ல இந்து அடிப்படைவாதத்துக்குள் கொண்டு செல்கிறார்கள் இந்துத்துவர்கள்.

இன்றுகூட அம்முயற்சி பெருவெற்றி கிடைக்காத ஒன்றாக இருப்பதற்குக் காரணம் இந்து மரபின் உள்ளடக்கமாக உள்ள சமரசநோக்குதான். அந்நோக்கை விடாமல் வலியுறுத்திவரும் ஞானிகள்தான். ஆனால் இந்த இந்து மத அடிப்படைவாதம் மைய விசையாக ஆகுமென்றால் அது மிகப்பெரிய பிளவுப்போக்காக மாறும்.

இந்தியாவில் உள்ள சிறுபான்மை மதத்தினரில் ஒரு சிறிய தரப்பினரே உண்மையில் அடிப்படைவாத நோக்குள்ளவர்கள். மற்றவர்கள் ஒத்துவாழ, அதன்மூலம் லௌகீகமாக மேலே செல்ல மட்டுமே நினைப்பவர்கள். ஆனால் அடிப்படைவாத நோக்குக்கு நிதி வந்து குவிகிறது. மாபெரும் அமைப்புகள் உருவாகின்றன. உச்சகட்ட ஊடகப்பிரச்சாரம் நிகழ்கிறது. அறிவுஜீவிகள் கூலிப்படையாகச் சென்று வணங்கி நிற்கிறார்கள். இடது வலது அரசியல்கட்சிகளும் வாக்குவங்கிக்காகவும் பணத்துக்ககாவும் அவர்களை ஊக்குவிக்கிறார்கள். அதுவே அனைவர் கண்ணுக்கும் தெரிகிறது. திட்டவட்டமாக அது பிரிவினை நோக்கை நோக்கிக் கொண்டுசெல்கிறது.

இதைத்தவிர தென்னிந்தியாவில் உள்ள மொழிவெறி பிளவுச்சக்திகள், வடகிழக்கில் செயல்படும் இனவெறி பிளவுச்சக்திகள் அப்பட்டமான வெறுப்புக்குரலாகவே ஒலிக்கிறார்கள். இந்தியாவின் இயல்பான பன்மைத்தன்மைக்கு எதிரான தாக்குதல்களை நிகழ்த்துகிறார்கள். நம்பமுடியாத அளவுக்கு இவர்களுக்கு நிதிவசதி உள்ளது. அதை துப்பறிய வேண்டியதே இல்லை. இந்தப் பிளவுவாதம் பேசுபவர்களுக்கு மக்களாதரவே இருப்பதில்லை. ஒரு தொகுதியில் வைப்புத்தொகையை மீட்க இவர்களால் முடியாது. ஆனால் இவர்கள் அனைவருமே மிகவசதியான உயர்மட்ட வாழ்க்கையை வாழமுடிகிறது.

இச்சூழலில் ஒரு சமநிலைச்சிந்தனையாளன் செய்யவேண்டியதென்ன என்பது தெளிவாகவே இருக்கிறது. அது இந்துத்துவமோ இடதுசாரித்துவமோ ஃபாசிசமோ ஒன்றும் அல்ல. பிளவுநோக்குகள் அனைத்துக்கும் எதிரான சமரச நோக்குதான். எல்லா வெறுப்பியல்களுக்கும் எதிரான சமரசமில்லாத போர்தான். அதன் அடையாளம் காந்தி.

ஒவ்வொரு பிளவுநோக்கும் யாரோ ஒரு கும்பலை அதிகாரத்தை நோக்கி தள்ளும் நோக்கம் கொண்டதாக உள்ளது. 'அவர்கள் நம்மை அழிக்கிறார்கள் ஆகவே இவர்களை அதிகாரமேற்றுவோம்' என்பதே பிளவுநோக்குக்

கொண்டவர்களின் கூக்குரல். இவர்கள் வந்தால் மட்டும் நம்முடைய பிரச்சினைகள் தீர்ந்துவிடுமா?

யோசித்துப்பாருங்கள். இந்துத்துவர் மத்தியின் ஆட்சியைப் பிடித்தால் எல்லாம் சரியாகிவிடுமா? வாஜ்பாய் தன் மருமகன் மூலம் அளித்த பொற்கால ஆட்சியைப்போல? இல்லை வகாபியர் இஸ்லாமிய ஆட்சியை அமைத்தால் இங்கே சொர்க்கம் வருமா, தாலிபான்களின் ஆப்கானிஸ்தான் போல? இல்லை மாவோயிஸ்டுகள் ஆட்சிக்கு வந்தால் விடிவு வருமா, நேபாளத்தின் பொன்னாட்சியைப்போல? தமிழ்த்தேசியம் அமைத்தால் உதயநிதி ஸ்டாலினின் மகன் குறுநில மன்னராவார். அது போதுமா?

இங்கே இன்றுள்ள மக்களனைவரும் கூடிவாழக்கூடிய, தங்களுடைய பிரச்சினைகளை சமரசம் மூலம் தீர்த்துக்கொள்ளக்கூடிய, தங்களுக்கு எதிரான ஆக்ரமிப்புகளை சேர்ந்து எதிர்க்கக்கூடிய, தங்கள் வளங்களை வெற்றிகரமாகப் பயன்படுத்திக்கொள்ளக்கூடிய ஒரு அரசியல் மட்டுமே கொஞ்சம்கொஞ்சமாக தீர்வை நோக்கிச்செல்லும். ஓர் ஆக்கபூர்வமான ஜனநாயகமே அதற்கான வழியாகவும் இருக்கும். அதற்கு முதற்பெரும் தடை இந்தப்பிரிவினை அரசியலே.

நம்முடைய எதிர்காலச் சமூகம் பற்றிய கனவு ஆக்கபூர்வமானதாக இருக்கவேண்டும். நம் இயற்கை வளங்களை அழிக்காத, நம்முடைய கிராமங்கள் தன்னிறைவுடன் வாழக்கூடிய அதிகாரப்பகிர்வு கொண்ட, நம்முடைய நசிவு மனப்போக்குகளில் இருந்து விடுபட்ட ஒரு சமூகத்துக்காக நாம் கனவு காணலாம். கார்த்திக், இன்றைவிட பலமடங்கு சோர்வளிக்கக்கூடிய சூழலில் இந்தப்பெருங்கனவை காந்தி நமக்களித்துவிட்டுச் சென்றிருக்கிறார்.

அதை அறிய முயலுங்கள். கண்களை மூடிக்கொண்டு பின்பக்கமாகத் திரும்புவதில் பொருளில்லை. மரபின் நூல்களை நாம் இன்று வாழ்வதற்காகவே நாம் பயன்படுத்தவேண்டும். இன்றிலிருந்து தப்பிச்செல்வதற்காக அல்ல.

இந்த சமரசத்தின் அரசியல், பிளவுக்கு எதிரான அரசியல், கொஞ்சம் அபாயகரமானது. இங்கே பிளவும் வெறுப்பும் பேசும் எல்லா தரப்புக்கும் நீங்கள் எதிரியாக ஆகநேரும். இடதுசாரிகள் உங்களை வலதுசாரி என்பார்கள். வலதுசாரிகள் உங்களை இடதுசாரி என்பார்கள். நீங்கள்

ஒவ்வொருவரையும் எதிர்ப்பதனால் வெறுமே விளம்பரத்துக்காக எதிர்ப்பவர் என்று மிச்சபேர் சொல்வார்கள்.

அத்துடன் இளமையில் இந்த அரசியலுக்கு பெரிய 'கிளாமர்' இல்லை. வலதுசாரியோ இடதுசாரியோ தீவிரமானவராக காட்டிக்கொள்ளவேண்டிய அரசியலே இளைஞர்களுக்குப் பிரியமானது. 'மச்சான் அடிச்சு நொறுக்கணும்டா' என்று பேசினால்தான் ஒரு கெத்து. இந்த அரசியல் முதிரா இளமையில் கொஞ்சம் கிழட்டு அரசியல் என்று கூடத் தோன்றும்.

ஆனாலும் தனியாக நிற்பதில் ஒரு பெரிய சுயதிருப்தி உண்டு. முயன்றுபாருங்கள்.

## (13) இனங்களும் மரபணுவும்

அன்பின் ஜெமோ,

வணக்கம்.நான் தங்களின் படைப்புகளை கடந்த எட்டு வருடங்களாக படித்து வருகிறேன்.விஷ்ணுபுரத்தில் உள்ள தத்துவ உரையாடல்கள்தான் என்னை தூய கணிதத்தில் உள்ள dialectic ஐ அனுபவமாக உள்வாங்கி கொள்ள உதவின.

நேற்றைய The hindu வில் இந்தியாவில் ஆரியர் குடியேற்றம் என்பது கருதுகோள் அல்ல, உண்மை என்பதற்கான genome தரவுகள் கண்டறியப்பட்டுள்ளது என்றும் மேலும் இந்தியா என்பது குடியேற்றங்களின் நிலபரப்பாக இருந்து வந்திருக்கிறது. மேலும்,திராவிடம் என்பது கற்பனையான கருதுகோள் என்றும் குறிப்பிட்டிருந்தார்கள். தங்கள் கருத்தை அறிய.விழைகிறேன்.

ஜானகிராமன்

***

அன்புள்ள ஜானகிராமன்,

இவ்விஷயத்தில் நான் ஒரு பொதுவாசகன் மட்டுமே. நிபுணனாக என் கருத்துக்களைச் சொல்லமுடியாது. ஆனால் மிக எளிய பொதுவாசகனாகவே ஒன்றைச் சொல்வேன். எவ்வகையிலும் நம்பகத்தன்மையை உருவாக்காத, ஆய்வுகளை இதழியல் நோக்கில் எளிமைப்படுத்தி திரித்து எழுதிய ஒரு கட்டுரை இது. இவ்வகையில் நான் வாசிக்கும் முதல்கட்டுரையும் அல்ல.

இந்தியவியலை ஆராயும் ஒருதரப்பினருக்கு இந்தியாவையே அழித்தாலும்கூட நிறுவியாகவேண்டிய கொள்கையாக ஆரியப்படையெடுப்பு இருக்கிறது. அதற்காக எந்த எல்லைக்கும் செல்லமுடியும் என நினைக்கிறார்கள். அதன்மேல் நிறைய கட்டி எழுப்பிவிட்டார்கள்

இத்தகைய சில பிடிவாதங்களை மேலை ஆய்வுலகில் காணலாம். உதாரணமாக பரிணாமவாதத்தை கிறித்தவத்தின் படைப்புக்கொள்கைகளையும் உள்ளடக்கியதாக விளக்கும்பொருட்டு அங்கே மேற்கொள்ளப்பட்டுவரும் Creationism என்னும் கருத்தியல்

கழைக்கூத்தாட்டம். அறிவியலை எப்படியெல்லாம் அதன்பொருட்டு வளைக்கமுடியும், எப்படிப்பட்ட அறிவியல்மேதைகளை எல்லாம் அதைச்சார்ந்து பேசவைக்கமுடியும் என்பது பிரமிப்பூட்டக்கூடியது.

எந்த ஒரு பொதுப்புத்திக்கும் தெரியும் ஒரு விஷயம் உண்டு. மரபணு சார்ந்த ஆய்வுகள் எவையும் 'சமீப' கால வரலாற்றை புறவயமாக நிறுவ உதவக்கூடியவை அல்ல. மரபணுச்சோதனைகள் மானுட இனத்தின் கலப்பு, பரவல் பற்றிய மிகமிகப் பொத்தாம்பொதுவான சித்திரத்தையே அளிக்க முடியும். பல்லாயிரம்காலத்து உயிரினவிரிவாக்கத்தை மட்டுமே அதைக்கொண்டு சித்தரிக்கமுடியும். ஒப்புநோக்க மானுட வரலாற்றில் மிகச்சமீபத்தைய நிகழ்வான 'இன' கொள்கையை அல்ல.

அவ்வப்போது இந்த வகையான 'உயிரியல்' 'மரபியல்' ஆய்வுமுடிவுகள் ஊடகங்களில் தென்படுவதும் ஆறுமாதம் கழித்து அபத்தமானவை என்று பேச்சுவாங்குவதும் இங்கே நிகழ்ந்துகொண்டே இருக்கிறது. என்ன சிக்கல் என்றால் இவை அபத்தமானவை என்பது அறிஞர் நடுவே நிறுவப்பட்டாலும் வாட்ஸப் – மேடையுரை வழியாக மெய்ஞானம் புழங்கிவரும் தமிழ்ச் சூழலில் அதை மறுக்க எவராலும் இயலாது. திரும்பத்திரும்ப நம் காதுக்கே வந்துகொண்டிருக்கும்.

இந்தியாவில் மட்டும் அல்ல உலகமெங்குமே கூட எப்படியும் ஐம்பதாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே மானுட இனங்களின் பரவலும் கலப்பும் தொடங்கிவிட்டன. அதை ஜாரேட் டைமண்ட் [தமிழிலும் அவரது துப்பாக்கிகள், கிருமிகள் மற்றும் எஃகு – ஜாரேட் டயமண்ட் : வெளிவந்துள்ளது. தமிழாக்கம் பிரவாகன்] முதற்கொண்டு மானுடவியல்-புவியியல் அறிஞர்கள் விரிவாக பேசி நிறுவியிருக்கிறார்கள். இன்றைக்கு தோராயமாக இருபதாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் இறுதிப்பனிக்காலத்தில் வாழ்வதற்குரிய நிலங்களைத் தேடி மானுட இனம் பல்லாயிரம் கிலோமீட்டர்கள் பயணம்செய்து புதியநிலங்களைக் கண்டடைந்துள்ளது

இந்தியப்பெருநிலம் பூமத்தியரேகையை ஒட்டியது. பலவகையான இயற்கைச் சூழல் கொண்டது. ஆகவே ஐம்பதாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே இங்கு பல மக்களினங்கள் குடியேறியிருக்கலாம். அவர்கள் கலந்து பரவியிருக்கலாம். மகாபாரதமே பலவகையான அயலவர்களின் வருகை பற்றிச் சொல்கிறது. ஹூணர்கள், கிரேக்கர்கள், மங்கோலியர்,

துருக்கியர் என இந்தியாவுக்கு அயலவர் வந்துகொண்டே இருந்திருக்கிறார்கள். இந்தியர்களின் மரபணுக்களில் அக்கலவையின் சித்திரம் இருக்கும் என்பது மிக இயல்பானதே. அதில் இன்ன ஆண்டுகள் முதல் இன்ன ஆண்டுகள் வரை இன்ன இனத்தினர் வந்தனர் என மரபணுச்சோதனையில் நிரூபிக்கிறார்களாமா?

அந்த மானுடப் பரவலும் கலவையும் நிகழத்தொடங்கி மேலும் பற்பல ஆயிரம் ஆண்டுகள் கடந்தபின்னரே நாம் இன்றுபேசும் மானுடப்பண்பாடு ஆரம்பிக்கிறது. நாம் பேசும் மானுடப்பண்பாடு என்பதே எப்படி இழுத்தாலும் ஏழாயிரம் ஆண்டுகளுக்குப் பின்னால் செல்லாதது. அதன்பின்னரே மொழிகள் பிறக்கின்றன. குலங்களும் குடிகளும் உருவாகின்றன.இன அடையாளங்கள் கண்டடையப்படுகின்றன

இங்கே பேசப்படும் ஆரியதிராவிட இனப்பிரிவினையும், பண்பாட்டுப் படையெடுப்புகளும் அதற்குப்பின்னர் நிகழ்ந்தவை என்றுதான் சொல்லப்படுகின்றன. திராவிடநாகரீகம் இந்த மண்ணில் வேரூன்றியிருந்தது என்றும் ஆரியர் வந்து அதை வென்றார்கள் என்றும் சொல்லப்படும் ஊகங்களுக்கும் மானுடப்பரிணாமத்தின் தொடக்க காலத்தில் நிகழ்ந்த இனப்பரவலுக்கும் என்ன உறவு இருக்கமுடியும்?

ஆரியம்-திராவிடம் என்னும் பிரிவினை இந்தியாவின் தொன்மையான சில நூல்களில் இருந்த நிலம்சார்ந்த ஒரு பகுப்பு மட்டுமே. சிற்பநூல்களின்படி திராவிடம் என்பது கிருஷ்ணைக்கு கீழே காஞ்சிவரையிலான நிலம். அந்தப்பிரிவினையை இந்திய மொழிகளைப் பிரித்து ஆராய எல்லிஸ், கால்டுவெல் போன்ற ஆங்கிலேய ஆய்வாளர்கள் பயன்படுத்தினர். அதை சில ஆய்வாளர்கள் உடனடியாக இரு இனங்களாக உருவகித்துக்கொண்டனர்.எந்த விவாதமும் நிகழவில்லை. எந்த ஆதாரபூர்வமான தரவுகளும் பரிசீலிக்கப்படவில்லை.

விவேகானந்தர் முதல் அம்பேத்கர் வரை அத்தனை இந்திய சிந்தனையாளர்களாலும் அந்த ஆரிய- திராவிடக் கோட்பாடு நிராகரிக்கப்பட்டாலும் ஐரோப்பிய இந்தியவியலாளர்கள் அதை நம்பி, எழுதி பரப்பி ஒரு நிரூபிக்கப்பட்ட கொள்கையாக நிறுவிவிட்டுச் சென்றனர். இன்று அது அடிப்படையற்ற ஊகம் என்பது ஆய்வாளர் மத்தியில் பெரும்பாலும் கருதப்படுகிறது. அதை எதிர்க்கும் கடைசி மோசடி முயற்சி இம்மாதிரியான

'அறிவியல்' ஊகங்கள். இதற்கெல்லாம் 'அடச்சீ' என்பதற்கு அப்பால் எதிர்வினையாற்றுவதே தவறு.

இரண்டு கருதுகோள்கள் மிக வன்மையாக நிராகரிக்கப்படவேண்டியவை. ஒன்று, இந்தியபெருநிலத்தில் 'தூய' இனம் என ஒன்று இருக்க முடியாது. ஆரிய இனமும் சரி, திராவிட இனமும் சரி. ஏனென்றால் கற்கருவிகளை கையாளத் தொடங்கிய காலத்திலேயே இங்கே இனக்கலப்பு நிகழத் தொடங்கிவிட்டது.இங்குள்ள பண்பாடு அந்த கலவையினத்தால் உருவாக்கப்பட்டதே.இனமோ சாதியோ குருதித்தூய்மை என்பது நம்மவர் உருவகித்துக்கொள்ளும் ஒரு மாயை.

இரண்டு, இங்கு ஐரோப்பியர்களால் முன்வைக்கப்பட்ட இரண்டு இனங்களின் மோதல் என்னும் கொள்கை மிக மிக பிழையானது. இங்கு தூய இனம் என ஏதும் இல்லை. மேலோங்கியிருக்கும் உடற்கூறுகளைக் கொண்டு நோக்கினால்கூட குறைந்தது நான்கு வெவ்வேறு இனங்கள் இருக்கிறார்கள். ஆகவே இங்குள்ள பண்பாடு இனமோதலால் உருவாகிவந்தது என்பது நம் மீது பிறர் சுமத்தும் இழிவான வரலாறு. மோதல்கள் இல்லாமல் பண்பாடு இல்லை. ஆனால் மிக விரிவான உரையாடல், உள்ளடக்கிக்கொள்ளுதல் மூலம் உருவான பண்பாடு இது

*

நீங்கள் இடதுசாரி என்றால் சோவியத் ருஷ்யாவின் ராதுகா பதிப்பகத்தால் வெளியிடப்பட்ட 'மானுட இனங்கள்' என்னும் முக்கியமான நூலை வாசிக்கலாம். தமிழில் வெளிவந்துள்ளது.

ஐரோப்பாவின் அறிவுத்துறையில் பதினேழாம் நூற்றாண்டு முதல் இனவாதக் கொள்கைகள் எப்படி போலி அறிவியல் ஆதாரங்களின் அடிப்படையில் கட்டமைக்கப்பட்டு அரசியல்ரீதியாக பரப்பப் பட்டன, எப்படி பல நாடுகளின் வரலாறுகளே அவற்றின் அடிப்படையில் கட்டமைக்கப்பட்டன , இனமோதல்கள் உருவாக்கப்பட்டு பேரழிவுகள் நிகழ்ந்தன, அவற்றின் அடிப்படையில் சில தரப்பினரால் அதிகாரம் கையகப்படுத்தப்பட்டது என்பதை விரிவாக பேசுகிறது அந்நூல்.

தோலின் நிறம். கண்ணின் நிறம், மூக்கின் அளவு அளவு என வெவ்வேறு உயிரியல் அடிப்படைகள் அவ்வாறு மானுட இனங்களை பகுப்பதற்கு செயற்கையாக ஆய்வாளர்களால் கட்டமைக்கப்பட்டன. மண்டை ஒட்டியல்

என்னும் போலி அறிவியல்துறை நூறாண்டுகளுக்கும் மேல் பலநூறு அறிவியலறிஞர்களின் ஆதரவுடன் செயல்பட்டது. அவையனைத்தும் மிகப்போலியானவை என்பதை அந்நூல் ஆணித்தரமாக நிறுவுகிறது.

நூலின் இறுதியில் மானுட இனங்களைப்பற்றிய நூறு அறிவியலாளர்களின் பொது அறிக்கை ஒன்றும் உள்ளது.ஒரு சிந்திக்கும் மனிதன் மானசீகமாக கையொப்பமிடவேண்டிய ஆவணம் அது.

இன்று இடதுசாரிகள் கூட இனவாதம் பேசும் கீழ்மையைக் காண்கிறோம். ஒருகாலத்தில் சோவியத் ருஷ்ய நூல்களுக்குள் அவர்கள் சிந்தனையை தேக்கி நிறுத்தியிருந்ததை அறிவியக்கத்தவர் விமர்சித்தனர். இன்று அவற்றை வாசிப்பதை நிறுத்தி நாலாந்தர மேடைப்பேச்சாளர்களை மட்டுமே அறிந்தவர்களாக ஆகிவிட்டிருக்கிறார்கள் நம் இடதுசாரிகள் . ‘அய்யா சாமி, குறைந்தது ராதுகா பிரசுர நூல்களையாவது வாசிங்க’ என்று மன்றாடவேண்டியிருக்கிறது

நீங்கள் வலதுசாரி என்றால் அரவிந்தன் நீலகண்டன் எழுதிய இந்த எதிர்வினையை வாசிக்கலாம்.

## (14) உலகின் மிகப்பெரிய வேலி

சீனப்பெருஞ்சுவர் இன்றளவும் வரலாற்றின் சாதனையாக நின்றுகொண்டிருக்கிறது. கிட்டத்தட்ட அதனுடன் ஒப்பிடத்தக்க ஒன்று பதினெட்டாம் நூற்றாண்டில் இந்தியாவில் இருந்திருக்கிறது. மகாராஷ்டிராவில் பர்ஹான்பூரில் இருந்து தொடங்கி மத்தியப்பிரதேசம் வழியாக உத்தரப்பிரதேசம் வழியாக ஹரியானா வழியாக பஞ்சாப் வழியாக பாகிஸ்தானில் உள்ள சிந்து மாகாணம் வழியாகக் கிட்டத்தட்ட காஷ்மீரின் எல்லை வரை சென்று முடியும் ஒரு மாபெரும் வேலி.

இது உயிர்வேலி. முள்மரங்கள் வளர்த்து அவற்றை இணைத்துக்கட்டி எவரும் கடந்து போகமுடியாதபடி அமைக்கப்பட்டது. கிட்டத்தட்ட 12 அடி உயரம் உடையது இது. உலகவரலாற்றின் மிகப்பெரிய வேலி இதுதான். கிட்டத்தட்ட வட இந்தியாவை இரு நேர்பாதிகளாக இது பிளந்தது. 2500 கிமீ மைல் நீளத்துக்கு பெரும் பொட்டல்களை, விளைநிலங்களை, கிராமங்களை, நகரங்களை, பாலைவனங்களை, குன்றுகளைப் பகுத்தபடி ஓடியது இது. இதன் உச்சகாலகட்டத்தில் 1872ல் கிட்டத்தட்ட 14000 முழுநேர பிரிட்டிஷ் அரசூழியர்கள் இதை காவல்காத்துப் பராமரித்தார்கள். கிட்டத்தட்ட முக்கால்நூற்றாண்டுக்காலம் இது பிரிட்டிஷ் -இந்திய அரசின் அதிகாரத்தின் சின்னமாக நீடித்திருந்தது.

இந்த மாபெரும் அமைப்பைப்பற்றி இந்தியாவின் வரலாற்றாசிரியர்கள் எவருமே எழுதியதில்லை. இந்தியாவைப்பற்றிய எந்த நூலிலும் இது குறிப்பிடப்பட்டதில்லை. இதைப்பற்றி சுதந்திர இந்தியாவின் எந்த ஆவணத்திலும் ஒரு குறிப்பும் இல்லை. இந்தியாவில் உள்ள எந்த சமூக, பொருளாதார அறிஞரும் இதைப்பற்றி கேள்விப்பட்டதுகூட இல்லை. 1995 வரை.

பயணக்கட்டுரையாளரும் லண்டன் நூலக ஆவணப்பராமரிப்பாளருமான ராய் மாக்ஸ்ஹாம் 1995 இறுதியில் லண்டனில் ஒரு பழைய புத்தகக் கடையில் மேஜர் ஜெனரல் டபிள்யூ எச். ஸ்லீமான் என்ற பிரிட்டிஷ் வீரரின் நினைவுக்குறிப்புகளை வாங்கினார். 1893ல் பிரசுரிக்கப்பட்ட நூல் அது.

ஸ்லீமான் 1850களில் பிரிட்டிஷ் இந்தியாவில் ராணுவ அதிகாரியாகப் பணியாற்றி அன்றைய இந்தியா முழுக்க பயணம் செய்திருக்கிறார். அவரது பயணக்குறிப்புகளில் மன்னர்கள், சிற்றரசர்கள், கொள்ளையர்கள், புனித நகரங்கள், கோயில்கள் பற்றிய சித்தரிப்புடன் அன்றைய பிரிட்டிஷ் இந்திய அரசின் வரிவசூல் முறைகளைப்பற்றிய குறிப்பும் இருந்தது. அதில் ஸ்லீமான் இந்த மாபெரும் உயிர்வேலியைப்பற்றிச் சொல்கிறார்

ராய் மாக்ஸ்ஹாம் ஆச்சரியம் கொள்கிறார். இது கற்பனையா என ஐயம் அடைகிறார். பிரிட்டிஷ் ஆவணங்களை ஆராய்கிறார். பெரும்பாலான குறிப்புகள் 1870களுக்குப் பின்னால் வந்தவை. அவற்றில் வேலியைப்பற்றிய தகவல்களே இல்லை. லண்டனில் முறையாகப் பராமரிக்கப்படும் பிரிட்டிஷ் ஆவணக்காப்பகங்களில் பொறுமையாகத் தேடுகிறார். ராய் மாக்ஸ்ஹாம் தொழில்முறையாக ஒரு அரிய ஆவணக்காப்பாளர் என்பது அவருக்கு உதவுகிறது. கடைசியில் அந்த வேலிபற்றிய சர்வே தகவல்களும் அதை நிறுவிப் பராமரித்ததைப்பற்றிய கணக்குவழக்குகளும் அவருக்குக் கிடைக்கின்றன.

இந்த வேலியை பிரிட்டிஷ்காரர்களின் ஒரு கிறுக்குத்தனம் என முதலில் நினைக்கும் ராம் மாக்ஸ்ஹாம் மெல்லமெல்ல அதன் பின்னால் உள்ள கொடூரமான சுரண்டலைக் கண்டுகொள்கிறார். மிக விரிவான ஆய்வுகள் வழியாக அதை அவரது இந்தியாவின் மாபெரும் வேலி என்ற பயண நூலில் சித்தரித்துக்காட்டுகிறார்.




இந்த வேலி முழுக்க முழுக்க உள்நாட்டு உப்புவணிகத்தைக் கட்டுப்படுத்தும் நோக்கம் கொண்டது. இது சுங்கவேலி [Customs hedge] என்றே அழைக்கப்பட்டிருக்கிறது. அன்றைய பிரிட்டிஷ் இந்திய அரசின் முக்கியமான வருமானமே அவர்கள் உப்புக்கு போட்ட உள்நாட்டுச் சுங்க வரிதான். அதை வசூலிக்கும் பொருட்டு உள்நாட்டு உப்புப்பரிமாற்றத்தை முழுக்கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவருவதற்காக பிரிட்டிஷார் இந்தியாவில் அவர்கள் வேரூன்றிய 1803 முதல் இதை உருவாக்க ஆரம்பித்தனர். படிப்படியாக இதை நாற்பதாண்டுக்காலத்தில் கட்டி முடித்தார்கள். 1843ல் இந்த வேலி முழுமையடைந்து உள்நாட்டுச் சுங்கத் துறையின் கட்டுப்பாட்டிற்கு வந்தது.

இதைப் புரிந்துகொள்ள முதலில் இந்தியாவின் நில அமைப்பையும் அதில் உப்புக்கு உள்ள இடத்தையும் புரிந்துகொள்ளவேண்டும். இந்தியாவின் வட இந்தியப்பகுதி மிக அகலமானது. கடலை விட்டு மிகவும் தள்ளி இருக்கக்கூடிய பிரம்மாண்டமான நிலப்பகுதிகளைக் கொண்டது. வடகிழக்கு மாநிலங்கள், இமயமலைப் பகுதிகள், மக்கள்

செறிந்த பிகார், உத்தரப்பிரதேசம்,மத்தியப்பிரதேசம் போன்ற பகுதிகள் அனைத்துமே உப்புக்குத் தென்பகுதிக் கடலோரங்களை நம்பி இருந்தன.

உப்பு பெருமளவுக்கு காய்ச்சப்பட்டது குஜராத்தில் கட்ஜ் வளைகுடா பகுதியில். இப்பகுதியில் கடலில் பெரிய ஆறுகள் கலப்பதில்லை. ஆகவே உப்புச்செறிவு அதிகம். வருடத்தில் பெரும்பாலான மாதங்களில் உக்கிரமான வெயிலும் அடிக்கும். சாம்பார் ஏரி போன்ற உப்பு ஏரிகள் கோடைகாலத்தில் தானாகவே வற்றி உப்புவயல்களாக ஆகும். ஆகவே பாரம்பரியமாக குஜராத்தில் இருந்து உப்பு வட மாநிலங்களுக்குச் சென்றது. அதற்காக நீண்ட உப்புப்பாதைகள் இருந்தன. மகாராஷ்டிரா ஒரிசா கடலோரங்களிலும் உப்பு பெருமளவுக்கு விளைந்தது. அவையும் கரைவழியாக வடமாநிலங்களுக்கும் இமய மலைப்பகுதிகளுக்கும் சென்றன.

சரி அப்படியென்றால் எதற்கு காஷ்மீர் வரை வேலி? இன்று பாகிஸ்தானில் இருக்கும் இமயமலைப்பகுதிகளில் உலகின் மிகப்பெரிய உப்புமலைகள் உள்ளன. மிகச்சுத்தமான இந்த உப்பு மிகமிக மலிவானதும்கூட. திபெத் உட்பட இமயமலைப்பகுதிகளுக்கு நூற்றாண்டுகளாக இந்த உப்புதான் சென்றுகொண்டிருந்தது. அதைத் தடுக்கவே அங்கே வேலி அமைக்கப்பட்டது.

உப்பு அவ்வளவு முக்கியமான வணிகப்பொருளா என்ன? ஆம் என்கிறார் ராய் மாக்ஸ்ஹாம். அன்றைய இந்தியாவில் பெரும்பாலான கிராமங்கள் தன்னிறைவு கொண்டவை. மக்களுக்குத் தேவையான தானியங்கள் காய்கறிகள் நெய் போன்ற நுகர்பொருட்கள் துணிகள் ஆயுதங்கள் எல்லாமே கிராமசமூகங்களுக்குள்ளாகவே உற்பத்திசெய்யப்படும். வெளியே இருந்து வந்து சேரக்கூடிய ஒரே உற்பத்திப்பொருள் என்பது உப்புதான். ஆகவே அதுவே அன்றைய இந்தியாவின் மிக முக்கியமான வணிகம்

உப்பு அந்த அளவுக்கு இன்றியமையாததா? இன்று உப்பு ஒரு முக்கியமான தேவையாகக் கருதப்படுவதில்லை. ஏனென்றால் இன்று பதப்படுத்தியும் சேமித்தும் உண்ணப்படும் பல்வேறு உணவுப்பொருட்களில் உப்பு நிறையவே இருக்கிறது. புலாலில் உப்பு உண்டு. ஆனால் அன்றைய இந்தியாவில் விவசாயியின் சாதாரண உணவு தானியமும் காய்கறிகளும் மட்டுமே. அவன் உப்பு சேர்த்துக்கொண்டே ஆகவேண்டும். மேலும் வியர்த்து வழிய வெயிலில் நின்று வேலைசெய்யும் இந்திய விவசாயி பெருமளவு உப்பை இழக்கிறான். அவன் உப்பு இழப்பை அவன் உணவு மூலம் ஈடு கட்டியாகவேண்டும்.

அத்துடன் வட இந்திய நிலங்களில் உப்பு குறைவு. ஆகவே மிருகங்கள் மண்ணைநக்கி உப்பை எடுத்துக்கொள்ளமுடியாது. அவற்றுக்கும் உப்பு கொடுக்கப்பட்டாகவேண்டும்.

வட இந்தியாவின் மக்கள்தொகையை வைத்துப்பார்த்தால் எந்த அளவுக்கு உப்பு தேவைப்படும் என்று பார்க்கலாம். அந்த அளவுக்கான உப்பு எவ்வளவு பெரிய வணிகம்! அந்த உப்பு குஜராத் அல்லது ஒரிசாவில் இருந்து மாட்டுவண்டிகளிலும் கோவேறு கழுதைகளிலும் தலைச்சுமைகளிலுமாக பல ஆயிரம் கிலோமீட்டர் தாண்டி வந்துசேரும்போது அதன் விலை எத்தனை மடங்கு பெருகியிருக்கும் என ஊகிக்கலாம். பிகாரில் ஒரு விவசாயி சராசரியாக ஒரு மாதம் ஈட்டும் வருமானம் ஒரு வருடத்து உப்புச்செலவு என்று பல குறிப்புகளைக் கொண்டு கணித்துச் சொல்கிறார் ராய் மாக்ஸ்ஹாம். மலைப்பகுதி மக்கள் தானியத்துக்குச் செலவழிக்கும் அதே அளவு பணத்தை உப்புக்குச் செலவிட்டிருக்கிறார்கள்!

உப்பு மிகமிக அருமையான பொருளாக இருந்திருக்கிறது. பல இடங்களில் அது நாணயமாகக் கூட புழங்கியது. உப்பு மழைக்காலம் முழுக்க சேமிக்கப்பட்டாகவேண்டும் என்பதனால் உப்பு கைமாற்றாக அளிக்கப்படுவது பெரும் உதவியாக இருந்திருக்கிறது. உப்புமேல் சத்தியம் செய்வது மிக அழுத்தமானதாகக் கருதப்பட்டிருக்கிறது.

உப்பு அத்தனை அவசியப்பொருளா என்ன? ஒருநாளைக்குக் குறைந்தது 1500 முதல் 2500 மில்லிகிராம் சோடியம் மனித உடலுக்குத் தேவை. அதிகமாக உப்பு உடலை விட்டு வெளியேறும் இந்தியா போன்ற கோடைநிலங்களில் வாழும் மனிதனுக்குக் குறைந்தது இரண்டு அவுன்ஸ் உப்பு தேவை என்று ஆய்வுகளை அடிப்படையாகக் கொண்டு குறிப்பிடுகிறார். அந்த உப்பு அவனால் உண்ணப்படாவிட்டால் Hyponatremia என்ற நோய்க்கு அவன் ஆளாகிறான். குழந்தைகள் மிக அதிகமாகப் பாதிக்கப்படுகிறார்கள். உப்புக்குறைவு நோயின் அடிப்படையான கோளாறு என்னவென்றால் உப்புக்குறைவால்தான் அந்நோய் உருவாகிறது என்று நோயாளியோ மருத்துவனோ உணர முடிவதில்லை என்பதே

உப்பு உடலின் திரவச்சமநிலையை தக்கவைத்துக்கொள்ள இன்றியமையாதது. உப்பு குறையும்போது ரத்தம் கனமிழக்கிறது. ஆகவே உடல் நீரை வெளியேற்றுகிறது. ஆகவே ரத்த அழுத்தம் குறைகிறது. நோயாளிக்கு தலைச்சுற்றும் வாந்தியும் சமநிலை இழப்பும் ஏற்படுகிறது.

மூச்சுத்திணறலும் மயக்கமும் உருவாகிறது. இந்நிலை தொடர்ந்தால் மரணம் நிகழ்கிறது. பட்டினியால் வாடிய இந்தியாவில் பெரும்பாலும் உப்புகுறைவு நோய் பட்டினியின் விளைவான பலமிழப்பாகவே கருதப்படுகிறது. ஆகவே அது எளிதாக உயிரைக்குடிக்கிறது

இந்த பிரம்மாண்டமான வணிகத்தை முகலாயர்களும் கட்டுக்குள் வைத்திருந்தார்கள். ஆனால் அவர்களின் வரி மேலோட்டமானது, குறைவானது. ஒட்டுமொத்தமாக உப்புப்பரிமாற்றத்தை கட்டுக்குள் கொண்டுவர அவர்கள் முயலவில்லை. பிரிட்டிஷார் அதை சுங்கவேலி வழியாக சாதித்தார்கள்

ராய் மாக்ஸ்ஹாம் இது உருவான வரலாற்றை சொல்கிறார். ஆரம்பத்தில் பிரிட்டிஷார் வங்காளத்தைத்தான் கைப்பற்றினார்கள். வங்காளத்தில் உப்புக்காய்ச்சுவது மிகக் கடினமானது. கங்கை கொண்டு வந்து கொட்டும் நல்ல நீரின் காரணமாக அங்கே நீரில் உப்பு குறைவு. ஆகவே நீரை வற்றச்செய்து மேலும் விறகால் எரித்து சுண்டச்செய்துதான் உப்பை எடுப்பார்கள். இந்த உப்பு மிக மிகக் கீழான நிலையில் வாழ்ந்த மக்களால் தயாரிக்கப்பட்டது. உப்பின் விலையும் அதிகம்.

இந்த உப்பு காய்ச்சப்பட்டதாகையால் வங்காள பிராமணர்கள் இதை உண்ண மாட்டார்கள். சமைக்கப்பட்ட உணவுக்குச் சமம் அது. ஆகவே சூரிய ஒளியில் சுண்டிய உப்பு ஒரிசாவில் இருந்து வந்தது. பிளாசி போரில் கிளைவ் வங்காள நவாபை வென்று வங்கத்தைப் பிடித்ததும் வங்காளம் முழுக்க விரிவான வரிவசூல் முறையை நிறுவினார். உப்புக் காய்ச்சும் ஆலைகளுக்கு வரியைப் பலமடங்காக ஆக்கினார். அது முக்கியமான வருமானமாக ஆகியது

இந்த உப்பு வரி உப்பின் விலையை அதிகரித்து ஒரிசாவில் இருந்து வரும் உப்பின் விலையை விட அதிகமாகியது. ஆகவே ஒரிசாவில் இருந்து வரும் உப்புக்குக் கடும் வரி போடவேண்டியிருந்தது. அவ்வாறுதான் ஒரிசா வங்க எல்லையில் மகாநதி ஓரமாக முதலில் சுங்கச்சாவடிகளை அமைக்க ஆரம்பித்தார்கள் பிரிட்டிஷார்.ஒரிசாவின் சோனாப்பூர் என்ற ஊரில் முதல் சாவடி அமைந்தது. அதில் இருந்து சந்திரபூர் வரை சுங்கத்தடுப்புக்கோடு உருவாக்கப்பட்டது.

மெல்லமெல்ல பிரிட்டிஷாரின் அதிகாரம் பிகாருக்கும் உத்தரபிரதேசத்துக்கும் மத்தியப்பிரதேசத்துக்கும் பரவியது. ஆகவே சுங்கச்சாவடிகளை பர்ஹான்பூர் வரை நீட்டித்தார்கள். உப்புச் சுங்கத்தின் பெரும் லாபத்தை பிரிட்டிஷார் கண்டுகொண்டார்கள். அதற்காகப் பெரும்பணத்தை முதலீடுசெய்ய முன்வந்தார்கள். மத்தியப்பிரதேசத்தின் விரிந்த பொட்டல்நிலத்தை சுங்கக் கண்காணிப்புக்குள் வைத்திருப்பது கடினமாக இருந்தது. ஆகவே ஒரு பெரிய வேலியை உருவாக்கும் எண்ணம் வந்தது. இவ்வாறுதான் பர்ஹான்பூர் முதல் சுங்க வேலி தோன்றியது.

இதே காலகட்டத்தில் 1823ல் ஆக்ரா சுங்க ஆணையர் ஜார்ஜ் சாண்டர்ஸ் என்பவர் கங்கை யமுனைக்கரையிலூடாக மிர்சாப்பூர் முதல் அலஹாபாத் வரை ஒரு பெரிய வேலியை அமைத்தார். அலஹாபாதில் இருந்து நேப்பாளம் வரையில் அங்கிருந்து சிந்து வரையில் 1834ல் ஜி.எச்.ஸ்மித் ஒரு வேலியை அமைத்தார். தொடந்து சாலைகளில் சுங்கச்சாவடிகளை அமைத்து அந்தச்சாவடிகளை வேலியால் இணைத்துக்கொண்டே சென்றார்கள். இவ்வாறுதான் சுங்கவேலி படிப்படியாக உருவாகிவந்தது.

ஆரம்பத்தில் காய்ந்தமரத்தாலும் மூங்கிலாலும் ஆன வேலியைத்தான் கட்டினார்கள். வேலிக்கு இருபக்கமும் ஆழமான கிடங்கு வெட்டப்பட்டது. ஆனால் அந்த வேலியைப் பாதுகாப்பது கடினமாக இருந்தது. வருடம்தோறும் அது சிதல்பிடித்தும் தீப்பிடித்தும் அழிந்தது. அதற்காக நிறைய பணம்செலவிட வேண்டியிருந்தது. அப்போதுதான் 1867ல் சுங்க ஆணையராகப் பதவிக்கு வந்தார் ஹ்யூம்.மூன்றாண்டுகள் அப்பதவியில் இருந்த அவர் இந்தவேலியைப் பராமரிப்பதற்கான செலவைக் கணக்கிட்டு ஆராய்ந்தார். ஹ்யூம் சுங்கவேலியை உயிர்வேலியாக அமைப்பது ஆரம்பத்தில் செலவேறியதென்றாலும் சில வருடங்களில் பராமரிப்பே தேவையற்ற ஒன்றாக அது ஆகிவிடுமெனக் கண்டுபிடித்தார். மிக எளிதில் உயரமாக வளரும் முள்மரங்களைக் கண்டுபிடித்து அவற்றை நட்டு அந்த உயிர்வேலியை அவர்தான் உருவாக்கினார்.

ஆலன் ஆக்டேவியன் ஹ்யூம் இந்தியாவின் முதல் சுதந்திர எழுச்சியான சிப்பாய்க் கலகத்தை ஒடுக்குவதில் பெரும்பங்காற்றி முக்கியமானவராக ஆனவர். அவரே இந்தியா மீதான பிரிட்டிஷாரின் பிரம்மாண்டமான முதல் சுரண்டலமைப்பைக் கட்டி எழுப்பினார் என்பது மிக ஆச்சரியமான விஷயம்.

ஏனென்றால் அவர் பின்னாளில் இந்திய தத்துவ ஞானத்திலும் ஆன்மீகத்திலும் ஈடுபாடுகொண்டவராக ஆனார். இந்தியர்களுக்கு அதிகமான தன்னுரிமை தேவை என வலியுறுத்தினார். நிர்வாகத்தில் இந்தியர்களுக்கு அதிக இடம் அளிக்கவேண்டுமென வாதாடி அதற்காக ஓர் அமைப்பை உருவாக்க முன்கை எடுத்தார். காந்தியின் தலைமையில் பின்னாளில் இந்தியாவுக்கு சுதந்திரம் பெற்றுத்தந்த காங்கிரஸ் 1885ல் அவ்வாறுதான் உருவானது.

ராய் மாக்ஸ்ஹாம் அளிக்கும் தகவல்கள் நம்மை ஆழமான மனச்சோர்வில் கொண்டுசென்று தள்ளுபவை. முதல் விஷயம் இந்தியாவில் உருவாகிவந்த பிரிட்டிஷ் ஆட்சி அதன் ஆரம்பகட்டம் முதல் உச்சகட்ட ஊழலையே நிர்வாகத்தின் இயல்பான வழிமுறையாகக் கொண்டிருந்தது என்பதை சித்தரித்துக் காட்டுகிறார் ராய் மாக்ஸ்ஹாம். கிளைவ் இந்தியாவை வென்றதே ஊழல் மூலம். சாதாரண அலுவலக குமாஸ்தாவாக இந்தியா வந்த அவர் அந்த ஊழலில் சம்பாதித்த பணத்தால் பிரிட்டனின் முதல் பத்துப் பணக்காரர்களில் ஒருவராக ஆனார். அன்றைய ஒவ்வொரு பிரிட்டிஷ் அதிகாரியும் மிகக்குறுகிய காலகட்டத்தில் உச்சகட்டமாக ஊழல் செய்து பணக்காரர்களாக ஆனார்கள்

அத்துடன் கீழ்மட்டத்தில் ஊழியர்களுக்கு மிகமிகக் குறைந்த ஊதியத்தை அளித்தோ அல்லது ஊதியமே இல்லாமலோ வேலைசெய்ய வைத்தது கம்பெனி. அவர்கள் ஊழல்மூலம் சம்பாதிக்க ஊக்குவித்தது.அதன் மூலம்தான் பல்லாயிரம் இந்தியர்கள் பிரிட்டிஷ் கிழக்கிந்தியக் கம்பெனிக்குப் பணிபுரிய ஆர்வத்துடன் திரண்டு வந்தார்கள். மிகச்சில வருடங்களிலேயே பிரிட்டிஷார் தங்களுக்குரிய அதிகார வர்க்கத்தை இவ்வாறுதான் உருவாக்கிக்கொண்டார்கள். அதாவது இன்றும் நீடிக்கும் நம் அதிகார வர்க்கமானது ஊழலால் ஊழலுக்காகவே உருவாக்கப்பட்ட ஒன்று

இவ்வாறு ஊழலில் அதிகாரிகள் ஈடுபடும்போது அதனால் பாதிக்கப்பட்டவர்கள் எப்போதுமே அடிமட்ட மக்கள்தான். பிரிட்டிஷாரை ஆதரித்த நிலப்பிரபுக்களுக்கு அதிக இழப்பு ஏற்படாமல் எந்த விதமான ஒருங்கிணைப்பு பலமும் இல்லாமல் இருந்த ஏழைகளுக்கே அதிக பாதிப்புவரும் வகையில் வரிகள் போடப்பட்டன. ஆகவேதான் உப்புவரிக்கு இத்தகைய முக்கியத்துவம் வந்தது. சிலர் இன்று எழுதுவதுபோல பிரிட்டிஷ் ஆட்சி அடித்தள, தலித் மக்களுக்கான விடிவாக இருக்கவில்லை. அவர்களை

மிகக்கொடுமையாக ஒடுக்கிப் பேரழிவை நோக்கித் தள்ளக்கூடியதாகவே இருந்தது

பிரிட்டிஷ் ஆட்சியின் விளைவாக இந்தியாவில் உருவான மாபெரும் பஞ்சங்களில் இரண்டாவது பெரும் பஞ்சத்தில் 1876–78 ல் கிட்டத்தட்ட ஆறரைக்கோடிப் பேர் இந்தியாவெங்கும் பட்டினிகிடந்து செத்தார்கள். அதாவது அன்றைய இந்திய மக்கள்தொகையில் கிட்டத்தட்ட கால்வாசி. அதில் 30 லட்சம்பேர் அன்றைய ஒருங்கிணைந்த வங்க மாநிலத்தில் செத்தார்கள்.உலகவரலாற்றின் மாபெரும் பஞ்சம் இதுவே .இது பஞ்சம் என்பதைவிடப் பொருளியல் சுரண்டல் வழியாக நிகழ்ந்த ஒரு மாபெரும் படுகொலை என்பதை இந்நூல் மிக துல்லியமாகச் சித்தரிக்கிறது. வெள்ளையர்களின்தாசர்களான நம் ஆய்வாளர்கள் மழுப்பிச்செல்லும் இந்த இடத்தில் ஒரு ஆங்கிலேய ஆய்வாளர், பிரிட்டிஷ் இந்தியாவில் அதிகாரியாக இருந்த ஒருவரின் பேரன், இந்த அளவுக்குத் திட்டவட்டமாக எழுதியிருப்பதை ஆச்சரியமென்றே கொள்ளவேண்டும்.

பஞ்சத்தை உருவாக்கிய கூறுகள் என்ன? மாபெரும் வங்கப்பஞ்சம் தொடங்குவதற்கு முந்தைய ஆண்டு 1874, 1875களில் வடஇந்தியா முழுக்க மிகச்சிறந்த விளைச்சல் இருந்தது என பிரிட்டிஷ் ஆவணங்கள் சொல்கின்றன என்கிறார் ஆசிரியர். பொதுவாக இந்தியாவில் ஒரு நல்ல விளைச்சல் ஐந்தாண்டுவரை பஞ்சம்தாங்கும் தன்மை கொண்டது, காரணம் சராசரி இந்தியர்களின் நுகர்வு இன்றுபோலவே அன்றும் மிகமிகக் குறைவு. அப்படியானால் எப்படி பஞ்சம் வந்தது?

இந்தியாவில் போடப்பட்ட ரயில்பாதைகளினால்தான். அந்த ரயில்கள் அனைத்துமே மைய நிலங்களைத் துறைமுகங்களுடன் இணைப்பதற்காகப் போடப்பட்டவை. அவற்றின் வழியாக இந்தியாவின் விளைச்சல் முழுக்கத் திரட்டப்பட்டுக் கப்பல்களில் ஏற்றப்பட்டு கொண்டுசெல்லப்பட்டது. உலகமெங்கும் விரிவாக்கப்போர்களில் ஈடுபட்டிருந்த பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் முடிவிலாத உணவுத்தேவைக்காக அவை சென்றன. அதற்கு முன்னர் விளைச்சல்கள் அந்தந்த இடங்களிலேயே சேமிக்கப்படும், பஞ்சங்களில் பயன்படுத்தப்படும். ஆனால் ரயில்பாதை காரணமாக உபரியே இல்லாத நிலை வந்தது.

இரண்டாவதாக, பிரிட்டிஷாரின் இந்த மாபெரும் சுங்கவேலி. அந்த வருடங்களில் பஞ்சாபில் மிகச்சிறந்த விளைச்சல் இருந்தது. ஆந்திரம்

மகாராஷ்டிரம் போன்ற மாநிலங்களில் ஓரளவுக்கு நல்ல விளைச்சல் இருந்தது. அந்த நிலப்பகுதிகளில் இருந்து இந்த வேலி வங்கத்தை முழுமையாகவே துண்டித்துவிட்டது. வங்கத்தில் மக்கள் லட்சகணக்கில் செத்துக்கொண்டிருந்தபோது பம்பாயிலிருந்தும் சென்னையில் இருந்தும் கப்பல்கப்பலாக தானியம் வெளியேறிக்கொண்டிருந்தது

கடைசியாக, ராய் மாக்ஸ்ஹாம் உப்புவரியைச் சொல்கிறார். இந்த பெரும்பஞ்சங்களின்போதுகூட பிரிட்டிஷார் உப்புவரியை நீக்கவில்லை. ஒருங்கிணைந்த வங்கத்திலும் வடகிழக்கிலும் உப்பின் விலை அதிகமாகவே இருந்தது. ஆகவே தானியமே வாங்கமுடியாத மக்கள் உப்பை முழுக்கவே தவிர்த்தார்கள். உப்புக்குறைபாட்டால் கால்நடைகளும் குழந்தைகளும் ஏராளமாக இறந்தார்கள். பின்னாளில் அன்று இறந்தவர்களைப்பற்றிய அறிக்கைகளில் இருந்து பல லட்சம்பேர் உப்புக்குறைபாடு நோயால்தான் இறந்திருக்கிறார்கள் என மருத்துவ நிபுணர்கள் கண்டறிந்தார்கள்.

இவ்வாறு இந்த மாபெரும்வேலி இந்தியாவை ஒரு பிரம்மாண்டமான விலங்கால் கட்டிப்போட்டது. இந்தியாமீதான பிரிட்டிஷ் ஆதிக்கத்துக்கான பொருண்மையான ஆதாரமாக இருந்தது. ஒரு புற்றுநோய்க்கட்டிபோல இந்தியாவின் உயிரைக்குடித்துக்கொண்டிருந்தது இது.

துறைமுகங்களும் ரயில்பாதைகளும் உருவாகி பிரிட்டிஷாருக்கு இந்தியாவின் மீது முழு பொருளியல் கட்டுப்பாடு வந்தபோது எல்லாப் பொருட்களிலும் வரிவிதிக்கமுடிந்தது. ஆகவே உப்புவரி முக்கியத்துவம் இழந்தது. மேலும் தென்னாட்டில் உப்பளங்களின் மீது போடப்பட்ட நேரடி வரிமூலம் சுங்கவேலி அளித்த வருமானத்தை விட அதிகமான வருமானம் வர ஆரம்பித்தது. ஆகவே வைஸ்ராய் லார்ட் லிட்டன் 1879ல் உள்நாட்டு சுங்கவரியை ரத்துசெய்தார். உப்பு மீதான கட்டுப்பாடு நீக்கப்பட்டது. உப்புக்காக உருவாக்கப்பட்ட சுங்கவேலி கைவிடப்பட்டு அழிந்தது.

காந்தியின் உப்புசத்தியாக்கிரகத்தைப்பற்றி நான் நினைவுதெரிந்த நாள் முதலாக வாசித்துக்கொண்டிருக்கிறேன். பலகோணங்களில் அது எழுதப்பட்டிருக்கிறது. இந்தியாவில் எரியும் பிரச்சினைகள் பல இருக்க, ஒடுக்குமுறைச் சட்டங்களே பல இருக்க, உப்புக்காய்ச்சுவதற்கு எதிரான சட்டத்தை மீறும் முடிவை எதற்காக காந்தி எடுத்தார்?

அதற்கான விளக்கமாக இன்றுவரை கொடுக்கப்பட்டுவந்தது இதுதான். ஆங்கிலேயர் கப்பல்களில் இந்தியாவிற்குத் துணிகளை இறக்குமதி செய்தபோது கப்பல்களின் அடித்தளத்தில் எடைக்காக உப்பு நிரப்பிக் கொண்டு வந்தார்கள். அந்த உப்பு விலை அதிகமானது. அதை விற்பதற்கு உள்ளூர் உப்புக்கு வரிபோட்டு விலையை ஏற்ற வேண்டியிருந்தது. காந்தி ஏன் உப்புசத்தியாக்கிரகத்தை முன்னெடுத்தாரென்றால் இந்தியாவின் எல்லா அடித்தள மக்களுக்கும் பாதிப்பை உருவாக்கக்கூடியதாக உப்புவரி இருந்தது.

அது ஓரளவே உண்மை, அதாவது வங்க அளவுக்கு. வங்காளத்தில் உப்பு ஏற்கனவே விலை அதிகம். தீயில் காய்ச்சப்படாத உப்பை வங்க பிராமணர் விரும்பினார்கள். அந்த இடத்தில் இந்த கப்பல் உப்பை பிரிட்டிஷார் விற்றார்கள். அதனுடன் நிகராக இருப்பதற்காக உள்ளூரில் காய்ச்சப்படும் உப்புக்கு அதிக வரி போட்டார்கள். ஆனால் இந்திய அளவில் இது உண்மை அல்ல.

ஒட்டுமொத்தமாக உப்புசத்தியாக்கிரகத்தின் சமூகவியல் உள்ளடக்கம் என்ன என்பதை சரேலெனத் திறந்து காட்டுகின்றன இந்த நூல் அளிக்கும் தகவல்கள். இந்தத் தகவல்கள் எவையும் இன்றுவரை இந்தியச்சூழலில் பேசப்பட்டதில்லை. உப்புசத்தியாக்கிரகம் காந்தியின் ஒரு காரியக்கிறுக்கு என்றே இங்கே சொல்லப்பட்டுவந்தது. மார்க்ஸிய சோஷலிச அறிஞர்கள் உப்புசத்தியாக்கிரகத்தை காந்தி வாழ்ந்த காலம் முதல் இன்றுவரை கிண்டல் செய்து ஏராளமாக எழுதியிருக்கிறார்கள்.

தன் சமகால அரசியல்வாதிகளில் இருந்தும், நம் சமகால 'அறிஞர்களில்' இருந்தும் காந்தி எப்படி உண்மையான வரலாற்றறிவால், விரிவான சமூகப்புரிதலால் அவர்கள் எட்டவே முடியாத அளவுக்கு மேலே நின்றார் என்பதைக் காட்டுகிறது இந்தத் தகவல்புலம். அவர்கள் எவருக்கும் அன்றும் இன்றும் இந்திய வரலாற்றில் உப்பு என்றால் என்ன என்று தெரிந்திருக்கவில்லை. பண்பாட்டிலும் சமூக உளவியலிலும் உப்பு வகிக்கும் இடம் புரிபட்டிருக்கவில்லை.

காரணம், அவர்கள் எவருமே அடித்தள மக்களை அறிந்தவர்கள் இல்லை. அடித்தள மக்களுக்காகப் போராடும்போதுகூட அவர்களின்

தலைவர்களாகவும் வழிகாட்டிகளாகவும் தங்களை நினைத்துக்கொண்டார்களே ஒழிய அவர்களில் ஒருவராக எண்ணிக்கொள்ளவில்லை. உதாரணமாக மார்க்ஸிய முன்னோடி எம்.என்.ராய் உப்பு சத்தியாக்கிரகம் பற்றி எழுதிய நக்கலும் கிண்டலும் நிறைந்த கட்டுரைகளைச் சுட்டிக்காட்டலாம். எம்.என்.ராய் இந்தியாவில் பயணம்செய்து ஏழை இந்தியர்களை அறிந்தவர் அல்ல. காந்தி என்றும் அவர்களில் ஒருவராக இருந்தார். ஆகவே எம்.என்.ராய்க்குத் தென்படாத உண்மையான மக்கள் வரலாறு காந்திக்கு தெரிந்தது.

மிக நுட்பமான ஒரு விஷயத்தை ராய் மாக்ஸ்ஹாம் சுட்டிக்காட்டுகிறார். இந்தியாவில் எப்போதுமே நிலவரி x உப்புவரி என்ற இருமை இருந்திருக்கிறது. நிலவரி நில உடைமையாளர்களை பாதிப்பது, உப்புவரி அடித்தள மக்களைப் பாதிப்பது. பிரிட்டிஷ் அரசு எப்போதுமே உப்புவரியை அதிகரிக்க இந்திய உயர்குடிகளால் கட்டாயப்படுத்தப்பட்டது.

1930 மார்ச் 12ல் உப்புசத்தியாக்கிரகம் ஆரம்பிக்கப்பட்டபோது அடுத்த தலைமுறை கிராமவாசிகளின் நினைவுகளில்கூட முந்தைய உப்பு ஒடுக்குமுறை இல்லாமலாகியது. அப்போது உப்புமீது இருந்த வரி ஒப்புநோக்க மிகச்சிறியதாக இருந்தது. தென் மாநிலங்களில் அது ஒரு பிரச்சினையாகவே இருக்கவில்லை

ஆனால் மொழியிலும் பண்பாட்டிலும் உப்பு ஆழமாக வேரோடியிருந்தது. உப்பு என்ற சொல்லே ஆழமான உணர்வெழுச்சியை உருவாக்கக்கூடியதாக இருந்தது. அதை காந்தி அம்மக்களிடையே மூன்றாம்வகுப்பு ரயில்பெட்டிகளில் பயணம் செய்து வாழ்ந்து அறிந்திருந்தார். அதை கோகலேயோ, திலகரோ, நேருவோ, சுபாஷ்சந்திரபோஸோ, அம்பேத்காரோ அறிந்திருக்கவில்லை. ஆகவே அவர்களால் உப்புசத்தியாக்கிரகத்தை ஒரு தவிர்க்கமுடியாத கிழவரின் கிறுக்குத்தனம் என்று மட்டுமே புரிந்துகொள்ள முடிந்தது. அது நம்பமுடியாத அளவுக்கு விளைவுகளை உருவாக்கியபோது அதற்கு விளக்கமளிக்கவும் முடியவில்லை

காந்தி உப்புசத்தியாக்கிரகத்தை அறிவித்தபோது அவரைச்சுற்றி இருந்த காங்கிரஸ் தலைவர்கள் நிலவரி அல்லது சுங்கவரிக்கு எதிராக போராடலாம் என்று ஆலோசனை சொல்லி வற்புறுத்தியதை ராய் மாக்ஸ்ஹாம் குறிப்பிடுகிறார். காந்தி அதை நிராகரித்தார். அதற்கு அவர் சொன்ன காரணம், உப்புசத்தியாக்கிரகத்தை ஆரம்பிக்கும்படி அவரிடம் சொன்னது

அவரது அந்தராத்மா என்பதுதான். நிலம் உயர்சாதி உயர்குடியின் பிரச்சினை. உப்பு அடித்தள மக்களின், தலித் மக்களின் பிரச்சினை என காந்தி அறிந்திருந்தார். அவரது அந்தராத்மாவை அன்றும் இன்றும் கிண்டல்செய்யும் எந்த அறிஞனை விடவும் அந்த அந்தராத்மாவுக்கு வரலாறு தெரிந்திருந்தது.

இந்தியாவின் கடந்த அறுபதாண்டுக்கால அறிவுலகச் செயல்பாடுகளில் பல்லாயிரம் நூல்களை எழுதித்தள்ளிய நம் சமூகவியல் பேராசிரியர்களின் ஆய்வுகளின் அடித்தளமின்மையை அதிர்ச்சியளிக்கும்படி அம்பலப்படுத்துகிறது இந்நூல். 1996ல், இந்தியா சுதந்திரம் பெற்று கிட்டத்த அரைநூற்றாண்டு கழித்து, உப்புசத்தியாக்கிரகம் நிகழ்ந்து முக்கால்நூற்றாண்டு கழித்து, இந்தியா வரும் ராய் மாக்ஸ்ஹாம் இங்குள்ள வரலாற்று அறிஞர்களை ,சமூக ஆய்வாளர்களை, அரசியல் விமர்சகர்களை சந்தித்து இந்த வேலிபற்றிக் கேட்கிறார். எவருக்கும் எந்த அறிதலும் இல்லை என்பதைக் கண்டு ஆச்சரியமடைகிறார்.

எப்படி இருந்திருக்கும்? இங்கே நம் கல்விப்புலம் சார்ந்து ஆராய்ச்சி செய்பவர்களுக்கு மட்டுமே பயணங்கள்செய்யவும் ஆவணங்களை ஆராயவும் வசதி உள்ளது. அவர்களுக்கு மேலைநாட்டு ஆய்வுகளை மேற்கோள் காட்டுவது மட்டுமே உண்மையான நவீன ஆய்வு என்ற ஆழமான நம்பிக்கை இருக்கிறது. ஓரளவு முறைமையுடன் ஆராய்பவர்கள் மேலைநாட்டுப் பல்கலைகளில் ஆய்வுப்பட்டம் பெற்றவர்கள். அவர்கள் அனேகமாக அனைவருமே இந்தியா என்ற பிற்பட்ட நிலப்பரப்பை நவீன தேசமாகக் கட்டியவர்கள் ஆங்கிலேயர் என்ற கொள்கையைக் கிட்டதட்ட மதநம்பிக்கை போலப் பெற்றுக்கொண்டுதான் இங்கே வருகிறார்கள்.

ராய் மாக்ஸ்ஹாமின் நூல் மிகசுவாரசியமான வாசிப்புத்தன்மை கொண்டது. உண்மையில் இது ஒரு பயணநூல். சுங்கவேலியைத் தேடி இந்தியாவுக்கு வரும் ராய் மாக்ஸ்ஹாம் அதன் எச்சங்களைத் தேடி இந்தியாவுக்குள் பயணம்செய்கிறார். எருமையின் மூச்சு பிடரியில் பட யமுனைக்கரை கிராமத்தின் கயிற்றுக்கட்டிலில் படுத்துத் தூங்குகிறார். முன்பதிவில்லா ரயில் பெட்டிகளில் பிதுங்கி வழிந்து பயணம் செய்கிறார். ஓம்காரேஸ்வரிலும் காசியிலும் வேலியைக் காட்டித்தரும்படி சிவபெருமானிடம் வேண்டிக்கொள்கிறார். அது கொஞ்சம் அதிகமோ என எண்ணித் தன் குடும்பத்தைக் காக்கும்படி வேண்டிக்கொள்கிறார்.

பல விஷயங்கள் புன்னகை வரவழைக்கின்றன. ராய் மாக்ஸ்ஹாம் இந்தியாவில் முதல்வகுப்பு கூபேயில் பயணம்செய்பவர்களே நாகரீகமற்ற அகங்காரம்கொண்ட மக்கள் என நினைக்கிறார். செல்பேசியில் கத்திக்கொண்டே இருக்கிறார்கள். வெளியே வேடிக்கை பார்க்கவும் முடிவதில்லை. இரண்டாம் வகுப்பில் நட்பான சுமுகமான சூழல் உள்ளது, என் அனுபவமும் அதுவே. அவரது பயணப்பதிவுகளில் உள்ள மெல்லிய வேடிக்கை இந்நூலை சுவாரசியமான அனுபவமாக ஆக்குகிறது.

ராய் மாக்ஸ்ஹாம் கடைசியில் சம்பலில் அந்த வேலியின் எஞ்சிய பகுதியயைக் கண்டுகொள்கிறார். முன்னாள் கொள்ளையரும் இந்நாள் அனுமார்கோயில் பூசாரியுமான ஒருவரின் உதவியால். பிற எல்லா இடங்களிலும் நவீனமயமாக்கல் வேலியை அழித்துவிட்டது. அதற்குக் காரணம் மிக எளிது. இந்த வேலியை ஒட்டியே பெரும்பாலும் சாலைகள் உருவாகி வந்தன. சாலைகள் விரிந்து வேலியை விழுங்கிவிட்டன.

நம்மை நாமே ஆராயத்தூண்டும் முக்கியமான நூல் இது. சுங்கவேலி நம் முதுகின் ஒரு சாட்டைத்தழும்பு. அது மறைந்தாலும் நம் மொழியில் கனவில் மிஞ்சியிருக்கிறது.

**********